Sri Rama Jeyam

ச

# வரலாறு

## தரம் 11




ஆக்கியோன்

**R.S. சந்திரன்**

யா / மானிப்பாய் இந்துக் கல்லூரி (வருகை ஆசிரியர்)

மீள்பார்வை

**S. ஜெயகுமார்**

கண்டி /கலைமகள் மத்திய கல்லூரி, தெல்தோட்ட.

முக்கியமான கருப்பொருட்கள் எவற்றையுமே தவறவிடாது ஒழுங்காக வரிசைப்படுத்தித் தந்திருப்பது ஆசிரியரின் பொறுமையையும், ஊக்கத்தையும், விடயங்கள் பற்றிய தேடல் பற்றிய பேரார்வத்தினையும் இந்நூலின் மூலமாக வெளிப்படுத்தி நிற்கின்றது. இதனை விட ஜப்பானைப் பற்றிய வரலாறும் அவ்வாறே இந்நூலில் முக்கியமான கருப்பொருட்கள் எவற்றையும் தவறவிடாது கொடுத்திருப்பது மாணவர்களின் நற்பாக்கியமே என்று குறிப்பிடலாம். ஜேர்மனி, இத்தாலி, அமெரிக்கா பற்றிய நவீனகால வரலாறும் அவ்வாறே இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளது.

எனவே ஒட்டுமொத்தத்தில் செம்மையான அதேநேரத்தில் இரத்தினச் சுருக்கமான ஒரு வரலாற்று நூலை திரு ***R.S.*** சந்திரன் அவர்கள் நவீனகால வரலாறு தொடர்பாக எமக்குத்தந்திருப்பது அவரது ஆசிரிய வாண்மையை எமது தமிழ் சமுதாயத்திற்கு எடுத்துக் காட்டுவதாக உள்ளது. அவரது முயற்சி தொடரட்டும் என்றும், எமது சமுதாயம் இவரால் பயனடையட்டும் என்றும் வாழ்த்தி, இறைவன் அவருக்கு நீண்ட ஆயுளையும் அருளவேண்டுமென்றும் பிரார்த்தித்துக்கொண்டு, இந்த அணிந்துரையை நிறைவு செய்கிறேன்.

நன்றி வணக்கம்.

**பேராசிரியர். செல்லையா கிருஷ்ணராசா,**
வரலாற்றுத்துறை,
யாழ்ப்பாண பல்கலைக்கழகம்,
திருநெல்வேலி.

# அணிந்துரை

வரலாறு கற்கும் க.பொ.த. (சா.த.) மாணவர்களுக்கான வரலாற்று நூலை மாணவர் தேவை கருதி ஒழுங்கமைந்த வகையில் இந்நூல் எழுதப் பட்டுள்ளது. பாடப் புத்தகங்களுக்கு மேலதிகமாக ஒரு உசாத்துணை நூலாக இப்புத்தகம் மாணவர்களால் பயன்படுத்தப்படலாம்.

ஒரு குறிப்பிட்ட காலம் வரலாறு கற்றல், கற்பித்தல் செயற்பாடானது முக்கியத்துவம் அளிக்கப்படாது இருந்து மீண்டும் வரலாற்றுப் பாடம் கட்டாய பாடமாக்கப்பட்டுள்ள இக்கால கட்டத்தில் ஆசிரியர்கள் மாணவர்கள் எதிர் நோக்கும் கற்றல், கற்பித்தல் இடர்பாடுகளைக் களைவதில் இந்நூல் மிக்க பிரயோசமானதாக அமையுமென நம்பலாம்.

நவீன கால வரலாற்றினை மிக ஒழுங்கமைந்த முறையில் க.பொ.த. (சா.த.) மாணவர்களுக்கு ஏற்ற முறையில் வடிவமைத்துள்ள ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கதாகும். மிகக் குறுகிய காலத்தில் நான்காவது பதிப்பினை வெளியிடுவது இந்நூலுக்குக் கிடைக்கும் அங்கீகராத்தினை வெளிப்படுத்துவதாகும். இந்நூல் ஆசிரியர் திரு. **R.S.** சந்திரன் அவர்களின் முயற்சியையும் அவர் இக்கல்வி உலகிற்கு அளிக்கும் காத்திரமான பங்களிப்புக்கும் எனது பாராட்டுக்களை தெரிவிக்கும் அதே வேளை இது போன்ற முயற்சிகளில் அவர் மென்மேலும் ஈடுபட்டு வெற்றிபெற வாழ்த்து கின்றேன்.

நன்றி வணக்கம்.

ச. சிவநேஸ்வரன்
அதிபர்,
யா/ மானிப்பாய் இந்துக் கல்லூரி.

# முன்னுரை

வரலாறு என்னும் பாடமானது இலங்கையின் கல்விக் கலைத் திட்டத்தினுள் மீண்டும் புதிய பரிணாமத்தில் 2007 முதல் அறிமுகப் படுத்தப்பட்டு அதன் தொடர்ச்சியாக 2008ல் தரம் 11 ற்கும் புகுத்தப்பட்டுள்ளது. மாணவர்கள் தேர்ச்சிமைய கற்றலின் அடிப்படையில் சுயமாக விளங்கிக் கற்பதற்கு உறுதுணை புரியும் வகையில் வினா - விடை அமைப்பு வடிவில் இந்நூல் வெளியீடாகின்றது.

தரம் - 11 ற்குரிய பாடத்திட்ட விடயங்களை அடியொற்றி க.பொ.த. (சா/த)ப் பரீட்சைக்கு தோற்றும் மாணவர்களை இலகுவில் பயிற்றுவிக்கும் நோக்கில் இந்நூல் எழுதப்பட்டிருப்பினும் க.பொ.த. (உ/த) த்தில் வரலாற்றை ஒரு பாடமாகக் கற்கும் மாணவர்களுக்கு ஒரு கைநூலாக அமையுமென எதிர்பார்க்கின்றேன். மேலும் கற்றல் குறிக்கோள்கள் எந்த வகையில் நிறைவேற்றப்பட்டுள்ளன என்பதை ஆசிரியர்கள் அறிந்து கொள்வதற்கும் மாணவர்கள் தமது அடைவு மட்டங்களை இனங் காண்பதற்கும் இந்நூல் துணையாக அமையும் என்ற நம்பிக்கை உண்டு. அத்துடன் சில பாட அலகுகள் வரலாற்று ரீதியான தொடர்பைப் பேணும் பொருட்டு விரிவாக எழுதப்பட்டிருப் பதையும் மாணவர்கள் கவனத்திற் கொள்ளவும்.

இந்நூலை எழுதுவதற்கு பல்வேறு வகைகளிலும் அன்புடன் ஆலோசனைகளையும், உதவிகளையும் வழங்கிய யாழ். பல்கலைக்கழக வரலாற்றுத்துறை சார்ந்த பேராசிரியர் ச. சத்தியசீலன் , பேராசிரியர் செ. கிருஷ்ணராசா ஆகியோருக்கும், அரசறிவியற்துறை சார்ந்த சிரேஷ்ட விரிவுரையாளர் கே.ரீ. கணேசலிங்கம் அவர்களுக்கும் இந்நூல் தொடர்பாக அவ்வப்போது ஆலோசனைகளை வழங்கிய அதேவேளை நூலினை மீள்பார்வை செய்த மதிப்புக்குரிய ஆசிரியர் ச.ஜெயகுமார் அவர்களுக்கும் என் சக ஆசிரியர்கள் அனைவருக்கும் நன்றிகள். இறுதியாக இந்நூலுக்கான அணிந்துரையை வழங்கி இந்நூலைக் கௌரவித்த மதிப்புக்குரிய பேராசிரியர் செ. கிருஷ்ணராசா அவர்களுக்கும், நான்காம் பதிப்பிற்கு அணிந்துரை வழங்கிய மானிப்பாய் இந்துக் கல்லூரி அதிபர் ச. சிவநேஸ்வரன் அவர்களுக்கும் நான் கடமைப்பட்டுள்ளளேன்.

இந்நூலைக் குறுகிய காலத்தில் அழகுற கணனிப் பதிப்பு செய்து தந்த லக்ஷா கணனிப் பதிப்பகத்தினருக்கும் , அச்சுப் பதிப்புச் செய்து தந்த பண்டத்தரிப்பு J. S. பிறிண்டேர்ஸ் நிறுவனத்திற்கும் எனது நன்றிகள்.

முடிவாக நான் எதிர்பார்த்ததற்கு மேலாகவே இந்நூலுக்குக் கல்விச் சமூகத்திடமிருந்து கிடைத்த வரவேற்பினாலேயே மிகக் குறுகிய காலத்தினுள் நான்காவது பதிப்பினையும் வெளியிடுகின்றேன். இந்நூலுக்கும் கல்விச் சமூகத்தின் வரவேற்புக் கிடைக்கும் என எதிர்பார்க்கின்றேன்.

''ஞானதீபம்''
பத்திரகாளி கோவிலடி,
சுழிபுரம்,
யாழ்ப்பாணம்.

*R.S.* சந்திரன்



# பொருளடக்கம்













# இலங்கையில் பிரித்தானியர் ஆட்சி நிறுவப்படல் 1

## 1. பிரித்தானியர் கீழைத்தேசங்களுக்கு வருகை :- முக்கிய அம்சங்கள்

i) 17ம் நூற்றாண்டளவில் வர்த்தகத்தில் இலாபம் ஈட்டிவந்த ஒல்லாந்தரை ஒதுக்கிவிட்டு 18ம் நூற்றாண்டளவில் கீழைத்தேச வர்த்தகத்தின் ஆதிக்கத்தை ஆங்கிலேயர் கைப்பற்றிக் கொண்டனர்.

ii) கீழைத்தேச வர்த்தகத்திற்கான உரிமையை **1ம் எலிசபத் மகாராணி** வர்த்தக கம்பனிக்கு வழங்கினார்.

iii) 1600ம் ஆண்டளவில் இந்தியாவை அடைந்த பிரித்தானியர்கள் மோகல் பேரரசின் (அக்பர்) அனுமதியோடு கிழக்கிந்திய வர்த்தக கம்பனியை நிறுவினர்.

iv) பின்னர் 1625ல் சூரத், திருவாங்கூர், மசூலிபடம் ஆகிய இடங்களிலும் 1639ல் சென்னையிலும், 1661ல் பம்பாயிலும், 1690ல் கல்கத்தாவிலும் வர்த்தக நிலையங்களை நிறுவினர்.

v) மற்றொரு ஐரோப்பிய இனத்தவரான பிரான்சியரும் வர்த்தக நோக்கில் 1660ம் ஆண்டளவில் இந்தியாவை அடைந்தனர். இவர்கள் "கிழக் கிந்திய பிரான்சிய வர்த்தக்கம்பனி" எனும் பெயரில் ஆங்கிலேயருடன் வர்த்தகத்தில் போட்டியிட்டனர்.








vi) பிரான்சியர்கள் ஆளுநர் டுப்ளேயின் வழிகாட்டலில் 1664இல் புதுச்சேரி, சந்திரநகர், கரிகால்பட்டனம் ஆகிய இடங்களில் வர்த்தக கம்பனிகளை நிறுவிக்கொண்டனர்.

vii) கீழைத்தேச வர்த்தக ஆதிக்கத்தை நிலைநாட்ட பிரித்தானியர் முயன்ற போது இந்தியாவில் பிரான்சியருடன் யுத்தம் ஏற்பட்டது. இந்நிலையில் பிரித்தானியரின் கவனம் திருகோணமலைத் துறைமுகம்மீது சென்றது.

**2. பிரித்தானியரது கவனம் இலங்கைமீது ஏற்பட்டமைக்குரிய காரணங்கள்**

**i) கேந்திர நிலைய முக்கியத்துவம்**

- இந்து சமுத்திரக் கப்பல் பாதையின் மத்தியில் இலங்கை அமைந்திருந்தமை.
- தென்மேல், வடகீழ் பருவக்காற்று காலங்களில் பாதுகாப்பாகக் கப்பல்களை நிறுத்தி வைக்கக்கூடிய திருகோணமலைத் துறைமுகம் இலங்கையில் அமைந்திருந்தமை.
- இந்தியாவின் மேற்குக்கரை, கிழக்குக் கரைகளில் கடற்படை, வியாபார நடவடிக்கைகளை இலங்கையிலிருந்து இலகுவாக நிர்வகிக்கக் கூடியதாக இருந்தமை.
- இந்தியாவில் ஆட்சியை அமைத்துக் கொள்வதில் பிரான்சியருடனான போட்டியிலிருந்து இந்து சமுத்திரக் கடலாதிக்கத்தைத் தமதாக்கிக் கொள்வதற்கு திருகோணமலைத் துறைமுகம் அவசியமாக அமைந்திருந்தமை.

**ii) வர்த்தகத்தின் முக்கியத்துவம்**

- ஐரோப்பாவுக்குக் கொண்டு செல்லப்பட்ட கறுவாவில் இலங்கைக் கறுவாவுக்கு இருந்த மதிப்பு.
- போர்த்துக்கேயரும் ஒல்லாந்தரும் இலங்கையில் கறுவா வியாபாரம் மூலம் பெற்ற இலாபத்தை ஆங்கிலேயர் தமது வசமாக்கிக் கொள்ளல்.
- மிளகு, ஏலம், கராம்பு, முத்து, மாணிக்கம், யானைத்தந்தம் போன்ற வர்த்தகப் பொருட்கள் இலங்கையில் கிடைக்கப் பெற்றமை.

**3. திருகோணமலைத் துறைமுகத்தின் முக்கியத்துவங்கள் வருமாறு**



i) இயற்கைத் துறைமுகமாகக் காணப்பட்டது.

ii) ஒரே நேரத்தில் ஏராளமான கப்பல்களை நிறுத்தி வைக்க முடிகின்றமை.

iii) பருவக்காற்று காலங்களில் பாதுகாப்பாக கப்பல்களை நிறுத்தி வைக்க முடிகின்றமை.

iv) இந்தியாவின் மேற்கு, கிழக்கு கரையோர கப்பற்துறை, வர்த்தகத் துறை நடவடிக்கையை நிர்வகிக்க பயனுடைய நிலையமாக இருந்தமை.

## 4. பிரித்தானியருடன் மலையக மன்னன் தொடர்புகொள்ளல்.

i) ஒல்லாந்தரை கரையோரத்திலிருந்து துரத்துவதற்கு மலையகமன்னன் கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கன் பிரித்தானிய கிழக்கிந்திய வர்த்தக கம்பனியிடம் உதவி கோரினான்.

ii) 1762ல் ஜோன் பைபஸ் தலைமையிலும், 1782ல் ஹியுபொயிட் தலைமையிலும் தூதுக்குழுக்கள் மன்னனை சந்தித்தபோதிலும் பயன் எதுவும் கிடைக்கவில்லை.

iii) 1795ல் பிரித்தானிய நிர்வாக அதிகாரியான "ரொபட் அண்ட்ரூஸ்" இராசாதி ராஜசிங்கனைச் சந்தித்தல்.

iv) 1800ல் மெக்டோவல் தளபதியின் கீழ் கண்டிக்குப் படையொன்றை அனுப்பி மன்னன் ஸ்ரீ விக்கிரம இராசசிங்கனுடன் ஒப்பந்தம் செய்ய ஆளுநர் பிரெட்றிக் நோர்த் எத்தனித்தமை.

## 5. கீக் கடிதம்:- முக்கிய அம்சங்கள்.

i) 1789ல் இடம்பெற்ற பிரான்சியப் புரட்சியைத் தொடர்ந்து ஒல்லாந்து பிரான்சியரால் ஆக்கிரமிக்கப்பட்டு அங்கே "பட்டேவியக் குடியரசு" என்னும் புதிய அரசாங்கம் ஒன்று உருவாக்கப்பட்டது. இதனால் ஒல்லாந்து இளவரசன் 2ம் ஓரேஞ் வில்லியம் (ஸ்டாட் ஹோல்ட்) பாதுகாப்புக் கருதி இங்கிலாந்திற்குத் தப்பி ஓடினான்.

ii) ஒல்லாந்தரின் கீழைத்தேச பிரதேசங்களையும் பிரான்சியர்கள் கைப்பற்றுவார்கள் என அஞ்சிய வில்லியம் ஸ்டாட் ஹோல்ட் அப்பிரதேசங்களை பிரித்தானியரிடம் ஒப்படைக்கும்படி கீழைத்தேச ஆளுநர்களுக்கு 1795 பெப்ரவரி 7ம் திகதி கடிதம் மூலம் அறிவித்தான்.

iii) இக்கடிதத்தை பிரித்தானியாவிலுள்ள கீயூ மாளிகையிலிருந்து வில்லியம் எழுதியதால் "கீயூக் கடிதம்" என்பர்.

## 6. பிரித்தானியர் இலங்கையின் கரையோரப் பிரதேசங்களை கைப்பற்றுதல்.

- கீயூக் கடிதத்தின் விபரத்தை கரையோரப் பகுதிக்கு பொறுப்பாக இருந்த ஒல்லாந்த ஆளுநர் "பன் ஏங்கல் பெக்" ஏற்க மறுத்தான்.
- இதனால் ஆத்திரமடைந்த பிரித்தானியர்கள் 1795 ஆகஸ்ட் மாதத்தில் **திருகோணமலையையும்** தொடர்ந்து **யாழ்ப்பாணம், மன்னார், கற்பிட்டி** பகுதிகளையும் 1796 ஜனவரியில் **நீர்கொழும்பு, காலியையும்** 1796 பெப்ரவரி 16ல் **கொழும்பையும்** கைப்பற்றிக் கொண்டனர்.
- 1796 பெப்ரவரி 16இல் ஒல்லாந்து தேசாதிபதி "பன் ஏங்கல் பெக்" ஒல்லாந்தருக்குச் சொந்தமான இலங்கையின் கரையோரப் பிரதேசங்களை ஆங்கிலக் கிழக்கிந்திய வர்த்தக கம்பனியிடம் ஒப்படைக்கும் ஒப்பந்தத்தில் கைச்சாத்திட்டார்.

## 7. கரையோரப் பிரதேசங்களில் பிரித்தானியர்கள் மேற்கொண்ட ஆட்சி

- மூன்று சந்தர்ப்பங்களில் வெவ்வேறு முறையைக் கடைப்பிடித்தனர்.

  i) ஆங்கில கிழக்கிந்திய வர்த்தகக் கம்பனியின் ஆட்சி. (1796 - 1798)

ii) இரட்டை ஆட்சி (1798 - 1802)

iii) முடிக்குரிய ஆட்சி (1802)



**1796ல் பிரித்தானியரின் ஆட்சிக்குட்பட்ட பிரதேசங்கள்**

## ௧. பிரித்தானிய கிழக்கிந்திய வர்த்தக கம்பனியின் ஆட்சி (1796-1798)

i) இலங்கையின் கரையோரப்பகுதிகளை சென்னையில் உள்ள பிரித்தானிய கிழக்கிந்திய வர்த்தகக் கம்பனி நிர்வகித்த காலப் பகுதியே பிரித்தானிய கிழக்கிந்திய வர்த்தக கம்பனியினரது ஆட்சி (சென்னை ஆட்சி) என்பர்.

ii) கரையோரப் பிரதேசங்களை மூன்று நிர்வாக அலகுகளாகப் பிரித்து ஆட்சியை மேற்கொண்டனர். அப்பிரதேச நிர்வாகியின் அலுவலகம் கச்சேரி எனப்பட்டது.

iii) மூன்று நிர்வாக அலகுகளும் வருமாறு.

1. யாழ்ப்பாணத்துடன் மன்னார், கற்பிட்டி
2. திருகோணமலையுடன் மட்டக்களப்பு, முல்லைத்தீவு

3. கொழும்பு பிரிவு : சிலாபம் தொடக்கம் மாத்தளை வரை.

iv) வரி அறவிடுவதற்காகச் சென்னையிலிருந்து "அவுமில்தார்" எனப் படும் அதிகாரிகள் வரவழைக்கப்பட்டனர்.

v) 1797இல் கரையோர மக்கள் வர்த்தக சங்கத்தின் ஆட்சியை எதிர்த்து கிளர்ச்சியில் ஈடுபட்டனர்.

**9. ஆங்கில கிழக்கிந்தியக் கம்பனியினருக்கு எதிரான கிளர்ச்சிக்கான காரணங்கள் (1797)**

i) பல புதிய வரிகளை அறவிட்டமை.
**உ+ம் :-** தென்னை வரி (உடனடிக் காரணமாகியது),
சாராய வரி, மீன்வரி, உப்புவரி, கள்வரி.

ii) வரிகளை அறவிடுவதற்கு முன்னர் முதலியார், முகாந்திரம் போன்ற உள்நாட்டவர்கள் காணப்பட்டனர். அவர்களை நீக்கிவிட்டு அவுமில் தார் எனும் அலுவலர்கள் குழு நியமிக்கப்பட்டமை *(றொபேட்அன்ரூஸ் வரிகளை அறவிடுவதற்கு பொறுப்பதிகாரியாகவும் யோன் யேர்விஸ் உதவி அதிகாரியாகவும் நியமிக்கப்பட்டனர்).*

ii) வரிகளை பணமாக மட்டும்தான் செலுத்த வேண்டியிருந்தமை.

iv) வரிசேகரிக்கும் உரிமையைப் பெற்றிருந்த அவுமில்தார்கள் ஏலவிற்பனை முறையை கையாண்டமை.

v) குறித்த தவணையில் வரியினை செலுத்தாதோர் தண்டிக்கப்பட்டமை.

vi) மக்களின் வரிசம்பந்தமான குற்றச்சாட்டுகளுக்கு நிவாரணம் கிடைக் காமை.

**10. கிழக்கிந்திய வர்த்தக கம்பனியினரால் கிளர்ச்சியை அடக்கமுடியாது போனமைக்கான காரணங்கள்.**

- 1797ல் ஆரம்பித்த கிளர்ச்சி 1798 மார்ச் வரைக்கும் நடைபெற்றது.

i) கிளர்ச்சிக்காரர்கள் கொரில்லா போர் முறையை கையாண்டமை.

ii) ஓர் இடத்தில் கிளர்ச்சி அடக்கப்பட மற்றுமோர் இடத்தில் கிளர்ச்சி ஆரம்பித்தமை.

iii) போக்குவரத்து வசதிகள் குறைவாக இருந்தமை.

**11. கேணல் டி.மி!ரன் குழு**

- கிளர்ச்சிக்கான காரணங்களை அறிவதற்காக மியூரன் தலைமையில் மூவரைக் கொண்ட குழு இலங்கை வந்தது.
- **மி!ரனின் சிபார்சுகள் வருமாறு.**

i) தென்னை வரி முதலிய புதிய வரிகள் நீக்கப்பட்டமை.

ii) ஏல விற்பனை முறையில் காணப்பட்ட வரிமுறைமை நீக்கப்பட்டமை.

iii) வரிகளை அறவிடுவதற்கு பொறுப்பாயிருந்த சென்னை அலுவலகர்கள் நீக்கப்பட்டு உள்நாட்டவர்கள் நியமிக்கப்பட்டமை.

iv) பணத்தின் மூலமே வரிகள் செலுத்தப்பட வேண்டும் என்ற நிபந்தனை அகற்றப்பட்டு, முன்பு போலவே பொருட்கள் மூலம் செலுத்தும் முறைக்கு இடமளிக்கப்பட்டது.

v) ஒல்லாந்தரின் நீதிமன்ற முறை மீண்டும் நடைமுறைப்படுத்தப்பட்டமை.

- **கிளர்ச்சியை கட்டுப்படுத்துவதற்காக டி.மிரன் குழு மக்களுக்கு பின்வருமாறு அறிவித்தலை கொடுத்தது.**

''இந்நாட்டு மக்களின் நன்மைக்கும் சந்தோஷத்திற்குமாக ஆங்கிலத் தேசாதிபதி இந்நாட்டில் பண்டைக்காலந் தொட்டு வழங்கிவந்த முறைகளை மீண்டும் அனுசரித்து நடப்பாரென்றும் நிலங்களின் சொந்தக் காரர் அரசாங்கத்திற்கு சேவை புரிவதல்லாது நிலங்களுக்காக வரிசெலுத்த வேண்டியதில்லை என்றும் முதலிமார்களுக்கும் மற்றும் சிங்கள உத்தி யோகத்தர்களுக்கும் பழையபடி தங்களுடைய கடமைகளைச் செய்வதற்கு அனுமதியளிக்கப்படுவார்கள்.''

## 12. இரட்டை ஆட்சி (1798-1802)

- இலங்கையின் கரையோரப் பிரதேசங்களை பிரித்தானிய முடியின் பிரதிநிதியும், கிழக்கிந்திய வர்த்தக கம்பனியும் ஒருங்கே இணைந்து ஆட்சி புரிந்ததை **இரட்டை ஆட்சி** என்பர்.
- இரட்டையாட்சி முறையில் முடியின் பிரதிநிதியாக ஆளுநர் "பிரடெரிக் நோர்த்" விளங்கினார்.
- இங்கு வருமானங்கள் வசூலித்தல் வியாபார நடவடிக்கைகளில் ஈடுபடுதல் போன்றவை வர்த்தக கம்பனியிடம் ஒப்படைக்கப்பட்டது. பிரித்தானிய முடியின் பிரதிநிதி நீதி, நிர்வாக, இராணுவ அதிகாரம், அரசாங்க நிர்வாகம் அனைத்துக்கும் பொறுப்பாக இருந்தார்.

## 13. இரட்டை ஆட்சி முறை ஏற்படக்காரணங்கள்.

i) பிரான்சின் நெப்போலியன் பொனபார்ட் இந்து சமுத்திரத்தை அண்டிய பிரதேசங்களில் ஆதிக்கம் பெறுவதைத் தடுக்க பிரித்தானிய முடி எண்ணியமை.

ii) சென்னை நிர்வாகத்தின் பலவீனங்களைப் பிரித்தானிய முடி புரிந்து கொண்டமை.

iii) 1797ல் கரையோர மக்களின் கிளர்ச்சி.

## 14. இரட்டை ஆட்சிமுறை தோல்வியடைந்தமைக்குரிய காரணங்கள்.

i) பிரித்தானிய முடியினுடைய ஆளுநரின் அலுவலர்களுக்கும் கிழக் கிந்திய வர்த்தக கம்பனியின் அலுவலர்களுக்கும் இடையே நல்லுறவு காணப்படாமை.

ii) கம்பனியின் அலுவலர்கள் முடியுமானளவில் இலாபத்தினை ஈட்டிக் கொள்வதற்காக கபடமான முறைகளை கையாண்டமை.

iii) இந்நாட்டு முறைகள் பற்றிய விளக்கமற்றிருந்த அரசாங்க அலு வலர்கள் திறமையற்றவர்களாக இருந்தமை.

## 15. இலங்கை பிரித்தானிய முடியின்கீழ் வருதல்

- பிரான்சியப் புரட்சியுடன் ஆரம்பமான ஐரோப்பிய யுத்தம் முடிவடைந்து 1802இல் ஏமியன்ஸ் **சமாதான ஒப்பந்தம்** கைச்சாத்திடப்பட்டது.

- யுத்த காலத்தில் ஒல்லாந்தரிடமிருந்து கையேற்ற பிரதேசங்களை யுத்தமுடிவில் அவர்களிடம் மீண்டும் கையளிக்க வேண்டி நேரலாம் என்ற அச்சம் விலகவே கரையோரப் பிரதேசங்கள் 1802இல் பிரித் தானிய முடியின்கீழ் கொண்டு வரப்பட்டது.

## 16. ஆளுநர் பிரடெரிக் நோர்த் (1798 -1805)



பிரடெரிக் நோர்த்

i) இலங்கையில் கடமையாற்றிய முதலாவது பிரித்தானிய முடியின் ஆளுநர் ஆவார்.

ii) கரையோரப்பகுதிகளின் நிர்வாகத்தினை வலுப்படுத்தவதற்காக 1803ல் கண்டிமீது படையெடுத்து தோல்வி கண்டார்.

iii) நிர்வாக ரீதியில் மாற்றங்களை கொண்டு வந்தார்.
- இராஜகாரிய முறையை நடைமுறை யிலிருந்து நீக்கினார்.
- பல அரச திணைக்களங்களை உரு வாக்கினார்.

  **உ+ம் :-** தபால்திணைக்களம், நிலஅளவைத் திணைக்களம்.

iv) நீதி பரிபாலத்தினை விருத்தி செய்தல்.
- சட்டத்துறையில் திருத்தங்களை மேற்கொண்டார்.
- இலங்கையின் சட்டத்தொகுப்பை வெளியிட்டார்
- பல நீதிமன்றங்களை உருவாக்கினார்.

  **உ+ம் :-** கிரிமினல் நீதிமன்றம், உயர் நீதிமன்றம்

v) சுகாதார வசதிகளை ஏற்படுத்தினர்.

  **உ+ம் :-** வைத்தியசாலைகளை அமைத்தல், அம்மைத் தடுப்பு மருந்து வழங்கல்.

## 17. கண்டிமீது 1803ல் பிரடெரிக்நோர்த் படையெடுத்தமைக்குரிய காரணங்கள்

i) கரையோரப் பகுதிகளிலிருந்து மலையகத்திற்கு வர்த்தகத்திற்காக சென்ற முஸ்லீம் வியாபாரிகள் கண்டி இராச்சியத்தினரால் துன்புறுத் தப்பட்டமை. இதுவே படையெடுப்புக்குரிய “உடனடிக் காரணம்” ஆகும்.

ii) கரையோரமாகவும் கண்டி இராச்சிய எல்லையிலுமாக இரு படையணி களை சேவையில் அமர்த்த வேண்டியிருந்தமை.

iii) கண்டி இராச்சியத்துக்குள் பிரவேசிக்கும் கடவைகளில் வரிசெலுத்த வேண்டியிருந்தமை.

iv) கரையோர மக்களும் கண்டி மன்னனைத் தமது தலைவனாகக் கருதியமை.

v) கொழும்புக்கும் திருகோணமலைக்கும் இடையிலே தரைத் தொடர் பினை ஏற்படுத்த கண்டி இராச்சியம் முட்டுக்கட்டையாக இருந்தமை.

vi) கொழும்புக்கும் திருகோணமலைக்குமிடையே கடல் வழியாகத் தொடர்புகளை மேற்கொள்வதற்கு அதிக செலவும் நீண்ட காலமும் தேவைப்பட்டமை.

vii) ஆங்கிலேயரைத் துரத்துவதற்கு மலையக மன்னன் பிரான்சியரின் உதவியை நாடலாம் என்ற சந்தேகம்.

viii) பிலிமத்தலாவை மகா அதிகாரம் கண்டி அரசனாவதற்கு ஆங்கிலேயரின் உதவியை நாடியமை.

ix) மலையகம் சுதந்திரமான இராச்சியமாக இருப்பதால் கரையோரப் பிரதேசங்களிலே பிரித்தானியருடைய செயற்பாடுகள் பாதிக்கப்படும் எனக் கருதியமை.

x) பிரித்தானியரது ஆட்சிப் பிரதேசங்களில் ஏற்படும் கிளர்ச்சிகளுக்கு கண்டி மன்னன் ஆதரவளித்தமை.

**18. பிரடெரிக் நோர்த்தின் கண்டி மீதான படையெடுப்பு தோல்வியடைந்தமைக்குரிய காரணங்கள்.**

i) கண்டி இயற்கை அரண்களை கொண்டிருந்தமை (மலைகள், ஆறுகள், காடுகள்)

ii) மலையகத்திற்குள் நுழையும் பாதைகள் ஒற்றையடிப் பாதைகளாகக் காணப்பட்டமை.

iii) கண்டி மன்னனின் யுத்த தந்திரங்கள், அதாவது கொரில்லா தாக்குதலின் காரணமாக ஆங்கிலேயருக்கு இழப்புக்கள் ஏற்பட்டமை.

iv) பருவக்காற்று மழை ஆரம்பித்தமையால் ஆறுகள் பெருக்கெடுத்து பாய்ந்தமை இதனால் கரையோரத்திற்கும் கண்டிக்குமிடையிலான தரைத் தொடர்பு துண்டிக்கப்பட்டமை.

v) மழைக்காலத்தில் படையெடுப்பு நடந்தமையால் பிரித்தானியப் படைகள் நோயினால் (காட்டுக் காய்ச்சல்) பாதிக்கப்பட்டதோடு உணவுப் பஞ்சமும் ஏற்பட்டமை.

vi) மலைநாட்டுச் சிங்களவரின் ஒற்றுமையும் அரச விசுவாசமும்.

- 1803 ஜனவரியில் பிரித்தானியப் படை இரண்டு வழியாகக் கண்டியை அடைந்தது. தளபதி மக்டோவலின் தலைமையிலான படையினர் கலகெதர கணவாய் ஊடாகவும், தளபதி பாபட் தலைமையிலான படையினர் மாத்தளைக் கணவாய் ஊடாகவும், கண்டியை அடைந்த போது மன்னன் ஸ்ரீ விக்கிரம இராஜசிங்கன் தனது படைகளுடன் "ஹங்குரங்கத்த" பகுதிக்கு பின்வாங்கினான்.
- இச்சந்தர்ப்பத்தில் முத்துச்சாமி என்ற நாயக்க வம்ச இளவரசனை கண்டிக்கு அரசனாக்கிய ஆங்கிலேயப்படை அவனுடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டது.
- முத்துச்சாமிக்குப் பாதுகாப்பாக ஒரு படையை நிறுத்தி வைத்துவிட்டு ஆங்கில படை கொழும்பு திரும்பியது. அச்சந்தர்ப்பத்தில் மன்னன் தனது படையுடன் வந்து ஆங்கிலப்படையைத் தாக்கி தோல்வியடையச் செய்தான்.

**19. ஆளுநர் தோமஸ் மெயிற்லண்ட் (1805 - 1812)**

i) பிரட்ரிக் நோர்த்துக்கு அடுத்து பதவியேற்ற ஆளுநர் ஆவார்.


தோமஸ் மெயிற்லண்ட்

ii) நிர்வாகச் சீர்திருத்தங்களை மேற்கொண்டார்.

- இராஜகாரிய முறையை மீண்டும் கொண்டு வந்தார்.
- இலங்கை ஆங்கிலேய அலுவலர்களின் அதிகாரங்களைத் திட்டவட்டமாக வரையறை செய்தார்.
- திசாவைகள், முதலியார்கள், விதானைமார்களின் அதிகாரங்கள் குறைக்கப்பட்டது.
- பதவி உயர்வு பெறுவதற்கு சிவில் உத்தியோகத்தவர்கள் அனைவரும் தமிழ் அல்லது சிங்கள மொழியில் தேர்ச்சி பெறவேண்டும் என கட்டாயப்படுத்தினார்.

iii) நீதித்துறையில் சீர்திருத்தங்களை மேற்கொண்டார்.

- குற்றவியல் வழக்குகளை விசாரிப்பதற்கு 1810ல் யூரி சபை முறையை ஆரம்பித்தார்.
- ஒல்லாந்த நீதிபதிகளின் சேவையைத் தொடர்ந்து பெற்றுக் கொடுத்தார்.
- உரோமன் கத்தோலிக்கர்களுக்கு எதிராக கொண்டுவரப்பட்ட சட்டங்களை இரத்துச் செய்து அவர்களுக்கும் புரட்டஸ்தாந்தவர்களுக்கும் வழங்கப்பட்ட சான்றுகளை வழங்கினார்.
- ஐரோப்பிய இனத்தவர் கொழும்புக்கு வெளியே காணிகளை கொள்வனவு செய்வதற்கு விதிக்கப்பட்டிருந்த தடையை நீக்கினார்.

iii) தோமஸ் மெயிட்லன்ட் வெற்றிகரமாகக் கண்டியை ஆக்கிரமிப்பதற்கான பின்னணியை ஏற்படுத்தினார். இதற்கு ஜோன் டொய்லி என்ற மொழி பெயர்ப்பாளன் ஆளுநருக்கு உதவி புரிந்தான். (*மலையகத்தை சேர்ந்த எகிலப்பொல, எக்னெலிகொட, புஸ்வல்லை ஆகிய தலைவர்கள் டொயிலியின் நண்பர்களாக இருந்தனர்*).


ஸ்ரீ விக்கிரம இராஜசிங்கன்


ரொபேட் பிரௌன்றிக்

## 20. ஆளுநர் றொபேட் பிறவுன்றிக் (1812 - 1820)

i) மூன்றாவது பிரித்தானிய ஆளுநர் ஆவர்.
ii) 1815 இல் கண்டியைக் கைப்பற்றினார்.
iii) 1815 இல் கண்டி உடன்படிக்கையை மேற்கொண்டார்
iv) 1818 இல் சுதந்திரப் போராட்டத்தை அடக்கினார்.

## 21. 1815ல் மலையகத்தினை றொபேட் பிறவுன்றிக் கைப்பற்றுவதற்கு உதவிய காரணிகள்:

**உடனடிக் காரணங்கள்**

i) 1814இல் மலையகப் பகுதிக்குச் சென்ற கரையோர வியாபாரிகளை உளவாளிகள் எனக் கருதிய கண்டிப் படைவீரர்கள் அவர்களது கை, காது, மூக்கு என்பவற்றைத் துண்டித்துத் துன்புறுத்தியமை.

ii) மன்னனுக்கு எதிரான கிளர்ச்சிக்காரர்களை துரத்திச் சென்ற கண்டிப் படையினர் பிரித்தானிய ஆட்சிக்கு உட்பட்ட கிராமங்களுக்குத் தீயிட்டமை.

iii) **பிலித்தலாவையின் செயற்பாடு**: நாயக்க வம்ச உரித்துடைய முத்துசாமியைப் புறக்கணித்துவிட்டு கண்ணுசாமியை (ஸ்ரீ விக்கிரம இராசசிங்கன்) அரசனாக்குவதன் மூலம் தனது விருப்பப்படி ஆட்சி அலுவல்களை மேற்கொள்வதற்கு முற்பட்டான். ஆயினும் மன்னனுக்கும் பிலிமத்தலாவைக்கும் இடையே கருத்து முரண்பாடுகள் தோன்றியமை.

iv) ஸ்ரீ விக்கிரம இராஜசிங்கனுக்கும் சிங்களப் பிரதானிகளுக்குமிடையே காணப்பட்ட ஒற்றுமையின்மை.

v) பொது மக்களிடம் ராஜகாரிய முறையின் கீழ் கடுமையான வேலை வாங்கப்பட்டதால் மக்களின் ஆதரவை இழந்தமை.

vi) மல்வத்த பீடத்தின் வழிபாட்டிடத்தை வேறு இடத்திற்கு மாற்றுவதற்கு மன்னன் ஆலோசித்தமையால் பிக்குமார்களின் எதிர்ப்பினை சந்தித்தமை.

vii) சப்பிரகமுவா பகுதிக்கு பொறுப்பாக நியமிக்கப்பட்ட எகலப்பொல் 1814ல் ஆங்கிலேயர் பக்கம் சாய்ந்தமை அத்துடன் இறுதி நேரத்தில் ஏழு கோரளைக்கு பொறுப்பாக இருந்த மொல்லிக்கொட பிரித்தானியரின் பக்கம் சேர்ந்து கொண்டமை.

viii) எகலப் பொலவின் மனைவியையும் பிள்ளைகளையும் தலதாமாளிகைக்குரிய தேவசங்கிந்த எனும் புனித இடத்தில் வைத்து கொடூரமாக கொலை செய்தமை. இதனால் கண்டிப்பிரதானிகள், புத்த பிக்குகள், பொதுமக்கள் என்போரின் எதிர்ப்பினை மன்னன் வளர்த்துக் கொண்டமை.

ix) ஜோன் டொயிலி என்ற மொழிபெயர்ப்பாளன் புத்த பிக்குகள், வர்த்தகர், பிச்சைக்காரன்போல வேடமிட்டு மலையகம் பற்றி உளவு பார்த்தமை.

x) ஆங்கிலப் படையின் போர்த்திறமை 45 நாட்களின் திட்டமிட்டபடி கண்டியை கைப்பற்றிக் கொண்டமை.

தப்பியோடிய மன்னன் ஸ்ரீ விக்கிரமராஜசிங்கன் மெதமகாநுவர என்னு மிடத்தில் உடுப்பிட்டி ஆராச்சியின் வீட்டில் ஒளித்தான். எஹலப்பொல, எக்னெலிகொட ஆகியோரின் உதவியுடன் ஆங்கிலேயப் படை மன்னனைக் கைது செய்தது. 1816ல் கோன்வாலிஸ் என்ற கப்பலில் சென்னைக்கு அனுப்பப்பட்ட மன்னன் 1832ல் இறந்தான்.

**22. ஸ்ரீ விக்கிரம இராஜசிங்கனுக்கும் பிரதானிகளுக்குமிடையே ஒற்றுமை யின்மை வளர்ந்து செல்வதில் செல்வாக்குச் செலுத்திய காரணிகள்.**

i) பிலிமத்தலாவைக்கும் ஸ்ரீ விக்கிரம இராசசிங்கனுக்குமிடையே கருத்து முரண்பாடுகள் அதிகரித்துச் செல்கையில் மன்னன் பிலிமத்தலாவை யைப் பதவி இறக்கம் செய்தமை.

ii) 1812இல் பிலிமத்தலாவை உட்பட அவரது உதவியாளர் ஏழு பேருக்கு மன்னனால் மரண தண்டனை விதிக்கப்பட்டமை.

iii) 1812இல் பிலிமத்தலாவ ஸ்ரீவிக்கிரமராஜசிங்கனால் கொலை செய்யப் பட்டான். அடுத்து எதிரிகளான எகலப்பொல மகாஅதிகாரமாகவும், இரண்டாம் மகாஅதிகாரமாக மொல்லிகொடவும் மன்னனால் நியமிக் கப்பட்டமை.

iv) சிங்கள பிரதானிகளின் அதிகாரம் ஓங்கியிருந்தமையால் அதனை குறைப்பதற்கு மன்னன் நடவடிக்கை எடுத்தமை

- உயர் அரச பதவிகளை நாயக்கர் வம்சத்தவர்களுக்கு வழங்குதல்.
- சிங்கள பிரதானிகளிடையே பேதங்களை ஏற்படுத்தல். எடுத்துக்காட் டாக ஒரு பிரதானியின் கீழிருந்த பிரதேசத்தை இரண்டாக பிரித்து ஒருவருக்கொருவர் எதிரிகளாக இருந்தவர்களிடம் ஒப்படைத்தமை.
- சிங்கள பிரதானிகளின் சிறுகுற்றங்களுக்கும் பெரிய தண்டனைகளை வழங்குதல்.

v) மன்னனுக்கு விரோதமாகச் செயற்பட்ட பிரதானிகளுக்கும் அவர்களது உதவியாளர்களுக்கும் பல்வேறு தண்டனைகள் வழங்கப்பட்டமை. எடுத்துக் காட்டாக மாம்பிட்டிய திசாவை, புஸ்ஸெல்லே திசாவை, பரணதல தேரர் ஆகியோருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டமை.

**23. 1815 கண்டி ஒப்பந்தம் :- முக்கிய அம்சங்கள்**

- 1815 மார்ச் 2ம் திகதி பிரித்தானிய மன்னன் மூன்றாம் ஜோர்ஜ் சார்பில் ஆளுநர் றொபேட் பிறவுண்றிக்கும் கண்டி மக்கள் சாபில் எஹலப்பொலவும் கண்டி மகுல்மடு மண்டபத்தில் இவ் உடன்படிக்கை யில் கைச்சாத்திட்டனர். இதுவே கண்டி ஒப்பந்தம் எனப்படுகிறது.
- ஜோன் டொய்லி வரைந்த இவ்வுடன்படிக்கை 12 பிரிவுகளைக் கொண்டிருந்தது. உடன்படிக்கை கைச்சாத்திட முன் ஏற்றப்பட்ட ஆங்கிலக் கொடியை "வாரியபொல ஸ்ரீ சுமங்கல தேரர்" கீழே இறக்கிவிட்டு சிங்களவரின் கொடியை ஏற்றிப் பறக்கவிட்டார். இதனால் ஏற்பட்ட குழப்பத்தை டொய்லி சமாளித்துக் கொண்டான்.

- **12 வாசகங்களின் விபரம் வருமாறு.**

i) **முதல் மூன்று பிரிவுகளின்படி** நாயக்கவம்சத்தவரது சிங்காசன உரிமை மறுக்கப்பட்டது.

ii) **நான்காவது பிரிவின்படி** மலையகத்தின் ஆட்சி உரிமை பிரித்தானியருக்கு வழங்கப்பட்டது. கண்டி இராச்சிய அதிகாரிகளினதும் மக்களினதும் உரிமைகள், அதிகாரங்கள் என்பவற்றை பாதுகாக்கும் வகையில் தேசிய முறைப்படி ஆட்சி நடைபெறும்.

iii) **ஐந்தாவது பிரிவின்படி** மலையக மக்களின் பௌத்த மதமும், தலங்களும் பௌத்த குருமார்களும் ஆங்கிலேயரால் பாதுகாக்கப்படும்.

iv) **ஆறாவது பிரிவின்படி** அங்கங்களைச் சேதப்படுத்தும் மனிதாபமற்ற தண்டனைகள் ஒழிக்கப்பட்டமை.

v) **ஏழாவது பிரிவின்படி** ஆளுநரால் அனுமதிப்பத்திரம் வழங்கப்படாத எவரும் மரணதண்டனை வழங்க முடியாது.

vi) **எட்டாவது பிரிவின்படி** மலையக மக்கள் சம்பந்தப்பட்ட குற்றவியல் வழக்குகள் மலையக சட்டங்களின் அடிப்படையிலேயே விசாரிக்கப்படும்.

vii) **ஒன்பதாவது பிரிவின்படி** மலையகத்தில் வாழும் பிறமக்கள் சம்பந்தமான வழக்குகள் ஆங்கிலச் சட்டங்களின் அடிப்படையிலே விசாரிக்கப்படும்.

viii) **பத்தாவது பிரிவின்படி** இவ் ஒப்பந்தமானது முந்திய பிரகடனங்களைவிட மேலானது.

ix) **பதினொராவது பிரிவின்படி** கண்டி இராச்சிய வரிகள், வருமானங்கள் ஆங்கிலேயருக்குரியது என்பதுடன் கண்டியைப் திருத்துவதற்கு பயன்படும்.

x) **பன்னிரண்டாம் பிரிவின்படி** நாட்டு மக்களுக்கு வசதியான முறையில் கண்டி இராச்சிய வர்த்தகம் சம்பந்தமான முறையை ஆளுநர் பிரித்தானிய முடிக்கு அறிவிப்பார்.



**வாரியபொல ஸ்ரீ சுமங்கல தேரர் சிங்கக்கொடியை ஏற்றல்**

## 24. 1815 கண்டி உடன்படிக்கையில் கைச்சாத்திட்ட மலைநாட்டுத் தலைவர்கள்

- எஹலப்பொல
- துல்லே
- மொனரவில கெப்பற்றிப்பொல
- கலஹும
- கலகொட திசாவை
- மொல்லிக்கொட
- ரத்வத்தை

## 25. 1818ல் சுதந்திரப் போராட்டத்திற்குரிய காரணங்கள்.

- 1817 ஒக்டோபர் 12ம் திகதி ஊவா வெல்லஸ்ஸவில் முதலாவது சுதந்திர போராட்டம் ஆரம்பமானது.
- 1818ல் நடைபெற்ற போராட்டத்துக்கான காரணங்கள் வருமாறு.

i) ஊவா வெல்லஸ்ஸ பகுதியில் வாழ்ந்த முஸ்லீம் மக்களுக்கென ''ஹஜ்ஜிமரிக்கார்'' எனும் முஸ்லீம் முகாந்திரம் ஆங்கிலேயரால் நியமிக்கப்பட்டதால் பிரதானிகள் அதிருப்தியடைந்தமை. இதுவே இப்போராட்டத்துக்க ''உடனடிக்காரணம்'' ஆகும்.

ii) பௌத்தபிக்குகள் புறக்கணிக்கப்பட்டமை, மன்னர் ஆட்சியில் பௌத்த பிக்குமார்களுக்கு உயர்ந்த மதிப்பு கிடைத்தது. ஆனால் பிரித்தானியர் காலத்தில் பௌத்த பிக்குகள் மதிப்பளிக்கப்படாமை.

iii) வெளிநாடொன்றில் வசிக்கின்ற தங்களால் சந்திக்க முடியாத மன்னன் ஒருவனின் ஆட்சியைக் கண்டி மக்கள் விரும்பாமை.

iv) கண்டிப் பிரதானிகளும் ஆங்கிலேயரின் அடிமைகளாக இருக்க வேண்டி ஏற்பட்டமை.

v) கடவை வரிகள் நீக்கப்பட்டமையால் கண்டிப் பிரதானிகள் வருமானத்தை இழந்தமை.

vi) ஆங்கிலேயர் கண்டி ஒப்பந்தப்படி ஆட்சிசெய்யாமை. கண்டிப் பாரம் பரியங்ள், சம்பிரதாயங்கள் ஆங்கிலேயரால் சிதைக்கப்பட்டமை.

vii) தானே கண்டி அரசாட்சிக்கு உரித்துடைய துரைசாமி எனும் இளவரசன் என்று கூறிக்கொண்டு வில்பாவே என்பவன் ஊவா வெல்லஸ்ஸப் பகுதியில் நடமாடியமை. இவனை கைதுசெய்ய ஆங்கிலப் படையினர் அனுப்பப்பட்டமை.

- கிளர்ச்சியை அடக்குவதற்கு பிரித்தானியரால் அனுப்பப்பட்ட ஊவாப் பிரதேச திசாவை "மொனரவில கெப்பட்டிபொல" கிளர்ச்சிக்காரர் பக்கம் சேர்ந்துகொண்டார்.

## 26. 1818 சுதந்திரப் போராட்டத் தலைவர்கள்

i) மொனரவில கெப்பட்டிபொல
ii) மடுகல்ல
iii) கிவுலேகெதர மொட்டால
iv) பூட்டாவேரட்டேரால
v) திம்புலான திசாவை
vi) IIம் பிலிமத்தலாவ அதிகாரம்


மொனரவில கெப்பட்டிபொல

vii) கலகெதர மொகட்டால
viii) கொடே கெதர அதிகாரம்
ix) எஹலப்பொல

**27. 1818 சுதந்திரப் போராட்டம் பரவலடைதலில் செல்வாக்குச் செலுத்திய காரணிகள்**

- வெல்லஸவில் உருவான போராட்டம் விரைவிலேயே தும்பறை, ஹேவாஹெட்டை, ஹாரிஸ்பத்துவை, மாத்தளைப் பிரதேசங்களுக்குப் பரவியது.

i) சிங்களவர்கள் இயற்கையான மறைவிடங்களில் பதுங்கியிருந்து கொரில்லாப் போர் முறையைக் கையாண்டமை பிரித்தானியருக்கு அதிக இழப்புக்களை ஏற்படுத்தியது.

ii) புனித தந்ததாது கிளர்ச்சிக்காரர் வசமாகியது. வாரியபொல ஸ்ரீ சுமங்கலதேரர் இரகசியமாக புனித தந்ததாதுவை கிளர்ச்சிக்காரரிடம் ஒப்படைத்தார். இதனால் இறுதியில் இராஜதுரோக குற்றச் சாட்டில் யாழ்ப்பாணத்தில் சிறை வைக்கப்பட்டார்.

**28. 1818 சுதந்திரப் போராட்டம் தோல்வியடைந்தமைக்கான காரணங்கள்.**

i) போராட்டம் உரிய முறையில் திட்டமிடப்படாமை கிளர்ச்சி பிரதேசங் களிடையே தொடர்புகள் காணப்படாமை.

ii) புனித தந்ததாது ஆங்கிலேயர் வசமானமை. கிளர்ச்சிக்காரரிடம் இருந்து தந்ததாது ஆங்கிலேயரிடம் சென்றமை.

iii) பிரதானிகளுக்கிடையே ஏற்பட்ட தனிப்பட்ட கோபதாபங்கள் எடுத்துக் காட்டாக மொல்லிக்கொட மகா அதிகாரம் ஆங்கிலேயர் பக்கம் சார்ந்தமை.

iv) ஆங்கிலேயர் கிளர்ச்சியை அடக்க கொடூரமான முறைகளைக் கையாண்டமை. எடுத்துக்காட்டாக உணவுப் பஞ்சத்தை ஏற்படுத்து வதற்காக இராணுவத்தைப் பயன்படுத்தி நெல் வயல்களை அழித் தமை. (நிலத்தை பாழடையச் செய்யும் கொள்கை).

v) துரைச்சாமி ஆட்சி உரிமையாளன் அல்லன் அவன் வில்பாவே என்னும் ஊரில் இருந்து வந்த பிக்கு என்ற உண்மை வெளியானமை.

vi) 1818 செப்ரெம்பர் 21ம் திகதிக்கு முன்னர் சுயவிருப்புடன் சரணடை வோருக்கு உயிர்ப்பிச்சை அளிக்கப்படுமென அறிவிக்கப்பட்டமை.

vii) கிளர்ச்சித்தலைவர்கள் கொலை செய்யப்பட்டமை. கைது செய்யப் பட்ட கெப்படிபொல, மடுகல்ல என்போர் இராணுவ நீதிமன்றத் தீர்ப்பின்படி போகம்பர எனுமிடத்தில் வைத்து கொலை செய்யப் பட்டனர். அத்துடன் எஹலப்பொல உட்பட சிலர் நாடு கடத்தப்பட்டனர்.

**29. 1818ம் ஆண்டு ஆங்கிலேயரின் கொள்கைப் பிரகடனம்**

- 1818ம் ஆண்டு போராட்டத்தை வெற்றி கொண்ட ஆங்கிலேயர்கள் தமது விருப்பப்படி கொள்கைப் பிரகடனத்தை வெளியிட்டனர். இதனை **மலையக வெளியீடு** என அழைத்தனர்.

- முக்கிய விடயங்கள் வருமாறு.

i) கிராமத் தலைவர் (கம்முலாதன) பதவிக்கு ஆட்களை அமர்த்து வதற்குப் பிரதானிகளுக்கிருந்த அதிகாரம் நீக்கப்பட்டது.

ii) கண்டிப் பிரதானிகள் ஆங்கிலேயரிடம் சம்பளம் பெறும் ஊழியர் களாக்கப்பட்டனர்.

iii) கண்டிப் பிரதானிகளுக்குப் பொதுமக்கள் வெகுமதிகள் வழங்குவது தடைசெய்யப்பட்டது.

iv) ஆளுநரின் அனுமதியுடன் மலையகத்தில் மாற்றுச் சமயங்களை பரப்ப அனுமதிக்கப்பட்டமை.

v) ஆங்கில நீதிமன்ற முறையும் மலையகப் பகுதிகளில் ஆரம்பிக்கப்பட்டன.

**30. கிளர்ச்சிக்குப் பின்பு மலையகத்தில் தமது அதிகாரத்தை உறுதிப்படுத்த பிரித்தானியர்கள் மேற்கொண்ட நடவடிக்கைகள்**

i) கரையோரத்துடன் மலையகத்தை ஒன்று சேர்த்தமை.

ii) கொழும்பை மையமாகக் கொண்டு போக்குவரத்து, புகையிரதப் பாதைகள் அமைத்தமை.

iii) பாதுகாப்புக் கடமைகளை உருவாக்கியமை.

**31. 1848ல் சுதந்திரப் போராட்டத்துக்கான காரணங்கள்**

- 1833 கோல்புறூக் சீர்திருத்தமும், ஆளுநர் ரொறிங்டனின் வரிக் கொள்கையுமே போராட்டத்துக்கான பின்னணியைத் தோற்றுவித்தது.
- சாதாரண குடிமக்கள் தமது வாழ்வாதாரத் தொழிலை முன்னேற்று வதற்காக கிளர்ச்சியில் ஈடுபட்டதால் இப்போராட்டத்தை "விவசாயிகள் கிளர்ச்சி" எனவும் அழைப்பர்.

i) கோல்புறூக் யாப்பின் திட்டத்தின்படி உருவாக்கப்பட்ட பெருந் தோட்டத்துறைக்காக மலையக சிங்கள மக்களின் காணிகள் ஆங்கி லேயரால் ஆக்கிரமிக்கப்பட்டமை. இதனால் விவசாயிகள் தமது காணிகளை இழந்தமை.

ii) கோப்பிச் செய்கைக்காக காடுகள் அழிக்கப்பட்டதால் மண்ணரிப்பு, வெள்ளப்பெருக்கு ஏற்பட்டது. இதனால் விவசாய நிலங்கள் பாதிக்கப் பட்டது.

iii) காடுகள் அழிக்கப்பட்டதால் கால்நடைகளுக்கு மேய்ச்சல் நிலம் இல்லாது போனமை.

iv) பெருந்தோட்டங்களுக்கு மத்தியில் அமைந்த சிறிய விவசாய நிலங்கள் ஆங்கிலேயரினால் பறிமுதல் செய்யப்பட்டமை.

v) பெருந்தோட்டத்துறையின் உருவாக்கத்தினால் உள்நாட்டு விவசாயம் புறக்கணிக்கப்பட்டமை. இதனால் கிராம மக்களது வாழ்க்கை முறை சிக்கலாக மாறியமை.

vi) கிராமசபைக்கு இருந்த அதிகாரம் நீதிமன்றங்களுக்கு வழங்கப் பட்டமையால் சிறு பிரச்சினைகளையும் தீர்க்க நீதிமன்றம் செல்ல வேண்டியிருந்தது.

vii) J. A. ஸ்ரிவாட் மெக்கன்சி ஆளுநரால் 1840ல் கொண்டு வரப்பட்ட தரிசு நிலச்சட்டத்தினால் மக்கள் காணிகளை இழந்தமை.

viii) இராஜகாரியமுறை நீக்கப்பட்டமையால் உள்நாட்டு குளங்கள், கால்வாய்கள் புனரமைக்கும் பணி தடைப்பட்டமை.

ix) 1847ல் கோப்பியின் விலை இங்கிலாந்தில் வீழ்ச்சியடைந்தமையால் ஆங்கில அரசுக்கு கிடைத்த வருமானம் வீழ்ச்சியடைந்தது. இதனை நிவர்த்தி செய்யும் முகமாக ரொறிங்ரன் பிரபு பல வரிகளை அறவிட்டமை இப்போராட்டத்திற்கு "உடனடிக் காரணமாக" அமைந்தது.
**உ+ம் :-** நாய்வரி, தோணிவரி, தெருவரி, படகு வரி,
துப்பாக்கி வரி, வண்டி வரி, முத்திரை வரி, ஆள் வரி.

x) நீலப்புத்தகம் (Blue Book) எனும் புள்ளிவிபர சஞ்சிகைக்கான தரவுகள் திரட்டப்பட்டபோது அது புதிய வரிகளுக்கான ஏற்பாடென்று வதந்தி பரவியமை.

xi) பௌத்த மதத்துக்கான அரச ஆதரவு நீக்கப்பட்டமை.

- மாத்தளையில் ஆரம்பித்த இப் போராட்டம் கண்டி, தம்புள்ள வாரியபொல, குருணாகல் முதலிய இடங்களுக்கு பரவியது.
- மாத்தளையில் உண்டான கிளர்ச்சிக்கு **குடாபொலபிக்கு, கொங்காலே கொடபண்டார, வீரபுரண்அப்பு** போன்றவர்களும், குருணாகலில் **அங்குரன் கெத்த டிங்கிறால, கந்தப்பளை பண்டா** ஆகியோரும் தலைமை வகித்தனர்.

## 32. வீரபுரன்அப்பு

i) வீர ஹென்ன திரே பிரான்சிஸ்கே எனும் இயற்பெயரை உடைய வீரபுரன் அப்பு மொறட்டுவையில் உயன பிரதேசத்தில் பிறந்தார்.

ii) நாடு, இனம், மதம் என்பவற்றுக்குத் தன்னை அர்ப்பணிக்கக் கருதி தனது பெயரை "புரன் அப்பு" என அழைத்துக் கொண்டான்.

iii) கடஹலபொல தேரரின் வழிகாட்டலின் கீழ் செயற்பட்ட புரன் அப்பு 1848இல் மாத்தளை மெக்டோவல் கோட்டையைத் தாக்கி கைப்பற்றினான்.

iv) பிரித்தானியரினால் கைது செய்யப்பட்ட இவர் 1848 ஆகஸ்ட் 8ந் திகதி சுட்டுக் கொலை செய்யப்பட்டார்.

## 33. கடஹலபொலதேரர் (குடாபொலதேரர்)

i) 1848 பிரித்தானியருக்கு எதிரான போராட்டத்திற்குத் தலைமை தாங்கி முன்னின்று செயற்பட்டார். இதனால் "**பௌத்தபிக்குகளின் பிதா**"என வரலாற்றில் சிறப்பிக்கப்படுகிறார்.

ii) வீரபுரன் அப்பு, கொங்காலேகொட பண்டா ஆகிய இரு தலைவர்களுக்கும் வழிகாட்டியாகவும் பாதுகாவலனாகவும் விளங்கினார்.

iii) காட்டிலுள்ள கற்குகையில் பதுங்கி இருக்கையில் பிரித்தானியப் படையின



**கடஹலபொலதேரர்**

ரால் கைது செய்யப்பட்டார். கொங்காலேகொட பண்டா ஒளித்திருக்கும் இடத்தை பிரித்தானியர்கள் கேட்டபோது "சிங்களவர்களின் சுதந்திரத் திற்காகப் போராடும் கொங்காலே கொட பண்டாவின் உயிர் எனது உயிரைவிடப் பெறுமதியானது ஆகையால் என்னைக் கொலை செய்தாலும் கவலையில்லை. அவனது உயிரைப் பாதுகாப்பது சிங்களவன் என்ற முறையில் நான் செய்யும் பெரும் செயலாகும்" என வீரமாகக் குறிப்பிட்டார்.

iv) ஆத்திரமடைந்த பிரித்தானியர்கள் 1848 ஆகஸ்ட் 6ம் திகதி சுட்டுக் கொலை செய்தனர்.

## 34. கொங்காலேகொட பண்டா

i) களனியில் வனவாசல பிரதேசத்தில் பிறந்தார்.

ii) "வர்ணபுர தேவகே டேவிட்" எனும் இயற்பெயரை உடைய இவர் பேலியகொட டேவிட் எனவும் அழைக்கப்பட்டார்.

iii) வரி எதிர்ப்பு இயக்கத்திற்கு ஆதரவு தெரிவித்து மலையகம் வந்த பின்பே மக்கள் மத்தியில் கொங்காலேகொட பண்டா என பிரபல்யம் அடைந்தார்.

iv) சிங்களவர்களின் மன்னனாக "ஸ்ரீ விக்கிரம சர்சசித்தி இராஜசிங்க" என்னும் பெயரில் தம்புள்ளையில் முடிசூடினான்.

v) 1848இல் சுதந்திரப் போரின்போது புரன் அப்புவுடன் சேர்ந்து தலைமைத் துவத்தை ஏற்று செயற்பட்டார்.

vi) பிரித்தானியரால் கைது செய்யப்பட்ட இவர் குற்றவாளி என்பதை ஒப்புக் கொண்டதால் மலாக்காவுக்கு நாடு கடத்தப்பட்ட நிலையில் நோயினால் 1849 டிசம்பர் 01ல் இறந்தார்.

## 35. 1848ம் ஆண்டு போராட்டம் தோல்வியடைந்தமைக்கான காரணங்கள்

i) ஆளுநர் ரொரிங்டன் இராணுவச் சட்டத்தைப் பிரயோகித்து கடுமை யாகப் போராட்டத்தை அடக்கினார். எடுத்துக் காட்டாக கடஹபொல தேரர், வீரபுரன்அப்பு, டிங்கிரால போன்ற தலைவர்கள் கொலை செய்யப்பட்டனர்.

ii) போராட்டம் உரிய முறையில் ஒழுங்கமைக்கப்படாமையும் அனுபவம் போதாமையும்.

iii) மலையகம் முழுவதும் சிறப்பான பாதை வசதிகள் காணப்பட்டமை.

iv) ஆங்கிலேயருக்கு தேவையான சந்தர்ப்பங்களில் மேலதிகப் படை களைப் பெற்றுக்கொள்ள முடிந்தமை.

v) சிங்களவரிடம் நவீன ஆயுதங்களுடன் பயிற்றப்பட்ட படையணி ஒன்று இல்லாமை.

vi) மலைநாட்டுப் பிரதானிகளின் ஆதரவு முழுமையாகக் கிடைக்காமை.

**36. 1848 போராட்டத்தின் விளைவுகள்**

i) குற்றவாளிகளாக இனம் காணப்பட்டோருக்குத் தண்டனை வழங்கப் பட்டதுடன் சொத்துக்களும் பறிமுதல் செய்யப்பட்டது.

ii) எதிர்ப்புக்குரிய வரிகள் சில (நாய் வரி, கடைத்தெரு வரி) நீக்கப் பட்டன. அத்துடன் ஆளுநர் ரொறிங்ரன் பிரித்தானியாவுக்கு திருப்பி அழைக்கப்பட்டார்.

iii) நீர்ப்பாசன, விவசாய நடவடிக்கைகளுக்கு அரச அனுசரனை வழங் கப்பட வேண்டும் என்பதை பிரித்தானிய நிர்வாகிகள் உணர்ந்தமை.

iv) உள்நாட்டு விவசாய அபிவிருத்தி, சுகாதார நலன் மேம்பாடு, பெருந்தோட்ட பயிர்ச்செய்கைக்கான பாதையமைப்பு அபிவிருத்தி, உள்ளூராட்சி மன்ற மேம்பாடு என்பவற்றுக்கு 1852இன் பின்னர் அதிகாரிகள் நியமிக்கப்பட்டமை.

v) 1865ல் மாநகரசபை முறையும், 1871ல் கிராமசபை முறையும் அறிமுக மானது.

## இலங்கையின் யாப்பு முறை வளர்ச்சி

**37. 1833 கோல்புறூக் ஆணைக்குழுவின் ஆலோசனைகள்**

- இலங்கையிலிருந்து கிடைத்த வருமானத்தைவிட நிர்வாகச் செலவு அதிகரித்திருந்தமைக்கான காரணத்தை ஆராயவே கோல்புறூக் ஆணைக்குழு நியமிக்கப்பட்டது.
- 1829 இல் இலங்கை வந்த கோல்புறூக் நிர்வாகம், வருமானம், அரச நிறுவனங்கள் என்பவற்றையும் 1830ல் வந்த சாள்ஸ் எச். கமரன் நீதித்துறை பற்றியும் ஆராய்ந்தனர்.
- கோல்புறூக் சமர்ப்பித்த அறிக்கையை 1833ல் இருந்து நடை முறைப்படுத்துமாறு குடியேற்றநாட்டுச் செயலாளர் "கொட்ரிச் பிரபு" இலங்கையின் ஆளுநர் ரொபட் பில்மர் ஹோர்டனுக்கு அனுமதி யளித்தார்.

i) கரையோரமும் கண்டியும் இணைக்கப்பட்டு ஒரே நிர்வாக அலகாக ஆட்சி செய்யப்பட வேண்டும்

ii) 16 நிர்வாக கூறுகளாக இருந்த இலங்கையை 5 மாகாணங்களாகக் குறைத்தல்

iii) செலவீனங்களைக் குறைப்பதற்கு சிவில் சேவையாளர்களின் சம்பளத்தை குறைத்தல், ஓய்வூதியத்தை நீக்குதல்

iv) கட்டாய சேவையான இராஜகாரிய முறையை நீக்குதல்

v) ஆங்கிலக் கல்வி முறையை விரிவுபடுத்துதல்

vi) அரசின் வர்த்தக ஏகபோக உரிமையை நீக்கி சுதந்திரமான வர்த்தக உரிமையை ஏற்படுத்துதல்

vii) முழுநாட்டிற்கும் பொதுவான ஒரே நீதிமன்ற முறையை அறிமுகப் படுத்தலும் அதன் கீழ்மட்ட நீதிமன்றமாக மாவட்ட நீதிமன்றம் உருவாக்கப்பட்டமை.

viii) சட்டவாக்க சபை, சட்ட நிர்வாக சபை, எனும் இரு சபைகள் உருவாக்கப்பட்டமை.




- சட்ட நிர்வாக சபைக்கு நாட்டின் உயர்மட்ட சிவில், இராணுவ அதிகாரிகள் - 6 பேர் நியமிக்கப்பட்டனர்.
- சட்ட சபைக்கு தெரிவு செய்யப்பட்ட முதல் தமிழர் - ஆறுமுகப்பிள்ளை குமாரசுவாமி
- சட்டசபைக்கு தெரிவு செய்யப்பட்ட முதல் சிங்களவர் - T.J. பிலிப்ஸ்
- 1889ல் சட்டவாக்கக் கழகத்தில் உத்தியோக சார்பற்ற அங்கத்தவர்களின் தொகை 8 ஆக அதிகரிக்கப்பட்டது. இதில் மலைநாட்டுச் சிங்களவர் (P.B.பானபொக்கை), முஸ்லீம் (M.C.அப்துல் ரஹுமான்) நியமிக்கப்பட்டனர்.






ஆளுநர் வில்மர் ஹோர்டன்

**மாகாணங்களும் நிர்வாக மையங்களும்**

வடக்கு - யாழ்ப்பாணம்
கிழக்கு - திருகோணமலை
தெற்கு - காலி
மேற்கு - கொழும்பு
மத்திய - கண்டி

**38. அரசியல் அமைப்பு சீர்திருத்தக் கோரிக்கைகளை முன்வைத்த மத்திய வகுப்பினரிலிருந்து தோன்றிய அமைப்புகள்**

i) சிலாபச் சங்கம்
ii) இலங்கைத் தேசிய சங்கம்
iii) யாழ்ப்பாணச் சங்கம்
iv) கீழ்நாட்டுப் பெருந்தோட்ட தொழிலாளர் சங்கம்

**39. அரசியலமைப்புச் சீர்திருத்தக் கோரிக்கைகளை முன்வைத்த மத்திய வகுப்பினர்**

i) ஜேம்ஸ் பீரிஸ் (முக்கியமானவர்)
ii) சேர். பொன். இராமநாதன்
iii) ஈ. ஜே. சமரவிக்கிரம
iv) ஏப். ஜே. டி மெல்

- இவர்களது கோரிக்கைகள் வருமாறு
  i) உத்தியோக சார்பற்ற உறுப்பினர்களின் எண்ணிக்கையை அதிகரித்தல்
  ii) இனரீதியல்லாது பிரதேச ரீதியிலான பிரதிநிதித்துவத்தை ஏற்படுத்துதல்
  iii) பிரதிநிதிகளை ஆளுநர் பெயர் குறிப்பிட்டு நியமிப்பதை நீக்கி, வரையறுக்கப்பட்ட வாக்குரிமை மூலம் தெரிவு செய்தல்
  iv) சட்டவாக்க சபையின் அதிகாரங்களை கூட்டுதல்
  v) சட்ட நிருபன சபைக்கு உத்தியோக சார்பற்ற உறுப்பினர்களை (இலங்கையரை) நியமித்தல்.

**40. மக்கலம் அரசியலமைப்புச் சீர்திருத்தத்தின் முக்கிய அம்சங்கள்**

- 1910ல் முன்வைக்கப்பட்ட சீர்திருத்தம் 1912 முதல் இது நடைமுறைக்கு வந்தது.

i) சட்டவாக்க சபையின் அங்கத்தவர் எண்ணிக்கை 21 ஆக அதிகரிக்கப் பட்டது.



ii) **இச்சீர்திருத்தத்தின் முக்கிய அம்சங்கள் வருமாறு**

- வாக்குரிமை முதன் முதலில் ஆங்கிலக் கல்வி கற்ற சொத்துடைய மத்திய தர வகுப்பினருக்கு வழங்கப்பட்டது. இது வரையறுக்கப்பட்ட வாக்குரிமையாக (4 சதவீதத்தினருக்கு மட்டும்) காணப்பட்டது.
- கல்விப் புலமைமிக்க இலங்கையருக்கு ஒரு பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டது.
- இனவாரிப் பிரதிநிதித்துவம் தொடர்ந்தும் நடைமுறைப்படுத்தப்பட்டது.

iii) **இச்சீர்திருத்தத்தின் முக்கியத்துவம்**

- வரையறுக்கப்பட்ட வாக்குரிமை மூலம் உறுப்பினர் ஒரு பகுதியினர் தெரிவு செய்யப்பட்டமை பாராளுமன்ற ஆட்சி முறை ஒன்றில் இருக்க வேண்டிய பிரதிநிதித்துவ முறைக்கு இட்டுச் செல்வதற்கான முதல் முயற்சியாகும்.

iv) **இச்சீர்திருத்தத்தின் குறைபாடுகள்**

- வாக்களிக்கும் உரிமை அனைவருக்கும் வழங்கப்படவில்லை.
- பொதுமக்களுக்கு பொறுப்புச் சொல்லும் அரசியல் திட்டமாக இல்லாமை.



பிரித்தானியர் ஆட்சியில் கண்டிப் பிரதானிகள்



மக்கலம்

## 41. 1921 மனிங் அரசியலமைப்புச் சீர்திருத்தத்தின் முக்கிய அம்சங்கள்

- 1915ல் முஸ்லிம் - சிங்களவர் இனக்கலவரத்தை அடக்குவதற்கு ஆளுநர் றொபட் சாமஸ் கடும் நடவடிக்கை எடுத்தமை.
  1919ல் உருவான இலங்கை தேசிய சங்கம் யாப்பு சீர்திருத்தம் பற்றிய பிரச்சாரத்தில் முன்னனியாக நின்றது.

i) சட்டவாக்க சபை உறுப்பினர் எண்ணிக்கை 37 ஆக உயர்ந்தது.




ii) **மனிங் யாப்பின் முக்கிய அம்சங்கள் வருமாறு**


சேர் வில்லியம் மனிங்

- முதன் முதலில் உத்தியோகப் பற்றுள்ளோரை விட உத்தியோகப் பற்றற்றோர் தொகை அதிகரிக்கப்பட்டது.
- முதன் முறையாக பிரதேசவாரிப் பிரதிநிதித்துவம் நடைமுறைப்படுத்தப்பட்டது. ஆயினும் இனரீதியான பிரதிநிதித்துவம் தொடர்ந்தும் அமுலில் இருந்தது.
- மாகாண ரீதியான தேர்தல் தொகுதி முறை அறிமுகப்படுத்தப்பட்டது.
- ஆங்கிலம் கற்ற மத்திய தர வகுப்பினருக்கு மேலதிகமாக ஏனையோருக்கும் வாக்குரிமை சிறு அளவில் அதிகரிக்கப்பட்டது.
- சட்டவாக்கக் கழகத்தின் அதிகாரங்கள் சிறிய அளவில் விரிவாக்கப்பட்டது.
- சட்ட நிர்வாகக் கழகத்திற்கு முதன் முதல் உத்தியோகப்பற்றற்ற அங்கத்தவர் மூவர் தெரிவு செய்யப்பட்டனர்.

iii) இச்சீர்திருத்தம் மூலம் பாராளுமன்ற ஆட்சி முறையை நோக்கி வளர்ச்சியடைவதற்கான பண்புகள் பல அறிமுகமாகியது.

iv) இச்சீர்திருத்தத்தைத் தொடர்ந்து தமிழ் - சிங்கள தலைவர்களுக்கிடையே கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டன.

## 42. இலங்கைத் தேசிய சங்கம்

i) படித்த இலங்கையர்களை ஒன்று திரட்டி 1919ல் சேர். பொன்.அருணாசலம் தலைமையில் இலங்கைத் தேசிய சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது.

ii) 1912ல் தெரிவான சட்டவாக்கக் கழகத்தில் 3 : 3 என்றிருந்த தமிழ் - சிங்களப் பிரதிநிதித்துவம் 1920ஆம் ஆண்டுத் தேர்தலில் சிங்களவர்களுக்கு 14 ஆசனங்களும், தமிழர்களுக்கு 4 ஆசனங்களும் கிடைத்தது.

iii) சிங்களத் தலைவர்களுடன் ஏற்பட்ட கருத்து வேற்றுமையால் தமிழ் தலைவர்கள் தேசிய சங்கத்தில் இருந்து விலகி 1921ல் "தமிழ் மக்கள் சபை" ஒன்றை நிறுவினர்.

iv) இந்நிலையில் இருசாராரும் தமது அரசியல் கோரிக்கைகளை தனித் தனியே குடியேற்ற செயலாளரிடம் முன் வைத்தனர்.

| இலங்கைத் தேசிய சங்கம் (ஜேம்ஸ் பீரிஸ் தயாரித்தார்) | இலங்கைத் தமிழ் காங்கிரஸ் (தமிழ் மக்கள் சபை) |
|---|---|
| • சட்டவாக்கக் கழக உறுப்பினர் தொகையை 45 ஆக உயர்த்தல் இதில் 6 பேர் உத்தியோகப் பற்றுள்ளோர். 39 பேர் உத்தியோகப் பற்றற்றோர்.<br>• மாகாணத் தேர்தல் அடிப்படையில் 28 பிரதிநிதிகள் தெரிவு செய்யப் படுதல்.<br>• சிறுபாண்மையினர் சார்பாக 11 பேர் நியமிக்கப்படுதல். | • சட்டவாக்கக் கழக உறுப்பினர் தொகையை 45 ஆக உயர்த்தல் இதில் 12 பேர் உத்தியோகப் பற்றுள்ளோர், 33 பேர் உத்தி யோகப் பற்றற்றோர்.<br>• மாகாணத் தேர்தல் அடிப்படையில் 9 பிரதிநிதிகள் தெரிவு செய்யப் படுதல்.<br>• சிறுபாண்மையினர் சார்பாக 11 பேர் நியமிக்கப்படுதல் |

**43. 1924 மனிங் - டிவன்சயர் யாப்புச் சீர்திருத்தத்தின் முக்கிய அம்சங்கள்**

- ஆளுநர் மனிங் தனது திருத்தக் கோரிக்கையுடன் இலங்கையரது கோரிக்கைகளையும் சேர்த்து குடியேற்ற நாட்டுச் செயலாளர் டிவன்சயரிடம் சமர்ப்பித்தார்.
- ஆளுநர் மனிங் தயாரித்த திட்டத்தினை டிவன்சயர் செய்த சில திருத்தத்துடன் 1924 இல் அமுலுக்கு வந்தது.

i) சட்டவாக்க சபை உறுப்பினர் தொகை 49 ஆக உயர்ந்தது.



ii) **இச்சீர்திருத்தத்தின் சிறப்பம்சங்கள் வருமாறு**

- சட்டவாக்கக் கழகத்தின் தலைமைப் பதவி ஆளுநரையே சாரும். ஆயினும் உபதலைவர் ஒருவரை வாக்குரிமையின் மூலம் தெரிவு செய்ய சந்தர்ப்பம் வழங்கப்பட்டது.
- சட்டவாக்கக் கழகத்தின் அங்கத்தவர்களில் அதிகமானோர் வரையறுக்கப்பட்ட வாக்குகளால் தெரிவு செய்யப்பட்டனர்.
- மேல் மாகாணத்தில் தமிழருக்கென்று புதிய அங்கத்துவம் ஒன்று வழங்கப்பட்டது.
- இனவாரிப் பிரதிநிதித்துவம் தொடர்ந்தும் இருந்து வந்தது.

iii) சட்டவாக்க சபையில் அதிகாரமும் பொறுப்புக்களும் வெவ்வேறாகக் காணப்பட்டமை பெருங்குறைபாடாகும்.

iv) யாப்புச் சீர்திருத்தத்தை அமுல்படுத்துவது கடினம் என்பதனால் புதிய யாப்புச் சீர்திருத்தம் அவசியம் என ஆளுநர் ஹியூ கிளிபேட் குடியேற்ற நாட்டுச் செயலாளருக்கு அறிவித்தார்.

## 44. டொனமூர் ஆணைக்குழு இலங்கைக்கு வருதல்

i) ஆளுநர் ஹென்றி ஸ்ரான்லியின் காலத்தில் டொனமூர் தலைமையிலான குழுவினர் இலங்கை வந்தனர். உதவியாளர்களாக **மெதிவ் நேடன், ஜெப்ரி பட்லர், டிரமன்ட் ஷீல்ஸ்** ஆகியோர் நியமிக்கப்பட்டனர்.

ii) டொனமூர் குழுவிடம் இலங்கையின் மத்திய வகுப்பினர் முன்வைத்த கோரிக்கைகள் வருமாறு

- இலங்கைக்கு பிரித்தானிய ஆட்சியின் கீழ் பொறுப்புடைய ஆட்சி முறையே தேவையென இலங்கைத் தேசிய சங்கத்தைச் சேர்ந்த பீரிஸ் தலைமையிலான குழுவினர் கோரினர்.
- இலங்கைக்கு சுயஆட்சி முறையே தேவையென A.E. குணசிங்க தலைமையிலான புரட்சிவாதிகள் கோரினர்.
- சட்டவாக்கக் கழகத்தில் ஓர் இனக் குழுவினரை இன்னோர் இனக் குழுவினர் மிகைத்துச் செல்லாத முறையிலான பிரதிநிதித்துவமே தேவையென சேர். பொன். இராமநாதன் தலைமையிலான தமிழ் குழுவினர் கோரினர்.
- சுயேச்சை அதிகாரமுடைய சமஷ்டி ஆட்சிமுறை ஒன்றே மலைநாட்டுக்கு அவசியம் என A.F. மொலமுரே, T.P. கொப்பேகடுவ, G.P. ரத்நாயக்க ஆகியோர் அடங்கிய மலைநாட்டுத் தேசிய சபை கோரியது.

## 45. 1931 டொனமூர் யாப்பின் சிபார்சுகள்

i) **சர்வஜென வாக்குரிமை கொண்டு வரப்பட்டமை**
கல்வி கற்றவர் - கற்காதவர், செல்வந்தர் - ஏழை என்ற பேதமின்றி 21 வயதுக்கு மேற்பட்ட ஆண் பெண் இருபாலருக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டது.

ii) **அரசுக் கழகம் உருவாக்கப்பட்டமை**

61 உறுப்பினர்கள் இடம் பெற்றனர். இதில் 50 உறுப்பினர் சர்வசன வாக்குரிமை மூலமும் 8 உறுப்பினர்கள் ஆளுநர் மூலமும் நியமிக்கப் பட்டனர். மிகுதி மூவரும் (பிரதம, நிதி, சட்ட) செயலாளர்களாவர்.

iii) **நிர்வாகக் குழு முறை ஆரம்பிக்கப்பட்டது**

அரசுக்கழகத்துக்குள்ள மூன்று செயலாளர்களையும் தவிர்த்து ஏனைய 58 பேரும் 7 நிர்வாகக் குழுக்களாகப் பிரிக்கப்பட்டனர்.

1. விவசாயம் - D.S. சேனநாயக்க
2. உள்நாட்டு அலுவலகங்கள் - D.B. ஜயதிலக
3. சுகாதாரம் - T. B. பான பொக்கை
4. கல்வி - C.W.W. கன்னங்கரா
5. உள்ளூராட்சி - C.V. பட்டுவன்துடாவ
6. தொழில், கைத்தொழில் வர்த்தகம் - பெரிசுந்தரம்
7. போக்குவரத்தும் பொது வேலைகளும் - H.M. மாக்கான் மரக்கார்

iv) பிரதேச வாரிப் பிரதிநிதித்துவம் விரிவாக்கப்பட்டமை.

v) அரசுக் கழகத்தில் உத்தியோகத்தர்கள் மூவரை உள்வாங்குதல்.

vi) ஆளுநரின் அதிகாரங்களை மறுசீரமைத்தல்.

- முதலாவது அரசு கழகத்திற்கு பிரதிநிதிகளைத் தெரிவு செய்வதற் காக **ஆளுநர் கிரகம்தொம்சனால்** தேர்தல் நடாத்தப்பட்டது.
- அரசு கழகத்தின் முதலாவது அவைத் தலைவராக A.F. மொலமுரே தெரிவு செய்யப்பட்டார்.

### 46. சர்வசன வாக்குரிமை : முக்கிய அம்சங்கள்

i) 1910 மக்கலம் சீர்திருத்தத்தில் வரையறுக்கப்பட்ட வாக்குரிமையே வழங்கப்பட்டது.

ii) டொனமூர் சீர்திருத்தத்தின் கீழ் 21 வயதுக்கு மேற்பட்ட ஆண், பெண் இருபாலாருக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டது.

iii) சர்வசன வாக்குரிமை பிரித்தானியாவில் 1928 இல் அறிமுகமாகி யிருந்தபோதிலும் இலங்கையருக்கு 1931இல் கிடைத்தது ஒரு சிறப்பம்சமாகும்.

iv) ஆயினும் பின்வரும் நியதிகளுக்கு உட்பட்டவர்களுக்கே சர்வசன வாக்குரிமை கிடைத்தது.

- பிரித்தானியக் குடியாகவும்,
- அவர் 21 வயதுக்கு மேற்பட்டவராயும்,
- அவர் அவ்விடத்தில் ஆவணி மாதத்துக்கு முன்னுள்ள 18 மாத காலத்தில் 6 மாத காலமாவது இலங்கையில் வாழ்ந்தவராயும்,
- அவர் 12 மாதங்களுக்கு மேற்பட்ட கடுழியச் சிறை பெறாதவராயும் இருத்தல் வேண்டும் என்பது நியதிகளாகும்.

v) A.E. குணசிங்கவின் தலைமையிலான புரட்சிவாதிகள் சர்வஜன வாக்குரிமை வழங்குவதற்கு ஆதரவாகக் கருத்துக்களை முன்வைத்த

போதிலும் சேர். பொன். இராமநாதன் தலைமையிலான தமிழ்க் குழுவினர் எதிரான கருத்துக்களை முன் வைத்தனர்.

## 47. நிர்வாகக் குழு முறை : முக்கிய அம்சங்கள்

i) அரசு கழகத்தில் உள்ள 61 அங்கத்தவர்களில் 3 செயலாளர்கள் தவிர்த்து ஏனைய 58 பேரும் நிர்வாகக் குழுமுறையின் கீழ் இடம் பெற்றனர்.

ii) 7 நிர்வாகக் குழுவுக்கும் ஒவ்வொரு தலைவர்கள் தெரிவு செய்யப் பட்டனர். அவர்கள் அத்துறையின் அமைச்சராகக் கருதப்பட்டனர்.

iii) 7 அமைச்சர்களையும் 3 செயலாளர்களையும் உள்ளடக்கி 10 பேர் கொண்ட அமைச்சரவை உருவாக்கப்பட்டது. இதுவே இலங்கை யில் உருவாக்கப்பட்ட முதலாவது அமைச்சரவையாகும். ஆயினும் அது கூட்டுப் பொறுப்புள்ள அமைச்சரவையாகக் காணப்படவில்லை.

iv) பிரித்தானிய குடியேற்ற நாடுகளில் முதன் முதலில் இலங்கை யிலேயே நிர்வாகக் குழு ஆட்சி முறைமை அறிமுகமாகியது.

v) சட்டவாக்கத் துறையில் உள்ள உத்தியோக சார்பற்றோரை அரச நிர்வாகத்தில் நேரடித் தொடர்புபடுத்திக் கொள்வதற்கு இம்முறை பொருத்தமாக இருந்தது.

## 48. டொனமூர் யாப்பின்கீழ் ஆளுநரின் அதிகாரங்கள்

- இதுவரை இருந்து வந்த ஆட்சிமுறைகளுள் ஆளுநருக்கு இருந்த அதிகாரங்கள் டொனமூர் சீர்திருத்தத்தில் கணிசமான அளவிற்கு குறைக்கப்பட்டிருந்தது.
- ஆயினும் ஆளுநரிடம் கீழ்வரும் அதிகாரங்கள் காணப்பட்டது.

i) அரசு கழகத்தின் தீர்மானம் ஒன்று சட்டமாவதற்கு ஆளுநரின் அனுமதி கிடைக்கப்பெற வேண்டும்.

ii) பிரித்தானியப் பேரரசு சம்பந்தப்பட்ட விடயங்களில் தீர்மானங்களை மேற்கொள்ளும் அதிகாரம்.

iii) அரசுக் கழகத்தின் அனுமதியுடனோ, அனுமதியின்றியோ முக்கிய மானதெனக் கருதும் சட்டங்களைப் பிறப்பிக்கும் அதிகாரம்.

iv) அரசாங்கச் சேவைக்கு உத்தியோகத்தர்களை நியமிக்கும் அதிகாரம்.

## 49. டொனமூர் யாப்பு முறையின் விளைவுகள்

i) **நன்மைகள்**

- சிறுபான்மையினருக்குக் கூடிய வாய்ப்பினை அளித்தது.
- சமூக நலன் கருதும் திட்டங்கள் தோன்றியமை.
  உ+ம் :- பாடசாலைகள், வைத்தியசாலைகள், வீதிகள் அமைக்கப்பட்டன.
- இலங்கையருக்கு நிர்வாக ரீதியிலான அனுபவத்தை பெற்றுத் தந்தது.

ii) **குறைபாடுகள்**

- டொனமூர் அறிக்கை வெளியானதும் சேர். பொன். இராமநாதன் அது இலங்கையருக்கு உதவாதது என்று கூறினார்.
- ஆளுநருக்கும் அரச அதிகாரிகளுக்கும் அதிகளவு அதிகாரங்கள் காணப்பட்டன.
- இலங்கை மக்களுக்கு இதன் மூலம் அரைகுறைப் பொறுப்பாட்சி ஒன்றே வழங்கப்பட்டிருந்தமை.
- கூட்டுப் பொறுப்புடைய அமைச்சரவை காணப்படாமை.

**50. டொனமூர் அரசியல் திட்டத்திற்கு எதிராக இலங்கைத் தேசிய சங்கம் முன்வைத்த சீர்திருத்தக் கோரிக்கைகள்**

- 1932இல் இலங்கைத் தேசிய சங்கத் தலைவர் E.W. பெரேரா அவர்களால் இச்சீர்திருத்தங்கள் முன்வைக்கப்பட்டது.

i) அரச உத்தியோகத்தர்களை மூவரையும் அரசு கழகத்தில் இருந்து நீக்கிவிட்டு அவர்களுடைய பதவிகளை அமைச்சர்களுக்கு ஒப்படைத்தல்.

ii) அமைச்சரவை அதிகாரங்களை விரிவாக்குதல்.

iii) நிர்வாகக் குழு முறைக்குப் பதிலாக அமைச்சரவை முறையொன்றை ஆரம்பித்தல்.

iv) அரசு கழகத்திற்கு நிதியை நிர்வகிக்கும் அதிகாரத்தை வழங்குதல்.

**51. 1947 சோல்பரி யாப்பு**

- 1944 சோல்பரி பிரபுவின் தலைமையில் ஓர் ஆணைக்குழுவொன்று நியமிக்கப்பட்டது. உதவியாளர்களாக A.F. ரீஸ், F.J. பரோஸ் ஆகியோர் நியமிக்கப்பட்டனர்.

i) ஆளுநர் நாயகம் அல்லது மகாதேசாதிபதி தெரிவு செய்யப்பட்டமை. பிரித்தானியா முடியின் பிரதிநிதியாகவும், பெயரளவில் நிர்வாகியாகவும் ஆளுநர் நாயகம் விளங்கினார்.

ii) இரு சபைகளைக் கொண்ட பாராளுமன்றம் உருவாக்கப்பட்டது.

iii) பிரதமரின் தலைமையிலான அமைச்சரவை உருவாக்கப்பட்டது.

iv) பிரதிநிதிகள் சபையில் பெரும்பான்மையோரின் ஆதரவைப் பெற்ற பிரதிநிதியை ஆளுநர் நாயகம் பிரதமராக நியமித்தல்.

v) அரச சேவை ஆணைக்குழு, நீதிச்சேவை ஆணைக்குழு அமைக்கப்பட்டது.

vi) சிறுபாண்மையினரின் உரிமைகளைப் பாதுகாப்பதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தது.

உ+ம் :- அரசியல் யாப்பின் 29ஆவது உப பிரவு சிறுபாண்மையினருக்கு பாதுகாப்பான சில விதிகளைக் குறிப்பிடுகிறது.


ஹென்றி மொங் மேசன் மூர் (1948 - 1949)


வைகவுண்ட் சோல்பரி (1949 - 1954)


ஒலிவர் குணதிலக்க (1954 - 1962)


வில்லியம் கோபல்லாவ (1962 - 1972)

## 52. ஆளுநர் நாயகம் (மகாதேசாதிபதி)

i) பிரித்தானிய முடியின் பிரதிநிதியாக மகாதேசாதிபதி விளங்கினாலும், அமைச்சரவைத் தீர்மானங்களுக்கு ஏற்பவே அவரின் நடவடிக்கைகள் அமைந்திருந்தது.

ii) பிரதமரின் ஆலோசனையின் பெயரில் பிரித்தானிய முடியினால் நியமிக்கப்படுவர். இலங்கைப் பிரதமர் விரும்பும் வரை பதவி வகிக்கக் கூடியவராக விளங்கினார்.

iii) ஆளுநர் நாயகத்தின் அதிகாரங்கள் சில வருமாறு

- பாராளுமன்ற அதிகாரங்களைக் கட்டுப்படுத்துதல்.
- பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்படும் சட்டங்களை முடியின் சார்பாக அங்கீகரித்தல்.
- பாதுகாப்பு, வெளிவிவகாரம், நாணயம் வெளியிடுதல், உயர் பதவி களுக்கான நியமனம், சிறுபாண்மையினரின் அரசியல் திட்டத்தைத் திருத்துதல் ஆகிய விடயங்கள் தொடர்பான தீர்மானங்களுக்கு அனுமதி வழங்காது இடை நிறுத்துதல்.

## 53. பாராளுமன்றம் : முக்கிய அம்சங்கள்

i) நாட்டில் சமாதானத்தை நிலைநிறுத்துவதற்கும், நிர்வாகத்தை இலகு படுத்துவதற்குமாகப் பாராளுமன்றம் அமைக்கப்பட்டது. இதன் மூலம் இலங்கை முழுமையான பாராளுமன்ற ஆட்சிமுறையைப் பெற்றது.

ii) பிரதிநிதிகள் சபை (கீழ்ச்சபை), செனற் சபை (மேல் சபை) என இரு சபைகள் காணப்பட்டது.

iii) பிரதிநிதிகள் சபைக்கு 101பேர் உறுப்பினராக தெரிவாகினர். இதில் 95 பேர் சர்வஜன வாக்குரிமை மூலமும் 06பேர் சிறுபாண்மையின ருக்காக ஆளுநர் நாயகத்தால் நியமிக்கப்பட்டனர். இவர்களுடைய பதவிக்காலம் 5 வருடங்கள் ஆகும்.

iv) செனற் சபைக்கு 30 பேர் உறுப்பினராக தெரிவு செய்யப்பட்டனர். இதில் 15 பேர் பிரதமரின் சிபார்சின்படி ஆளுநர் நாயகத்தால் நியமிக்

கப்படுவர். மிகுதிப் 15 பேரும் பிரதிநிதிகள் சபை மூலம் நியமிக்கப் படுவர்.

v) **மேல் சபை உருவாக்கப்படுவதற்கான நோக்கங்கள் வருமாறு:**

- சிறுபாண்மையினரின் உரிமைகளைப் பாதுகாத்தல்
- பிரதிநிதிகள் சபையால் தூரநோக்கற்ற முறையில் அவசரமாகச் சட்டங்களை இயற்றுவதைத் தடுத்தல்.
- நாட்டின் உன்னதமான அறிவாளிகளின் சேவைகளைச் சட்டவாக்கத் துறைக்குப் பெற்றுக் கொள்ளுதல்.
- புத்திசாலித்தனமான விவாதங்கள் இடம்பெறுதல்.

vi) பாராளுமன்றம் அதிகாரங்களைக் கொண்டதாகக் காணப்பட்டாலும் சில வரையறைகள் காணப்பட்டன.

- ஆளுநர் நாயகத்தின் அதிகாரங்கள்
- அரசியல் யாப்பின் 29ஆவது பிரிவு
- வெளிநாட்டு விவகாரமும் பாதுகாப்பும் தொடர்ந்தும் பிரித்தானிய அரசின் பொறுப்பிலேயே இருப்பதால் அவை தொடர்பான சட்டங்கள் இயற்றமுடியாமை.

## 54. அமைச்சரவை : முக்கிய அம்சங்கள்

i) பிரதமரையும் அமைச்சர்களையும் கொண்ட குழுவே அமைச்சரவை (மந்திரிசபை) என்பர். பிரதமரே அமைச்சரவையின் தலைவராக விளங்குவார்.

ii) பாராளுமன்றத்தின் பெரும்பாண்மை அங்கத்தவர்களின் ஆதரவைப் பெற்ற ஒருவர் ஆளுநர் நாயகத்தால் பிரதமராக நியமிக்கப்படுவர்.

iii) பிரதமரின் ஆலோசனையின் பெயரில் ஏனைய அமைச்சர்கள் ஆளுநர் நாயகத்தால் நியமனம் செய்யப்படுவர். இவ்வாறு நியமிக்கப் படும்போது நீதி அமைச்சர் உட்பட இரண்டிற்குக் குறையாத அமைச் சர்கள் செனற் சபையில் இருந்தே நியமிக்கப்படுதல் வேண்டும்.

iv) அமைச்சர்களுக்கான அமைச்சுக்களை ஒதுக்குதல், மாற்றுதல் என்ப வற்றில் பிரதமர் பூரண அதிகாரம் பெற்றவராக விளங்கினார்.

v) பாதுகாப்பு அமைச்சும், வெளிவிவகார அமைச்சும் பிரதமரின் கீழ் செயல்படுதல் கட்டாயப்படுத்தப்பட்டது.

vi) தமது அமைச்சரவை தொடர்பாக தனிப்பட்ட முறையிலும், அரசாங்கச் செயற்பாடுகளில் கூட்டாகவும் செயற்படுவது அமைச்சரவையின் பொறுப்பாகும்.

vii) எவ்வாறாயினும் அமைச்சரவை பாராளுமன்றத்திற்கு பொறுப்புக் கூறுதல் வேண்டும்.

- 1947 ஆகஸ்ட் மாதம் நடைபெற்ற பொதுத்தேர்தலில் D.S.சேனநாயக்கா முதலாவது பிரதமராக நியமிக்கப்பட்டார்.

- முதலாவது பாராளுமன்றத்தின் சபை முதல்வராக S.W.R.D. பண்டார நாயக்காவும்,எதிர்க்கட்சி தலைவராக N.M. பெரேராவும், சபாநாயகராகச் சேர். பிரான்ஸிஸ் மொலமுரேயும் காணப்பட்டனர்.
- 1947 செப்ரெம்பரில் யாப்பு அமுலுக்கு வந்தது. 1948 பெப்ரவரி மாதம் 4ம் திகதி "டொமினியன்" அந்தஸ்தின் கீழ் இலங்கை சுதந்திரமடைந்தது.

**55. சோல்பரி அரசியல் யாப்பின் நன்மைகள்**

i) டொனமூர் அரசியல் யாப்பினைவிட சட்ட ஆக்க அதிகாரத்தில் கூடிய அதிகாரத்தை வழங்கியிருந்தது.

ii) பிரித்தானிய மாதிரியிலான அரசாங்க முறை தரப்பட வேண்டும் என்ற இலங்கையர்களின் நீண்ட நாள் கோரிக்கை நிறைவேற்றப்பட்டமை.

iii) மக்களின் நிர்வாக அதிகாரம் முழுமையாக மக்கள் பிரதிநிதிகளிடம் ஒப்படைக்கப்பட்டமை.

iv) அரசியல் யாப்பின் 29 ஆவது பிரிவு பாராளுமன்றம் சிறுபான்மையோருக்கு எதிராக சட்டங்களை இயற்றவிடாது தடுப்பதற்கு உதவியது.

**56. பிரித்தானியர்கால நிர்வாக முறை : முக்கிய அம்சங்கள்**

i) 1798 பிரடிக் நோர்த்தின் வருகையோடு சிவில் நிர்வாக முறை இலங்கையில் ஆரம்பிக்கப்பட்டது.

ii) நோர்த்தின் காலத்தில் மத்திய அரசாங்கத்தின் நடவடிக்கைகள் திணைக்களங்களை அடிப்படையாகக் கொண்டு இடம் பெற்றது.
**உ+ம் :-** 1800ல் நில அளவைத் திணைக்களமும், பொது வேலைத் திணைக்களமும், 1801ல் காணிப்பதிவுத்திணைக்களமும் ஆரம்பிக்கப்பட்டன.

iii) தோமஸ் மெயிட்லண்ட் முறையான சிவில் சேவையை ஆரம்பிப்பதற்கு நடவடிக்கை எடுத்தார்.
**உ+ம்:-** அனைத்து சிவில்சேவை உத்தியோகத்தரும் சுதேச மொழிகளை கற்பதற்கு உத்தரவு இட்டமை.

iv) கோல்புறூக் சீர்திருத்தங்களின் படி திணைக்களங்களின் நிர்வாகம் மேலும் ஒழுங்குபடுத்தப்பட்டது.

## 57. பிரித்தானியர் காலத்தில் இலங்கையின் நிர்வாகக் கட்டமைப்பு:-

- நிர்வாகம் பிரித்தானிய ஆட்சிமுறைக்கேற்ப அமைந்திருந்தது.




## 58. கோல்புறூக் யாப்பின் கீழ் ஏற்பட்ட நிர்வாக மாற்றங்கள்

i) கரையோரமும் மலையகமும் ஒரே நிர்வாகத்தின் கீழ் கொண்டு வரப்பட்டது.

ii) 16 நிர்வாக அலகுகளாக காணப்பட்ட இலங்கை 5 மாகாணங்களாக பிரிக்கப்பட்டது.

iii) செலவுகளை குறைப்பதற்காக சிவில் சேவையாளர்களது சம்பளம் குறைக்கப்பட்டு ஓய்வூதியம் நீக்கப்பட்டது.

iv) ஆளுநரின் அதிகாரங்கள் வரையறுக்கப்பட்டதோடு ஆளுநரின் ஆலோசனை சபைக்கு பதிலாக நிர்வாக சபை உருவாக்கப்பட்டது.

v) பிரித்தானிய நிர்வாக முறையின் கீழ் கிராமப் பிரதேசங்கள் கவனிக்கப் படாததால் மாகாணங்களின் எண்ணிக்கை அதிகரிக்கப்பட்டது.
உ+ம்:- 1848ல் வடமேல் மாகாணம், 1873ல் வடமத்திய மாகாணம் 1886ல் ஊவா மாகாணம், 1889ல் சப்ரகமுவ மாகாணம்.

vi) பிரதேச நிர்வாகம் கச்சேரிகளை மையமாகக் கொண்டு நடைபெற்றது. (அரசாங்க அதிபர், உப அரசாங்க அதிபர், கிராம சேவகர்)

vii) உள்ளூராட்சி மன்றங்கள் ஆரம்பிக்கப்பட்டது. பெருந்தோட்டத்துறையின் வளர்ச்சியினால் நகரங்கள் உருவானது நகரங்களில் சனத்தொகை பெருக்கமடைந்தபோது உள்ளூராட்சி மன்றங்கள் ஆரம்பிக்கப்பட்டது.
உ+ம்:-1865ல் மாநகரசபை, 1871ல் கிராமசபை, 1897ல் நகரசபை.

# பிரித்தானியரின் கீழ் இலங்கையின் சமூக பொருளாதார மாற்றங்கள் 2

1. **இலங்கையில் ஏற்பட்ட சமூக பொருளாதார மாற்றங்கள்: பிரதான கட்டங்கள்**

i) ஆரியர் இலங்கையில் குடியேறியகாலம் முதல் இலங்கையின் சமூக பொருளாதார முறை விவசாயத்தை பின்னணியாக கொண்டிருந்தது.

ii) அரசனின் பிரதான வருமான மூலமாக நிலம் இருந்தது. அரசனுக்கு சேவைகளை வழங்கி பிரதியுபகாரமாக மக்கள் நில உரிமையை அனுபவித்தார்கள்.

iii) உள்நாட்டு வியாபாரம் பண்டமாற்று அடிப்படையில் இடம் பெற்றது. அத்துடன் சாதி முறையை பின்னணியாகக் கொண்ட தன்னிறவு பொருளாதாரமுறை நிலவியது.

iv) எனவே போர்த்துக்கேயர் இலங்கை வந்த காலத்தில் இராஜகாரிய முறை, சாதிமுறை, சுயதேவை பொருளாதார முறை வீழ்ச்சியுற்றது.

v) போர்த்துக்கேயர் வர்த்தகத்திற்கு முக்கியத்தவம் கொடுத்து கரையோரப்பகுதியில் புதிய நிர்வாகத்தை மேற்கொண்டதால் விவசாயத்தை அடிப்படையாகக் கொண்ட சுயதேவைப் பொருளாதார முறை வீழ்ச்சியுற்றது.

vi) ஒல்லாந்தர் காலத்தில் இதுவரை நிலவி வந்த இராஜகாரிய முறைக்கு பதிலாக சம்பளத்திற்கு உழைக்கும் தொழிலாளர் வர்க்கம் உருவானது. ஆயினும் பொருளாதார நடவடிக்கைகளில் இராஜகாரிய முறையை பயன்படுத்திக்கொண்டனர்.

vii) இலங்கையில் முதன் முதலாக வர்த்தகப் பயிர்ச்செய்கையை ஒல்லாந்தர் ஆரம்பித்த போதிலும் ஆங்கிலேயர் காலத்திலேயே சுயதேவையை மையமாகக் கொண்ட விவசாய நடவடிக்கைகளுக்கு பதிலாக வர்த்தக பயிர்ச்செய்கையை மையமாகக் கொண்ட பொருளாதார முறை ஆரம்பமாகியது.

2. **பண்டையகால இலங்கையில் நில உரிமை நிலவிய விதம்**

i) காணிகளின் உரிமையாளர் அரசானவர், நிலங்களிலிருந்து கிடைத்த வருமானமே அரசனது பிரதானமான வருமானமாக இருந்தது.

ii) அரச பணிகளை புரிகின்ற அலுவலர்களுக்கு வேதனத்துக்குப் பதிலாக காணிகள் வழங்கப்பட்டது. இக்காணிகளை "சேவா பறவேனி" எனக் குறிப்பிட்டனர்.

iii) அரச பணியாளர்கள் அக்காணிகளில் பயிர்ச்செய்கைக்காக சாதாரண பொதுமக்களை ஈடுபடுத்தினர்.

iv) அவ்வாறு சாதாரண மக்கள் அனுபவிக்கும் காணிகளுக்காக அதன் உரிமையாளர்களான அரசனுக்கும் பிரதானிகளுக்கும் நிலவரி செலுத்தினர் இதனையே நிலத்தை பயன்படுத்தும் இராஜகாரிய முறை எனப்பட்டது.

v) மேலும் சகல வயது வந்த ஆண்களும் வருடத்தில் குறிப்பிட்ட தினங்கள் ஊதியமில்லாது கட்டாயமாக அரசனுக்கு சேவை செய்யவேண்டும். இதனையே "கட்டாய சேவை இராஜகாரிய முறை" என்பர்.

vi) கிராம சபைகளினதும் கிராமத் தலைவர்களினதும் கீழ் கட்டாய இராஜகாரிய முறை மக்களால் ஆற்றப்பட்டது. இச்சேவையை பயன்படுத்தி கிராமங்களில் குளங்கள், சிறு அணைக்கட்டுக்கள், கால்வாய்கள் பாதைகள் புனரமைக்கப்பட்டது.

**3. ஐரோப்பியர் ஆட்சிக் காலத்தில் கட்டாய சேவை இராஜகாரிய முறை**

i) தமது நிர்வாகப் பிரதேசங்களில் ஆற்றப்பட வேண்டிய சேவைகளுக்கான உழைப்பைப் பெற்றுக்கொள்வதற்காக கட்டாய சேவை இராஜகாரியமுறையை போர்த்துக்கேயர், ஒல்லாந்தர், பயன்படுத்திக் கொண்டனர்.

ii) 1796ல் கரையோரத்தை கைப்பற்றிக் கொண்ட ஆங்கிலேய வர்த்தக சங்கத்தினர் கட்டாய சேவை இராஜகாரிய முறையில் மாற்றத்தை ஏற்படுத்த முயற்சி மேற்கொண்டனர். அதாவது மக்கள் சேவையாகவோ, பொருளாகவோ வரிகளை செலுத்துவதற்கு பதிலாக பணமாகவே செலுத்த வேண்டியிருந்தது.

iii) பிரடெரிக் நோர்த் காலத்தில் (1802ல்) இராஜகாரிய முறை ஒழிக்கப்பட்டபோதிலும் அது வெற்றியளிக்காது போகவே தோமஸ் மெயிட்லண்ட் காலத்தில் கட்டாய சேவையான இராஜகாரிய முறை மீண்டும் நடைமுறைப்படுத்தப்பட்டது.

iv) கண்டிக்கலகத்தின் பின்னர் றொபேட் பிறவுண்றிக் நிலத்தை பயன்படுத்தும் இராஜகாரியமுறையை நீக்கிவிட்டு நிலத்துக்கு தானிய வரி ஒன்றை ஏற்படுத்தினார்.

v) ஆயினும் 1833 கோல்புறூக் சிபார்சின்படி கட்டாய இராஜகாரிய முறை நீக்கப்பட்டதோடு அரசினாலே இலவசகாணி வழங்குதலும் நீக்கப்பட்டு அதற்குப் பதிலாக காணிகளை விற்பனை செய்யும் கொள்கை அறிமுகப்படுத்தப்பட்டது.

**4. ஆளுநர் பிரடெரிக் நோர்த்தும் கட்டாய இராஜகாரிய முறையும்**

i) நோர்த் இராஜகாரிய முறையை ஒழிப்பதற்கு முன்வைத்த காரணங்கள்

- பிரித்தானியரின் நீதிப்போக்குக்கு ஏற்றதாக இருக்காமை.
- சுதேச அதிகாரிகள் பொது மக்களின் உழைப்பை உறிஞ்சித் தனிப்பட்ட தேவைக்காக அவற்றை பயன்படுத்தியமை.
- இலவசமாகப் பெற்ற சேவை முறை சுதந்திரமான மனிதர்களுக்குப் பொருந்தாத அடிமைமுறை போல் காணப்பட்டமை. இங்கிலாந்தில் அடிமைத் தொழில் செய்யும் வழக்கம் கண்டிக்கப்பட்டது.
- நாட்டின் அபிவிருத்திக்காக உழைப்பை பெற்றுக் கொள்வதற்கு தடையாக இருந்தமை.
- சேவைகளுக்காக நிலங்களை ஆட்சி செய்வதிலும் பார்க்க ஒரேயடியாக சொந்தக்காரரிடம் நிலங்களை கொடுத்துவிட்டால் அவர்

களிடமிருந்து வரியை பெற்று அரசாங்க வருமானத்தை அதிகரிக்க முடியும்.

ii) இராஜகாரிய முறைக்குப் பதிலாக நோர்த் முன்வைத்த ஆலோசனைகள்

- காணிகளை அனுபவிப்பதற்கு அரசாங்கத்திற்கு வரி ஒன்றைப் பெற்றுக் கொள்ளுதல் (நிலங்களின் விளைச்சல்களின் ஒரு பகுதியை வரியாகப் பெறுதல்)
- மக்களிடம் சேவை ஒன்றைப் பெறுவதற்குப் பதிலாக சம்பளம் வழங்குதல்

iii) நோர்த்தின் எதிர்பார்ப்பு தோல்வியடைந்தமைக்கான காரணங்கள்.

- மக்களிடம் வரிமூலம் பெற்றுக்கொண்ட தொகையைவிட அதிகமான சம்பளம் கொடுக்க வேண்டி இருந்தமை.
- பொதுச் சேவைகளுக்குத் தேவையான உழைப்பை பெறுவதில் ஏற்பட்ட நெருக்கடி நிலமை.
- சுயதேவை வாழ்க்கை முறைக்கு மக்கள் பழக்கப்பட்டிருந்தமையால் பணத்தின் முக்கியத்துவம் விளங்காமை.
- நிலச்சொந்தக்காரர்களே வரியை வசூலித்தமையால் தொழிலாளர் களை தொந்தரவு செய்தமை.

**5. கோல்புறூக் கட்டாயசேவை இராஜகாரிய முறையை நீக்கியமைக்கான காரணங்கள்**

- கோல்புறூக் முதன் முதல் கண்டித்த விடயம் இலங்கையில் நிலவிய இராஜகாரிய முறையாகும்.

i) பொருளாதார அபிவிருத்திக்கு ஏற்றதாக இல்லாமையும் மனித நீதிக்கு மாறானதாகவும் காணப்பட்டமை.

ii) தனிப்பட்ட முயற்சியாளர்களுக்குத் தடைகளின்றி தேவைப்படும் ஊழியத்தை பெற்றுக் கொள்வதற்கு முடியாதிருந்தமை.

iii) இராஜகாரிய முறையை அடிப்படையாகக் கொண்டு பொதுமக்களுக்கு பல்வேறு துன்பங்கள் இழைக்கப்படுவதை தடுத்தல்.

iv) இராஜகாரிய முறை மக்கள் தங்களுடைய சாதாரணத் தொழில்களை செய்ய விடாது தடுப்பதால் வியாபாரம், விவசாயமாகியவற்றின் வளர்ச்சிக்குப் பெரிதும் தடையாக இருந்தமை.

v) மக்கள் தாம் நினைத்தவாறு தங்கள் தொழில்களை மாற்றிக் கொள்ளவோ அல்லது ஒரு இடத்திலிருந்து குடிபெயர்ந்து வேறு இடத்துக்குப் போய்க் குடியிருக்கவோ முடியாதிருந்தமை.

vi) இராஜகாரியமுறை மக்களை அடிமைகள் ஆக்கியதோடு எல்லோருக் கும் ஒரேவித உரிமைகளை அளிக்க மறுத்தமை.

vii) இராஜகாரிய செயற்பாடுகளிலிருந்து விடுபட்டவர்களுக்கு கிராமத் தலைவர்கள் கடுமையான தண்டனை வழங்கி சேவைகளை பெற்றுக் கொண்டனர் இதனை கோல்புறூக் மிருகத்தனமான முறை என கருதியமை.

## 6. இராஜகாரிய முறை ஒழிப்பால் ஏற்பட்ட நன்மைகள்

- இராஜகாரிய முறை ஒழிக்கப்பட்டமை இலங்கைச் சரித்திரத்தில் ஒரு மைல்கல்லாகும்

i) மக்கள் தாம் விரும்பும் தொழிலை மேற்கொள்ள முடிந்தமை.

ii) கைத்தொழில், வியாபாரம் என்பன அபிவிருத்தியடைந்தது.

iii) வியாபாரத்தில் அரசாங்கத்துக்கு இருந்த ஏகபோக உரிமை ஒழிக்கப்பட்டு தனியார் முயற்சிகளுக்கு ஊக்கமளிக்கப்பட்டது.

iv) சிங்கள நில மானிய முறை ஆட்சியும், சாதிக் கட்டுப்பாடும் முடிவுக்கு கொண்டுவரப்பட்டது.

v) ஆளுநர்களின் நீதிமன்ற அதிகாரம் நீக்கப்பட்டு சட்டத்தின் முன் எல்லோரும் சமன், உயர்வு தாழ்வு கிடையாது என்ற உரிமை அளிக்கப்பட்டது.

## பெருந்தோட்டப் பயிர்ச்செய்கை

## 7. பெருந்தோட்டப் பயிர்ச்செய்கையின் தோற்றமும் அதன் பரவலும்

- 13ம் நூற்றாண்டளவில் நீர்வள நாகரிகம் அழிவுற்று நாகரிகம் தென்மேற்கு நோக்கி இடம் பெயர்ந்தவுடன் விவசாயப் பொருளாதாரம் மாற்றமடைந்து வியாபாரத்துடன் தொடர்புபட்ட பொருளாதாரம் இலங்கையில் ஆரம்பமாகியது எனலாம்.
- கரையோரப்பகுதிகளை ஆட்சிசெய்த போர்த்துக்கேயரும், ஒல்லாந்தரும் காட்டில் இயற்கையாக வளரும் கறுவாவைப் பெற்று வியாபாரம் செய்தனர்.
- காடுகளில் இயற்கையாக விளைந்த கறுவாவை தோட்டங்களில் பயிரிட ஒல்லாந்தர் தமது ஆட்சியின் இறுதி காலப்பகுதியில் முயற்சித்தனர்.
- இன்றைய கொழும்பு, கறுவாத்தோட்டம், கதிரான, எவரிவத்த போன்ற பிரதேசங்களில் ஒல்லாந்தரால் கறுவாச்செய்கை ஆரம்பிக்கப்பட்டது. இதன் மூலம் ஒல்லாந்தர் பெருந்தோட்டப் பயிர்ச்செய்கைக்கான அடித்தளத்தினை இட்டுக் கொண்டனர்.
- கி.பி 1833ல் கோல்புறூக் ஆணைக்குழுவின் ஆலோசனைகளினால் புதிய பொருளாதாரக் கோலங்களுக்கான அடிப்படைகள் உருவானது.
- அரசாங்கத்தின் அனுசரனையுடன் ஆரம்பித்த பரீட்சார்த்த கோப்பி உற்பத்தி 1840களில் மலைநாட்டுப் பிரதேசங்களில் பாரிய தோட்டங்களாக பரவியது.
- கோப்பிப்பயிரைத் தொடர்ந்து தேயிலை, இறப்பர், தென்னை என பெருந்தோட்டப் பயிர் பரவலடைந்து சென்றது.

## 8. பிரித்தானியர் காலத்தில் கறுவாச் செய்கை முடக்கம் அடைந்தமைக் கான காரணங்கள்

- பிரித்தானியர் கறுவாச் செய்கையை விருத்தி செய்வதற்காக நிலத்தை

பெற்றுக் கொடுத்தும், வரிச்சலுகைகளை வழங்கிய போதும் எதிர்பார்த்த இலாபத்தை அடைய முடியவில்லை.

i) பிரித்தானிய சந்தைக்கு இந்தியா, ஜாவா போன்ற இடங்களிலிருந்து கறுவா ஏற்றுமதி செய்யப்பட்டமை.

ii) கறுவாவுக்கு பதிலாக பயன்படுத்தத்தக்க கெஸியா(Cassia) என்ற இளக்கமான கறுவாவை இலகுவாக தென்இந்தியா, மேற்கிந்தியத் தீவுகள், பிலிப்பைன்ஸ் தீவுகள் ஆகிய பிரதேசங்களிலிருந்து பெற முடிந்தமை.

iii) கெஸியா எவ்வளவு ரசமில்லாத கறுவாவாக இருந்தபோதிலும் விலை குறைவாக காணப்பட்டதால் மக்கள் அதிகமாக கெஸிவாவை பயன் படுத்த தொடங்கியமை.

iv) ஜாவக் கறுவா இலங்கைக் கறுவா போலவேயிருந்தமை.

v) இலங்கையிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட ஒவ்வொரு இறாத்தல் கறுவாவிற்கும் தீர்வையாக மூன்று சிலிங் செலுத்த வேண்டியிருந்தது. ஆனால் ஏனைய நாடுகளில் வரித்தொகை குறைவாக காணப்பட்டது.

vi) 1853ல் கறுவா மீதான தீர்வையை நீக்கிய போதிலும் பிரித்தானிய சந்தையில் கறுவாவின் அளவு அதிகரித்தமையால் இலங்கைக் கறுவாவின் விலை வீழ்ச்சியடைய தொடங்கியமை.

**9. கோல்புறூக்கின் சிபார்சுகள் எவ்வாறு பெருந்தோட்டத்துறை விருத் திக்கு உகந்த சூழலை ஏற்படுத்தியது?**

i) ஆளுநர் வசமிருந்த வர்த்தகத்தின் ஏகபோக உரிமையை நீக்கி வெளிநாட்டு முதலீட்டாளர்கள் நாட்டில் தங்கியிருந்து முதலீட்டை மேற்கொள்ள தாராண்மைவாத (லிபரலிஸம்) ஆட்சி முறையை உருவாக்கியது.

ii) கட்டாய சேவை இராஜகாரிய முறையை ஒழித்து முயற்சியாளர் களுக்கு தடையின்றி ஊழியரை பெறுவதை இலகுவாக்கியது.

iii) காணி விற்பனைச் சட்டங்களை தகர்த்தல் இதன் மூலம் ஐரோப்பியர்கள் இந்நாட்டில் தங்கியிருப்பதற்கும் நிலத்தை உடைமையாக்கிக் கொள் வதற்கும் இலகுவாக்கியது.

iv) தனியார் முதலீட்டை ஊக்குவித்தல். சிவில் சேவையாளர்களுக்கு வழங்கப்பட்டிருந்த சலுகைகளை நீக்குவதன் மூலம் இந்நோக்கம் நிறைவேறியது.

**10. கோப்பிப் பயிர்ச்செய்கை : அறிமுகம்**

i) 1822ல் **ஜோர்ஜ் பேர்ட்** என்பவர் கம்பளையில் சிங்ஹபிட்டி எனு மிடத்தில் இலங்கையின் முதல் பிரித்தானிய கோப்பித் தோட்டத்தை திறந்தார்.

ii) 1824ல் ஆளுநர் **எட்வேட் பாண்ஸ்** கன்னொறுவையில் போராதனை எனுமிடத்தில் தனியார் கோப்பித் தோட்டத்தை ஆரம்பித்தார்.

iii) ஆளுநர் எட்வெட் பாண்ஸ் கோப்பிச் செய்கையின் விருத்திக்காக,


சேர். எட்வெட் பாண்ஸ்

- 1825ல் கோப்பிக்கு விதிக்கப்பட்டிருந்த தீர்வையை அகற்றினார்.
- வர்த்தக பயிர்களுக்கான தீர்வையை பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு இடை நிறுத்தினார்.
- தோட்டச் செய்கையில் ஈடுபடும் தொழிலாளர்களுக்கு கட்டாய இராஜ காரிய சேவையிலிருந்து விலக்களித்தார்.
- இலவசமாக காட்டு நிலங்களை வழங்கினார்.
- ஜமெய்க்காத் தீவில் கோப்பிச் செய்கையை நன்கு பயின்று வந்த R.B டிட்லர் (R.B.Titler) என்பவர் நன்கு அனுசரித்து கோப்பியைப் பயிரிட்டால் உச்ச இலாபத்தை பெறலாம் என இலங்கைத் தோட்டக்காரருக்கு எடுத்துக் காட்டினர்.
- 1834ல் 49 ஏக்கர் நிலத்தில் பயிரிடப்பட்ட கோப்பி 1841ல் 75000 ஏக்கர் நிலமாக அதிகரித்தது.

**11. 1840களில் இலங்கையின் கோப்பி செய்கை விருத்தியடைந்தமைக் குரிய காரணங்கள் (19ஆம் நூற்றாண்டின் முதல் அரைவாசியில் மலைநாட்டுப் பிரதேசங்களில் கோப்பிச் செய்கையின் மேம்பாட்டில் செல்வாக்குச் செலுத்திய காரணிகள்)**

i) 1833களில் இங்கிலாந்துக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட கோப்பிக்காக அறவிடப்பட்ட தீர்வை வரி குறைக்கப்பட்டமை.

ii) கோல்புறூக் சீர்திருத்தத்தின் மூலம் தோட்டங்களைப் பெற்றுக் கொடுத்தமையும் வெளிநாட்டு மூலதனத்தை தருவிப்பதற்கு வசதிகள் ஏற்படுத்தப்பட்டமையும் ஒரு காரணமாக இருந்தது.

iii) இங்கிலாந்துக்கு கோப்பியை அதிகளவு வழங்கிய மேற்கிந்திய தீவுகளில் கோப்பிச்செய்கை அழிவுற்றமை. அடிமை முறையை இல்லாதொழித்தமையால் ஊழியரை பெறமுடியாது போக உற்பத்தி வீழ்ச்சியடைந்தது.

iv) கோப்பிப் பயிர்ச்செய்கையில் முதலீடு செய்த உற்பத்தியாளர்கள் அதிக இலாபம் ஈட்டியமை. மேற்கு இந்தியத்தீவுகள் போன்று குறைந்த செலவில் தரமான கோப்பியை உற்பத்தி செய்ய முடிந்ததால் "கோப்பி வெறி" என வருணிக்கப்படும் வகையில் கோப்பி பயிர்ச் செய்கை விரிவடைந்தது.

v) ஐரோப்பிய நாடுகளில் கோப்பியை பருகும் பழக்கம் அதிகரித்தமை. குறிப்பாக பெல்ஜியம், பிரான்ஸ் மக்கள் கோப்பிக்கு அதிக கேள்வியை எழுப்பியமை.

vi) 1840ல் கொண்டு வரப்பட்ட தரிசு நிலச்சட்டம் (பாழ் நிலச்சட்டம்) மூலமாக அதிகளவான நிலங்கள் கோப்பி உற்பத்தியாளரக்கு கிடைத்தமை.

vii) வெற்றிகரமான பயிர்ச் செய்கை முறைகள் பின்பற்றப்பட்டமை.
**உ+ம்** :- மேற்கிந்தியதீவுகளில் பயிர்ச்செய்கை முறையை R.B. டிட்லர் அறிமுகம் செய்தமை.

viii) குறைந்த வேதனத்தில் தென்னிந்தியாவிலிருந்து தமிழ் தொழிலாளர்கள் கொண்டு வரப்பட்டமை.

ix) மலையகத்தின் பிரதான நகரங்களை இணைத்து பாதைகள் அமைக்கப்பட்டதால் போக்குவரத்துச் செலவுகள் குறைந்தமை.

## 12. கோப்பிச் செய்கையின் வீழ்ச்சிக்கான காரணங்கள்

- 1837 முதல் 1847 வரை வேகமாக கோப்பிச் செய்கை முன்னேற்றமடைந்திருந்தது. அதன் பின்னர் வீழ்ச்சியை நோக்கிச் செல்லத் தொடங்கியது.

i) 1848ல் ஏற்பட்ட உலகப் பொருளாதார பெருமந்தநிலை இலங்கையின் கோப்பிச் செய்கையை பெரிதும் பாதித்த ஒரு காரணியாகும்.

ii) 1853ல் கோப்பிச் செய்கை மீண்டும் சீரடைந்த போதிலும் 1868ம் ஆண்டு கோப்பிப் பயிருக்கு இலை வெளிறல் (ஹெமீலியா வெஸ்டாக்ஸ்) என்ற நோய் பரவியதால் உற்பத்தி முற்றாக பாதிக்கப்பட்டது.

iii) புதிய பயிர்கள் அறிமுகம் செய்யப்பட்டமை. கோப்பிச் செய்கையின் பின்னர் சிங்கோனா, கொக்கோ போன்ற பயிர் செய்யப்பட்டமையால் இக்காலம் "பல்பயிர்யுகம" என்பர். இப்பயிர்கள் மூலம் வருவாய் குறைவடைந்தமையால் கவனம் செலுத்தப்படவில்லை.

## 13. தேயிலைப் பயிர்ச் செய்கை : அறிமுகம்

- 1839ல் தேயிலைப்பயிர் அறிமுகஞ் செய்யப் பட்டாலும் 1867க்குப் பின்னரே தேயிலை பெருந்தோட்டப்பயிராகப் பயிரிடப்பட்டது. **ஜேம்ஸ் ரெயிலர்** பொருளாதார ரீதியில் தேயிலையை பயிரிட்டார்.



- 1867ல் 175 ஹெக்டயரில் (சராசரியாக 437 ஏக்கர்) ஆரம்பமான தேயிலைச் செய்கை 1875ல் 500 ஏக்கராகி 1887ல் ஒன்றரை லட்சம் ஏக்கராக வியாபித்தது.
- 1920களில் புதிய காணிகளில் தேயிலை பயிரிடப்பட்டமையால் இலாபம் அதிகரித்ததோடு 1925ல் **தலவாக்கலையில்** தேயிலை ஆராய்ச்சி நிலையமும் ஆரம்பிக்கப்பட்டது.

- 1929ல் ஏற்பட்ட உலகப் பெரும் பொருளாதார மந்தத்துடன் தேயிலை ஏற்றுமதி வீழ்ச்சியடைந்தது.

## 14. 1890களில் தேயிலைப் பயிர்ச்செய்கை விருத்தியடைந்தமைக்கான காரணங்கள்

i) பிரித்தானிய (லண்டன்) வணிகச் சந்தையில் தேயிலை விலை அதிகரித்தமை.

ii) தேயிலை உற்பத்தியில் முதலிட ஐரோப்பிய செல்வந்தர்கள் முன் வந்தமை.

iii) பசளையின் உபயோகம் அதிகரித்தமை.

iv) உற்பத்தி பெருமளவுக்கு இயந்திரமயமானமை.

v) புகையிரதம் மற்றும் ஏனைய போக்குவரத்துத் துறைகள் விருத்தி யடைந்தமை.

vi) கொழும்புத் துறைமுகம் அபிவிருத்தியடைந்தமை.

vii) தென்னிந்தியத் தொழிலாளர்களைக் கொண்டுவர முடிந்ததால் உழைப்பை இலகுவாகப் பெற்றுக்கொள்ள முடிந்தமை.

viii) பிரித்தானிய (லண்டன்) சந்தையில் சீனத் தேயிலைக்கு இருந்த கேள்வி குறைந்தமை.

## 15. இறப்பர் பயிர்ச்செய்கை : அறிமுகம்

i) இங்கிலாந்தின் கியூகார்டின் என்ற தாவர ஆராய்ச்சி நிலையத்தி லிருந்து எடுத்துவரப்பட்ட இறப்பர் பயிரை **ஹென்றி விக்ஹெம்பி** என்பவர் கம்பஹா ஹெனரத் கொடை பூங்காவில் முதல் முதலாக நாட்டினார்.

ii) 1890களில் இறப்பர் பெருந்தோட்டப் பயிராக மாறியபோதிலும் 1913களில் இறப்பர் செய்கை விளைநிலங்களின் அளவு அதிகரித்து காணப்பட்டது.

iii) இறப்பர் பயிர்ச் செய்கையின் வளர்ச்சிக்கான காரணங்கள்.

- முதலாம் உலகப் போரின்போது இறப்பர் விலை அதிகரித்தமை
- ஐக்கிய அமெரிக்கா அரசு இந்நாட்டிலிருந்து அதிகளவிலான இறப்பரை கொள்வனவு செய்தமை.
- இங்கிலாந்தில் ஏற்பட்ட கைத்தொழில் புரட்சியால் மோட்டார் வாகனக் கைத்தொழில் விருத்தியடைந்தமை.

iv) 1929களில் ஏற்பட்ட உலக பொருளாதார மந்தநிலை காரணமாக இறப்பரின் விலை வீழ்ச்சியடைந்தது.

## 16. தென்னைப் பயிர்ச்செய்கையின் முக்கிய அம்சங்கள்

i) பண்டைய காலம் முதல் தென்னை இலங்கையில் பயிரிடப்பட்டு வந்தது. சிங்களவர் இலங்கையின் தென்மேற்குப் பகுதியில் குடியேறியதும் தென்னைப் பயிர் வீட்டுத்தோட்டப் பயிராக வளர்ச்சி பெற்றது.

ii) 1870களில் பிரித்தானியர்களினால் தென்னை பெருந்தோட்டப் பயிராக மாற்றப்பட்டதன் பின்னர் வடமேல் மாகாணத்திலும், மேல்மாகாணம், தென்மாகாணங்களிலும் மற்றும் கீழ் மாகாண கரையோரப்பகுதிகளிலும் தென்னந் தோட்டங்கள் திறக்கப்பட்டது.

iii) 1910களில் தெங்குப் பயிர்ச் செய்கையில் ஐரோப்பிய முதலீட்டாளர்கள் ஆர்வம் காட்டாவிட்டாலும் சுதேசிகள் அதற்கு ஒத்துழைப்பு வழங்கியமை. அத்தோடு 1920களில் முன்னரைவிட ஏற்றுமதி அதிகரித்தது.

iv) தெங்கு உற்பத்தியில் அரைப்பங்கு உள்நாட்டு நுகர்வுக்கு பயன்படுத்தப் பட்டது.

v) தெங்குப்பயிர்ச் செய்கையின் முன்னேற்றத்துக்காக லுனுவிலவில் ஆராய்ச்சி நிலையமும் உருவாக்கப்பட்டது.




**17. ஆங்கிலேயர் ஆரம்பித்த பெருந்தோட்டப் பயிர்ச்செய்கையால் ஏற்பட்ட சாதக, பாதக விளைவுகள்**

i) **சாதக விளைவுகள்**

- பொருளாதார முறையானது பெருந்தோட்டப் பயிர்ச்செய்கை முறையை அடிப்படையாகக் கொண்ட ஏற்றுமதி இறக்குமதி பொருளாதாரமாக மாறியது.
- போக்குவரத்து, தொடர்பாடல், வங்கி, காப்புறுதி ஆகிய உட்கட்டமைப்புத் துறைகள் வளர்ச்சியடைந்தது.
- புதிய தொழில் வாய்ப்புக்கள் ஏற்பட்டதுடன் புதிய நகரங்கள் தோன்றியமை.
- அரசினது பிரதான வருமான மார்க்கமாகப் பெருந்தோட்டத்துறை விளங்கியது.
- நிலம் ஒரு சந்தைப் பொருளாக மாறியமை.

ii) **பாதக விளைவுகள்**

- வாழ்வாதார விவசாயம் புறக்கணிக்கப்பட்டது.
- தன்னிறைவு பொருளாதாரம் வீழ்ச்சியடைந்தது.
- கண்டி மக்கள் விவசாய நிலங்களை இழந்தனர்.
- மலையக தமிழர் பிரச்சனை தோன்றியது.

**18. கிராமிய பயிர்ச்செய்கை : பிரதான விடயங்கள்**

i) இலங்கையில் ஆதிகாலம் முதல் பிரதான வாழ்வாதாரமாகத் திகழ்ந்தது கிராமிய விவசாயமாகும்.

ii) நெல், ஏனைய தானிய வகைகள், மரக்கறி வகைகள், கிழங்கு வகைகள் கிராமிய விவசாயத்திலே உற்பத்தியாகியது.

iii) பொருந்தோட்டத்துறையின் உருவாக்கத்தினால் ஆங்கிலேயர் கிராமிய விவசாயத்தின்மீது அதிக அக்கறை எடுக்கவில்லை.

iv) ஆயினும் ஆளுநர்களான நோர்த், மெயிட்லன்ட் போன்றவர்கள் நீர்ப்பாசனத்தை புனரமைத்து நெல் உற்பத்தியினை விருத்தி செய்வதில் அக்கறை காட்டியபோதிலும் வெற்றியளிக்கவில்லை.

v) பெருந்தோட்டச் செய்கையின் விருத்திக்காக அரசு மேற்கொண்ட நடவடிக்கைகள் வாழ்வாதாரப் பயிர்ச்செய்கையைப் பெரிதும் பாதித்தது. எடுத்துக்காட்டாக:

- தரிசு நிலச்சட்டத்தால் கிராமத்தவர்களின் காணிகள் இல்லாமற் போய் விவசாய நடவடிக்கைகள் பாதிக்கப்பட்டது.
- பெருந்தோட்டப் பயிர்ச்செய்கைக்கு காணிகள் வழங்கப்பட்டமையால் மலையக நெற்பயிர் செய்கை அழிவுற்றது.
- ஆங்கில ஆட்சியாளர்கள் பாரம்பரிய விவசாயத்தை கவனியாது விட்டமையால் விவசாயிகள் பாதிக்கப்பட்டனர்.
- கட்டாய சேவையான இராஜகாரிய முறை நீக்கப்பட்டதால் விவசாய நடவடிக்கைகள் வீழ்ச்சியடைந்தமை.

**19. 1848இற்குப் பின்னர் தேசிய விவசாயத்தை மேம்படுத்துவதற்காக பிரித்தானிய அரசாங்கம் கவனம் செலுத்தியமைக்கான காரணங்கள்**

i) உள்ளூர் விவசாய வீழ்ச்சிக்கு எதிராக மக்கள் மத்தியில் ஏற்பட்ட குழப்பத்தைத் தவிர்த்தல்

ii) கிராமிய விவசாயத்தை மேம்படுத்த பிரித்தானிய ஆட்சியாளர்கள் ஒத்துக் கொண்டமை.

iii) உணவு இறக்குமதிக்காக ஏற்பட்ட செலவினத்தைக் குறைப்பதற்கும் உள்நாட்டு விவசாயத்தை விருத்தி செய்து கொள்ளல்.

iv) பொருளாதாரத்தை விருத்தி செய்தல்.

**20. நீர்ப்பாசனத்தை புனரமைப்பதில் கவனம் செலுத்திய பிரித்தானிய ஆளுநர்களும் : பணிகளும்**

i) **ஹென்றிவோட் (1855-1860):-** இவரே நீர்ப்பாசன அபிவிருத்திக்கு முதன் முதலாக அத்திவாரமிட்டவர். புனரமைக்கப்பட்ட குளங்கள் கிழக்கு மாகாணத்தில் இறக்காமம்குளம், அம்பாறைக்குளம், தென் மாகாணத்தில் கிரம, ஊறுபொக்க குளங்கள் மாத்தளை, ஊவா பிரதேசங்களில் சிறிய குளங்கள் புனரமைக்க உதவினார்.

ii) **ஹெர்கியூலிஸ் ரொபின்சன் (1865-1872):-** சிறிய குளங்கள் புனரமைப்பில் கவனம் செலுத்தினார். திஸ்ஸமகாராமகுளம் இவராலேயே புனரமைக்கப்பட்டது. புனரமைப்புக்குரிய செலவை விவசாயிகளிடமிருந்து தவணை முறையில் அறவிட்டார்.

iii) **வில்லியம் கிரகெரி (1872-1877):-** கிராம சபைகளின் உதவியுடன் இராசரட்டைப் பகுதிக் குளங்களை புனரமைத்தார். கந்தளாய், பசவக்குளம் ஆகியனவும் யோதகால்வாயின் ஒரு பகுதியையும் புனரமைத்தார்.

iv) **ஆதர் கோடன் (1883-1890):-** கலாவாவியை புனரமைத்து ஆளுநர் கிரகெரி ஆரம்பித்த கலாவாவியை திருத்தியமைக்கும் பணியை பூர்த்தி செய்தார். ஊவா, சப்பிரகமுவ மாகாணங்களில் சிறிய புனரமைப்புக்களை மேற்கொண்டார்.

v) **வெஸ்ட ரிஞ்வே (1895-1903):-** வடமாகாணத்தில் யோதவாவி, நாச்சதுவவாவி என்பவற்றை புனரமைத்தார். நீர்ப்பாசனத் திணைக்களத்தை 1900ல் நிறுவினார்.

vi) **ஹென்றி பிளாக் (1903-1907):-** நுவரவாவியை புனரமைத்தார்.

vii) **ஹென்றி மங்கலம் (1907-1913):-** மினிப்பே கால்வாயை புனரமைத்தார்.

**சேர் ஹென்றிவாட்** **ஹொர்கிலிஸ் ரொபின்சன்** **சேர் வில்லியம் கிரகரி**

## 21. போக்குவரத்து அபிவிருத்தி : முக்கிய அம்சங்கள்

i) 1815இல் மலையகம் கைப்பற்றப்பட்ட பின்னர் ஆங்கிலேயர் மலையகத்திற்கும் கரையோரப் பிரதேசத்திற்கும் இடையே தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்வதற்கு போக்குவரத்துப் பாதைகளை அமைப்பதில் கவனம் செலுத்தினர்.

ii) 1820 ஆம் ஆண்டு கொழும்புக்கும் கண்டிக்கும் இடையிலான தரைப்பாதை ஆளுநர் எட்வேட் பாண்ஸ் காலத்தில் அமைக்கப்பட்டது. இவரது முயற்சிக்கு மேயர் ஸ்கின்னர், கப்டன் டோசன் உதவியாளர்களாக இருந்தனர்.

iii) 1833 வரை இராஜ காரிய முறையைப் பயன்படுத்தி பெருந்தெருக்கள் அமைக்கப்பட்டது.

iv) 1833க்கும் 1850க்கும் இடையில் வீதிகளை அமைக்கும் பணி தடைப்பட்டிருந்தமைக்குரிய காரணங்கள் வருமாறு :

- 1833ஆம் ஆண்டு கொண்டு வரப்பட்ட கோல்புறூக் யாப்பின்படி இராஜகாரிய முறை நீக்கப்பட்டமை.
- 1848ஆம் ஆண்டு ஏற்பட்ட கோப்பி நெருக்கடியையடுத்து உண்டான


பிரித்தானியர் காலத்தில் பெருந்தெருக்கள்
பருத்தித்துறை
—— பாதை (1814 – 1850)
- - - - பாதை (1851 – 1872)
மல்வத்துஓயா
திருகோணமலை
அநுராதபுரம்
கலாஓயா
புத்தளம்
மகாவலிகங்கை
தம்புள்ள
மட்டக்களப்பு
மாத்தளை
குருநாகல்
கண்டி
அம்பேபுச
ஹங்குரான்கெத்த
மாவநெல்லை
கம்பளை
நாவலப்பிட்டி
யட்டியாந்தோட்டை
சின்கத்தேனை
களனி கங்கை
கொழும்பு
நுவரெலியா
பதுளை
திக் ஓயா
பண்டாரவளை
அப்புத்தளை
இரத்தினபுரி
களுகங்கை
பலாங்கொடை
பாணந்துறை
பால்மடுள்ள
களுத்துறை
மாணிக்க கங்கை
இரக்குவரை
வளவே கங்கை
கிங் கங்கை
அம்பாந்தோட்டை
மாத்தளை
காலி


பிரித்தானியர் காலத்தில் புகையிரதப் பாதைகள்
காங்கேசன்துறை
யாழ்ப்பாணம்
மாங்குளம்
தலைமன்னார்
மன்னார்
வவுனியா
மதவாச்சியா
திருகோணமலை
அநுராதபுரம்
கல்ஓயா
புத்தளம்
மாகோ
மட்டக்களப்பு
சிலாபம்
குருநாகல்
மாத்தளை
பொல்காவலை
மகாநுவர
நீர்கொழும்பு
பேராதெனிய
கம்பஹா
ராகம
அவிஸ்ஸாவளை
கொழும்பு
பதுளை
நாஓயா
ஹற்றன்
பண்டாரவளை
இரத்தினபுரி
ஒப்பநாயக்கா
காலி
மாத்தறை

பொருளாதார வீழ்ச்சியினால் அரசுக்குக் கிடைத்த வருமானம் குறைந்தமை.

v) 1850 ஆம் ஆண்டுக்குப் பின்னர் போக்குவரத்துத் துறையில் ஏற்பட்ட மாற்றங்கள் வருமாறு

- வீதிகளை அமைப்பதில் புதிய தொழில்நுட்ப முறைகள் பின்பற்றப் பட்டது.
- கல்லையும் தாரையும் பயன்படுத்தி வீதிகள் அமைக்கப்பட்டது.
- புகையிரதப் பாதைகள் உருவாக்கப்பட்டன.
- நவீன போக்குவரத்துச் சாதனங்கள் பயன்படுத்தப்பட்டது.

உ+ம் :- புகையிரதம், லொறி, மோட்டார் வாகனம், கப்பல்

- கொழும்புத் துறைமுகம் விருத்தி செய்யப்பட்டது.

## 22. புகையிரதப் பாதைகள் உருவாக்கப்பட்டமைக்குரிய காரணங்கள்

- புகையிரதப் பாதையை அமைக்க ஆரம்பத்தில் ஹென்றி வார்ட் என்ற ஆளுநர் உதவியாக இருந்தார்.

i) பெருந்தோட்டத் துறையின் வளர்ச்சி

ii) பெருந்தோட்டப் பொருட்களை எடுத்துச் செல்வதற்கு காணப்பட்ட மாட்டு வண்டில்களின் எண்ணிக்கை போதாமை.

iii) இரும்பு வளையம் பொருத்தப்பட்ட மாட்டு வண்டில்களால் வீதிகள் பெருமளவு பழுதடைந்தது. இதனைப் புணரமைக்க அரசுக்கு அதிகளவு செலவு ஏற்பட்டமை.

iv) துரித போக்குவரத்துச் சாதனம் காணப்படாமை.



பிரித்தானியர் காலத்தில் அமைக்கப்பட்ட மலைநாட்டுப் புகையிரதப் பாதை

**23. போக்குவரத்துப் பாதைகள் கொழும்பை மையமாகக் கொண்டு அமைக்கப்பட்டமைக்கான காரணங்கள்**

i) பிரித்தானியரின் தலைமையகம் கொழும்பில் காணப்பட்டமையினால் பல்வேறு நிர்வாகத் தொடர்புகளை மேற்கொள்ள.

ii) வர்த்தகப் பொருட்களைப் பல்வேறு இடங்களுக்குக் கொண்டு செல்ல

iii) உற்பத்திப் பொருட்களைத் துறைமுகங்களுக்குக் கொண்டு செல்ல.

iv) உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் தோன்றும் ஆபத்துக்களைத் தவிர்க்க.

**24. பிரித்தானியர் இலங்கையில் கைத்தொழில் அபிவிருத்தியில் ஆர்வம் காட்டாமைக்குச் செல்வாக்குச் செலுத்திய காரணிகள்**

i) பெருந்தோட்டப் பயிர்ச்செய்கை அதிக இலாபம் தரும் துறையாக அமைந்தமை.

ii) பிரித்தானியாவில் உற்பத்தியாகும் கைத்தொழில் பொருட்களுக்கு இலங்கையில் சந்தை வாய்ப்பினைப் பெறுவதற்கு.

iii) பிரித்தானியாவின் கைத்தொழில் பொருட்களுக்கான விவசாய மூலப் பொருட்களைப் பெற்றுக் கொள்வதற்கு.
**உ+ ம் : -** றப்பர், கொக்கோ

**25. பிரித்தானியர் ஆட்சியால் இலங்கைச் சமூகத்திலும், பொருளாதாரத் திலும் ஏற்பட்ட மாற்றங்கள்**

i) நீண்ட கால தேசிய தனித்துவத்தைக் கொண்ட எமது பாரம்பரியம் பிரித்தானியரின் ஆட்சியுடன் நவீனமாகியது.

ii) 19ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வேகமாக மேலைத்தேய மயத்துக் குள் எமது நாடு சென்றது.

iii) முதலீட்டாளர்கள், தொழிலாளர்கள் வெளிநாடுகளிலிருந்து காலத் துக்குக்காலம் ஆங்கிலேய ஆட்சியாளர்கள் அழைத்துவந்ததன் மூலம் எமது நாட்டை முதலாளித்துவப் பொருளாதார முறையில் வளர்த்துக் கொண்டனர்.

iv) இதனால் தேசிய தன்மைக்குரிய அரசியல், சமூக, பொருளாதார, கலாசார துறைகள் சீர்குலைந்ததோடு மேலத்தேய வாழ்க்கை முறை மக்கள் மத்தியில் மேலோங்கியது.

v) இதனூடாகவே சமூகத்தில் மத்திய வர்க்கமும், தொழிலாளர் வர்க்க மும் உருவாகியது.

**26. மத்திய வகுப்பினர் எனப்படுவோர் யாவர்?**

i) கோல்புறூக் சீர்திருத்தத்தின் கீழ் நடைமுறைப்படுத்தப்பட்ட ஆங்கிலக் கல்வி காரணமாக ஐரோப்பிய கலாச்சாரத்தை மதிக்கும், தேசிய கலாச்சாரத்தை ஒதுக்கும் செல்வந்தர்களின் குழுவே மத்திய வகுப்பினர் ஆவர்.

ii) பிரித்தானிய ஆட்சி ஆரம்பித்த காலத்தில் ஒல்லாந்தரே மத்திய வகுப்பு நிலையை அடைந்திருந்தனர். ஆயினும் 19ம் நூற்றாண்டின் இறுதியில் ஓரளவுக்குச் செல்வாக்குள்ள மத்திய வகுப்பினர் இலங்கையில் தோன்றினர்.

iii) இலங்கையின் தென்மேற்கு கரையோரப் பிரதேசங்களிலும், வடக்கிலும் கிறிஸ்தவ சமயப் பாடசாலைகள் தொடங்கப்பட்டன. இதில் உயர் அந்தஸ்து பெற்ற தலைவர்களினதும், தாழ்ந்த குலத்தில் வல்லமை படைத்தவர்களதும் பிள்ளைகள் ஆங்கிலக் கல்வியை பெற்று உயர் பதவிகளை வகித்தனர்.

iv) தேசிய செல்வந்த வகுப்பினர் மது விற்பனை செய்தல், ரேந்தை கொள்வனவு செய்தல், பெருந்தோட்டத்தொழிலுக்கான உபசேவைகள், தேவையான பொருட்கள் போன்றவற்றினூடாக செல்வத்தை ஈட்டினர்.

v) தங்கள் செல்வத்தை தோட்டங்களை கொள்வனவு செய்தல், வர்த்தகப் பயிர்களை உற்பத்தி செய்தல்,தமது பிள்ளைகளுக்கு உயர் படிப்பை பெற்றுக்கொடுத்தல் போன்ற நடவடிக்கைகளில் ஈடுபடுத்தினர்.

vi) 20ம் நூற்றாண்டின் முற்பகுதியில் அரசியலமைப்புச் சீர்திருத்தங் களுக்கான போராட்டங்களில் முன்னனி வகித்த இவர்கள் தேசிய நடுத்தர வர்க்கத்தினர் ஆயினர். இவர்கள் ஐரோப்பிய ஆட்சி முறையின் காரணமாக உருவான புதிய அதிகார சக்தியாகியமை.

vii) ஆங்கிலக் கல்வியைப் பெற்று மேலைத்தேச நாகரிகத்துக்குப் பழக்கப்பட்டோர் உருவாகியதுடன் அவர்களிடம் செல்வம், கல்வி என்பன இருந்தபோதிலும் ஆட்சியதிகாரம் இல்லாதிருந்தது.

**27. தொழிலாளர் இயக்கத்தின் வளர்ச்சி**

i) தேசிய வழக்கத்தின்படி அரச பணிகளுக்காக உழைப்பைக் கட்டாய சேவை இராஜகாரிய முறையினாலேயே பெற்றுக்கொள்ளப்பட்டது.

ii) பிரித்தானியரின் கீழ் இந்நாட்டில் பெருந்தோட்டப் பயிர்ச்செய்கை ஆரம்பமானதுடன் உழைப்பைப் பணத்துக்கு விற்கும் முறை ஆரம்ப மானது. இதன் காரணமாக தொழிலாளர் வகுப்பொன்று உருவானது.

iii) பெருந்தோட்டத்திற்குத் தேவையான உழைப்பை இந்நாட்டில் பெற்றுக் கொள்ள இயலாமையினால் தென்னிந்தியாவிலிருந்து தொழிலாளர் களைப் பெற்றுக் கொண்டனர்.

iv) 19ம் நூற்றாண்டில் ஏற்பட்ட நகரவாக்கம் காரணமாக பொதிகளை ஏற்றி இறக்குதல், துணி சலவை செய்தல்,தள்ளுவண்டிகளை இழுத்தல், கப்பல் சீரமைத்தல் போன்ற பல்வேறு தொழில்களில் தென்னிந்தியத் தொழிலாளர்களுடன், சிங்களவர்களும் ஈடுபட்டனர்.

v) இவ்வாறாக நகரத்தொழிலாளர்கள், பெருந்தோட்டத் தொழிலாளர்கள் என்று வெவ்வேறுபட்ட இரு தொழிலாளர்கள் வகுப்பினர் உருவானது.

**28. தொழிலாளர் வகுப்பின் மேற்கொண்ட வேலை நிறுத்த போராட்டங்கள்**

- 19ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மத்திய வகுப்பினரின் ஒத்துழைப் புடன் தொழிலாளர் வகுப்பினர் உரிமைக்குரல் எழுப்பினர்.

i) 1893ல் கொழும்பு அச்சகத் தொழிலாளர்களின் வேலை நிறுத்தப் போராட்டம் (தொழிலாளர் போராட்டம் என்ற வகையில் மேற்கொண்ட முதல் நடவடிக்கை)

ii) தள்ளுவண்டித் தொழிலாளர்களின் வேலை நிறுத்தப்போராட்டம்.

iii) வெள்ளவத்தை ஆடைத்தொழிற்சாலை வேலை நிறுத்தப்போராட்டம்

iv) சலவைத் தொழிலாளர் வேலை நிறுத்தப்போராட்டம்.

**29. தொழிற்சங்கங்கள் உருவாக்கப்பட்டமை**

i) பல்வேறு தொழிலைச் செய்வோர்களை ஒன்றிணைத்து உருவானதே தொழிற்சங்கங்கள் ஆகும்.

ii) "இலங்கை அச்சகத் தொழிலாளர் சங்கம்" இலங்கையில் உருவான முதலாவது தொழிற்சங்கம் ஆகும்.

iii) நகரத் தொழிலாளர்கள் ஒன்றிணைந்து 1920களில் தொழிற்சங்கத்தை நிறுவினர். இதற்கு A. E.குணசிங்க தலைமை வகித்தார். இச்சங்கத்தின் நோக்கங்கள் வருமாறு,

- தொழிலாளர்களின் தொழில் நிலைமையை மேம்படுத்துதல்
- ஊதிய உயர்வை ஏற்படுத்திக் கொள்ளுதல்
- உரிமைக்காக போராட்டங்களை மேற்கொள்ளுதல்

iv) தோட்டத் தொழிலாளர்கள் 1935களில் பின் தொழிற்சங்கங்களை நிறுவினர். இதற்கு கோ. நடேசஐயர் தலைமை வகித்தார்.

v) இங்கிலாந்தில் கற்று மாக்ஸிய அரசியல் தலைவர்களால் ஈர்க்கப்பட்ட மத்தியதர வர்க்கத்தைச் சேர்ந்த வாலிபர்கள் தொழிலாளர்களை ஒன்று திரட்டிய முதலாவது அரசியல் கட்சியாக 1935ல் இலங்கை சமசமாஜக்கட்சி உருவானது. இதற்கு பிலிப் குணவர்த்தன, டாக்டர் எஸ். ஏ. விக்கிரமசிங்ஹ, என். எம். பெரேரா என்போர் தலைமை தாங்கினர்.

**30. இலங்கைத் தேசிய இயக்கம்**

i) 19ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலேயே இலங்கையில் தேசிய இயக்கம் ஆரம்பமானது.

ii) இலங்கைத் தேசிய இயக்கம் இரு பகுதிகளைக் கொண்டது.

- தேசிய மறுமலர்ச்சி இயக்கம்

  தேசியக் கல்வி கற்றவர்கள் சமய, கலாசார மறுமலர்ச்சி ஒன்றைத் தோற்றுவிப்பதற்காக ஆரம்பிக்கப்பட்டது.

- அரசியல் யாப்புச் சீர்திருத்த இயக்கம்

  ஆங்கிலம் கற்றவர்கள், அரசியல் அதிகாரத்தைக் கோரிப் பெறுவதற்காக ஆரம்பித்தனர்.

iii) தேசிய இயக்கத்தின் முக்கிய நிகழ்வுகளாக 1912 மது ஒழிப்பு இயக்கம், 1915 சிங்கள, முஸ்லீம் கலவரம், 1919 இலங்கை தேசிய சங்கம் தோற்றம் ஆகியவை இருந்தது.

## சமய கலாசார மறுமலர்ச்சி

**31. மிசனரிக் கல்வி முறை எமது சமூதாயத்தில் செல்வாக்குச் செலுத்திய முறைகள்**

i) சுதேச மொழிகளைக் கற்பிப்பதில் மிசனரிகள் காட்டிய ஆர்வம். கிறிஸ்தவத்தை பரப்பும் நோக்குடன் மிசனரிப் பாடசாலைகளில் கிறிஸ்தவ சமயத்தைப் பற்றிச் சிங்களத்திலும் தமிழிலும் அச்சிட்டு வெளியிட்டமை.

ii) மிசனரிப் பாடசாலைகளுக்கு அரசாங்கத்தின் அனுசரனை கிடைக்கப் பெற்றது. இதனால் உதவிகள் கிடைக்காது தாய்மொழிப் பாடசாலைகள் வீழ்ச்சியடைந்தமை.

iii) ஆங்கிலம் மூலம் கல்வி வழங்கும் உயர் பாடசாலைகளை நகரங்களில் நிறுவியமை. இங்கு பயில்வது கவர்ச்சியாகக் கருதப்பட்டன. அரசாங் கத்தில் பதவி, சலுகை பெற உதவியமை கிறிஸ்தவ சமயத்தைத் தழுவிக் கொள்ள காரணமாகியது.

iv) மிசனரிப் பாடசாலைகள் நவீன வசதிகளைக் கொண்டிருந்தமையால் சுதேசிகளின் மனத்தைக் கவர்ந்தமை.

**32. இலங்கை மக்கள் மிசனரிக் கல்வி முறையை எதிர்த்தமைக்கான காரணங்கள்**

i) தாய்மொழிக் கல்வி நிலையங்கள் செயலிழந்தமை.

ii) மிசனரி அமைப்புக்களின் சலுகைகளால் இலங்கையர் தமது சமயத்தை கைவிட்டு கிறிஸ்தவ சமயத்தைத் தழுவிக் கொண்டமை.

iii) பௌத்த, இந்து மதத்தவர்கள் சிலைகளை வணங்குபவர்கள் என பௌத்த இந்து மதங்களை இழிவு படுத்தியமை.

iv) மிசனரிக் கல்வி முறையால் எமது நாட்டின் பாரம்பரிய கலாசாரம் பாதிக்கப்பட்டமை.

**33. சமய கலாசார மறுமலர்ச்சி என்றால் என்ன?**

- மிசனரிக் கல்வி முறையினால் பௌத்த, இந்து, இஸ்லாமிய கலாச் சாரத்தில் பாதிப்புக்கள் ஏற்பட்டன. இதனை நிவர்த்தி செய்ய பல செயற்திட்டங்கள் முன்வைக்கப்பட்டன. இத்தகைய முயற்சிகள் மத, கலாசார புத்துணர்வு அல்லது கலாசார மறுமலர்ச்சி என்பர்.

**34. பௌத்த சமய மறுமலர்ச்சிக்காக மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள்**

i) பிரிவெனாக் கல்வி நிறுவனங்கள் அமைக்கப்பட்டமை

ii) வாத, பிரதி வாதங்கள் மேற்கொள்ளப்பட்டமை.

iii) நாடகங்கள் மேடையேற்றப்பட்டமை.

iv) கவிதைகள், உரைநடைகள் எழுதப்பட்டமை.

v) பத்திரிகைகள் வெளியிடப்பட்டமை.

vi) பௌத்த ஆங்கிலப் பாடசாலைகள் ஆரம்பிக்கப்பட்டமை.

**35. பஞ்ச மகா விவாதங்கள்:- முக்கிய அம்சங்கள்**

i) கிறிஸ்தவ சமய குருமார்கள் பௌத்த மதக் கருத்துக்களை விமர்சனம் செய்ததோடு, பௌத்த பிக்குகளை இழிவுபடுத்தினர். அத்துடன் 1860 இல் "கொகர்லி" என்னும் பாதிரியார் பௌத்த சமயத்திற்கு எதிராகத் தகவல்கள் திரட்டினார்.

ii) இதற்குப் பதிலடி கொடுப்பதற்காக பௌத்த பிக்குகள் கிறிஸ்தவப் பாதிரிமாரைப் பகிரங்க விவாத மேடைக்கு வருமாறு அழைத்து பல்வேறு இடங்களில் விவாதங்களில் ஈடுபட்டனர்.

iii) இவ்வாறு விவாதங்கள் ஐந்து இடம்பெற்றதால் "பஞ்ச மகா விவாதங்கள்" என அழைக்கப்படுகிறது.

- 1864இல் - பத்தேகம விவாதம்
- 1865இல் - வராகொட விவாதம்
- 1866இல் - உதம்மிட்ட விவாதம்
- 1871இல் - கம்பளை விவாதம்
- 1873இல் - பாணந்துறை விவாதம் (புகழ் பெற்ற இவ் விவாதம் மீ தெட்டுவத்தை குணானந்த தேரர் தலைமையில் நடைபெற்றது.

iv) **பம்பரந்தே ரேவத தேரர், ஹிக்கடுவ ஸ்ரீ சுமங்கல தேரர், மீ தெட்டுவத்த குணானந்த தேரர், பொத்துவல இந்திரஜோதி தேரர், வஸ்கடுவ ஸ்ரீ சுபூதி தேரர்** முதலிய பண்டித பிக்குகள் விவாதங்களில் கலந்து கொண்டனர்.

**36. பஞ்ச மகா விவாதங்களினால் கிடைத்த பிரதிபலங்கள்**

i) பௌத்த மறுமலர்ச்சியில் ஒரு புதிய யுகம் உருவானது.

ii) விவாதங்கள் வெளிநாடுகளிலும் பிரபலமடைந்ததுடன் பௌத்த சமயம் பற்றிய தெளிவு ஏற்பட்டது.

iii) வெளிநாட்டு வேற்று மதத்தவர்களின் கவனம் பௌத்த சமயத்தின் மீது திரும்பியமை.

iv) அமெரிக்கரான **ஹென்றி ஸ்டீல் ஒல்கொட்** மற்றும் ரஷ்சிய நாட்டவரான **ஹெலானா பலவெட்ஸ்கி அம்மையார்** முதலியோர் இலங்கை வந்தனர்.

**37. பௌத்த சமய மறுமலர்ச்சிக்காக அமைக்கப்பட்ட பிரிவெனாக்கள்**

| ஆண்டு | முன்னோடியாக இருந்த பௌத்த பிக்கு | பிரிவெனாவின் பெயர் |
|---|---|---|
| 1835 | வலானே சித்தார்த்த தேரர் (வெலிவிட்ட ஸ்ரீ சரணங்கர தேரரின் மாணவர்) | இரத்மலானை பரமதம்ம சைத்திய பிரிவெனா |
| 1873 | ஹிக்கடுவ ஸ்ரீ சுமங்கலதேரர் (வலானே சித்தார்த்த தேரரின் மாணவர்) | மாளிகாகந்த வித்தியோதய பிரிவெனா |
| 1875 | ரத்மலானே ஸ்ரீ தர்மலோகதேரர் | பேலியகொட வித்தியா லங்கார பிரிவெனா |

**38. பௌத்த சமயத்தின் எழுச்சிக்கு துணைபுரிந்த பிக்குமார்கள்**

i) வலானே சித்தார்த்த தேரர். 1839ல் இரத்மலான பரமதர்ம விகாரையை நிறுவினார்.

ii) ஹிக்கடுவே ஸ்ரீ சுமங்கலதேரர்:-

- ஸ்ரீ சித்தார்த்ததேரின் மாணவரான இவர் 1873ல் மாளிகாகந்தையில் வித்தியோதய பிரிவெனாவை ஆரம்பித்தார்.
- பத்திரிகைகள், சஞ்சிகைகள் மூலம் பௌத்த சமயப் பிரச்சாரப் பணிகளுக்கு தலைமை வகித்தார்.
- லங்காலோகய எனும் சிங்கள பத்திரிகை, சுமதி என்னும் சிங்களச் சஞ்சிகை, லக்மினி பஹன (முதலாவது பௌத்த பத்திரிகை) பத்திரிகை போன்றவற்றை ஆரம்பித்தார்.
- 1865இல் சுமங்கலதேரர் நெறியாள்கையில் பௌத்த பிக்குகள் சப்ரகமுவ பெல்மடுல்ல பகுதியில் தர்மோபதேசம் ஒன்றை நிகழ்தியமை.

iii) மிதெட்டுவத்த குணானந்த தேரர்.

- செயலிழந்த நிலையிலிருந்த பௌத்த சாசனத்தையும் பௌத்த கல்வியையும் முன்னேற்றுவதில் பெரும்பங்காற்றினர்.
- பௌர்ணமி விடுமுறையை மீண்டும் பெற்றுக் கொள்ளும் முகமாக பிரம்ம ஞான சங்கத்தை நிறுவினார்.
- பேச்சு வன்மையால் கிறிஸ்தவ குருமார்களுக்கு பௌத்த சமயத்தின் முக்கியத்துவத்தை பல்வேறு விவாதங்கள் மூலம் வெளிப்படுத்தினர்.

  உ + ம்:- 1873ல் பாணாந்துறை விவாதம்

**39. ஹென்றி ஸ்டில் ஒல்கொட் : சமயப்பணிகள்**

i) மிதெட்டு வத்த குணானந்ததேரரின் பாணந்துறை விவாதம் பற்றி பத்திரிகை மூலம் அறிந்து கொண்ட அமெரிக்கரான ஒல்கொட் 1880ல் காலித் துறைமுகம் ஊடாக இலங்கை வந்தார்.

ii) வெலிவத்த விஜயானந்த பிரிவெனாவுக்குச் சென்று பௌத்த சமயத்தைத் தழுவிக் கொண்டார்.

iii) இவர் ஆற்றிய சேவைகள் வருமாறு

- பிரம்மஞான சங்கம் என்னும் பௌத்தசங்கக் கிளையொன்றை கொழும்பில் உருவாக் கினார். அச்சங்கத்தால் "சரசவி சந்தரெச" எனும் பத்திரிகையைத் தொடக்கி பௌத்தர்களை ஒற்றுமைப் படுத்தியமை
- ஞாயிற்றுக்கிழமை தர்ம பாடசாலைகளைத் தொடக்கியமை வெசாக் பூரண தினத்தை விடுமுறை நாளாக்கியமை.
- பெண்களின் கல்விக்காக கொழும்பு விஸாகா, மியூஸியஸ், காலி சங்கமித்த கல்லூரிகளைத் தோற்றுவித்தமை.
- ஆங்கில மொழி மூலமான பௌத்த பாடசாலைகளை நிறுவியமை.

  உ+ம்:- கொழும்பு ஆனந்த கல்லூரி, நாலந்தாக் கல்லூரி, கண்டி தர்மராஜா கல்லூரி, காலி மகிந்தா கல்லூரி.

* "பௌத்த கதனோபாய கதனய" என்னும் பெயரில் வினாவிடை வடிவிலான புத்த கத்தை எழுதி பௌத்த மாணவர்களின் சமய அறிவு விருத்திக்கு பங்களித்தார்.
* பௌத்த பெரஹரா ஊர்வலங்கள் நடாத்தும் உரிமையை பிரித்தானிய அரசிடம் இருந்து பெற்றுக் கொடுத்தமை.
* 1885இல் பௌத்த கொடி உருவாகக் காரணமானார். இக்கொடியே இன்றும் உலக பௌத்தர்களின் கொடியாக விளங்குகிறது.


ஹென்றி ஸ்டில் ஒல்கொட்

* மாதாந்தம் போயா தினத்தை விடுமுறை நாளாகப் பெற்றுத் தந்த ஒல்கொட் அவர்களுக்கு பௌத்தர்கள் நன்றிக் கடன் உடையவர்கள் என குணானந்த தேரர் குறிப்பிட்டார்.

**ஒல்கொட் அவர்களின் சீடர்கள்:-**

| | |
|---|---|
| i) அநகாரிக தர்மபால | ii) வலிசிங்ஹ ஹரிஸ் சந்திர |
| iii) டீ. பீ. ஜயதிலக | iv) ஆத்தர் வீ. தியெஸ் |
| v) அமதோரிஸ் மெண்டிஸ் | vi) பியதாச சிறிசேன |
| vii) ஆர். ஏ. மிரன்டோ | viii) ஹேவா விதாரண |

## 40. அநாகரிக தர்மபால : சமயப்பணிகள்

i) தொன் டேவிட் ஹேவா விதாரன என்னும் இயற்பெயரை அநாகரிக தர்மபால என மாற்றி பிரம்மச்சாரிய வாழ்க்கையூடாக ஆரிய சிங்களவர்களின் பெருமைகளை எடுத்துக் காட்டினார்.

ii) கிறிஸ்தவப் பாடசாலைகளில் ஆரம்பக் கல்வி பெற்றதன் விளைவாக ஆங்கிலத்திலும் பைபிளிலும் தேர்ச்சி பெற்றிருந்தார். இதனால் பௌத்த - கிறிஸ்தவ விவாத மேடைகளில் இடம்பெற்ற ஆங்கில உரைகளை சிங்களத்தில் மொழி பெயர்த்தார்.

iii) பௌத்த சமயம், தேசிய கலாசாரம், ஒழுக்கம் என்பவற்றைக் கட்டியெழுப்புவதில் அர்ப்பணிப்புடன் செயற்பட்டார்.

iv) கிராமங்கள், நகரங்கள் தோறும் சென்று பௌத்த தர்மத்தைப் பிரச்சாரம் செய்தார். பஞ்ச சீலக் கொள்கையைப் பின்பற்றுவதில் மக்களை உற்சாகப்படுத்திய இவர் மூட நம்பிக்கைகளை மக்களுக்கு இனங் காட்டினார்.

v) பௌத்த சமய நடவடிக்கைகளுக்காக மேற்கொண்ட பல்வேறு நடவடிக்கைகளில் சில வருமாறு

* ஹிக்கடுவ ஸ்ரீ சுமங்கல தேரரின் உதவியுடன் 1891ல் மகாபோதி சங்கத்தை உருவாக்கியமை. (சர்வதேச பௌத்த தூதுச் சங்கம்)
* மகாபோதி சங்கம் மூலம் "த பிரிட்டிஸ் நியூஸ்" என்னும் ஆங்கிலச் சஞ்சிகையையும், மகாபோதி சஞ்சிகையையும் வெளியிட்டார்.

- 'சிங்கள பௌத்தயா' என்னும் சிங்களப் பத்திரிகையை ஆரம் பித்தார்.
- மகாபோதி ஆங்கிலப் பாடசாலை மற்றும் மகாபோதி அச்சகத்தை நிறுவினார்.
- ஓல்கொட் அவர்களுடன் ஊர் ஊராகச் சென்று அவரது ஆங்கில உரைகளை சிங்களத்தில் மொழி பெயர்த்தார்.
- பௌத்த பாடசாலைகளை நிறுவியமை.
  உ + ம்:- பன்னிப்பிட்டிய தர்மபால வித்தியாலயம், கொழும்பு ஆனந்தா பாலிகா (மகளிர்) கல்லூரி
- கண்டியில் மேரி பொஸ்டர் சாமனேரர் நிறுவனத்தை ஆரம்பித்து தர்மதூது சேவைக்காக பிக்குனிகளுக்குப் பயிற்சியளித்தார்.
- கண்டியில் மகாபோதி ஓய்வு மண்டபத்தை நிறுவினர்.

vi) வெளிநாட்டு தர்மதூதுச் சேவைக்காக மேற்கொண்ட நடவடிக்கைகள் வருமாறு:-

- ஓல்கொட் மற்றும் பலவெட்ஸ்கி அம்மையாருடன் வடஇந்தியாவில் தம்பதிவ யாத்திரை மேற்கொண்டமை.
- இந்தியாவில் புத்தகாயா (புத்த பெருமான் ஞானம் பெற்ற இடம்) ஓர் இந்து மதகுருவின் கீழ் இருந்தமையைக் கண்டு அதனை பௌத்தர்களுக்கு மீண்டும் பெற்றுக்கொடுக்க உதவியமை.
- மகாபோதி சங்கத்தின் கிளைகளை கல்கத்தா, சாரணாத், டில்லி, புத்தகாயா, பம்பாய், சென்னை முதலிய நகரங்களில் நிறுவினார்.
- சாரணாத் என்னும் இடத்தில் ஒரு விகாரையை அமைத்தார்.
- 1893 இல் சிக்காக்கோ மாநகரில் இடம்பெற்ற மாநாடு ஒன்றில் பங்கு கொண்டு உரை நிகழ்த்தினார்.

**அநகாரிக தர்மபால பற்றிய சில தகவல்கள்:-**

- 1931 இல் இறுதியாக இலங்கை வந்த தர்மபால அவர்கள் சிறி தேவமித்த என்னும் பெயரில் துறவு பூண்டார்.
- 1933இல் வடஇந்தியாவின் வாரணாசி நகரில் உள்ள சாரணாத்தில் இவ்வுலகை நீத்தார்.

**41. அநாகரிக தர்மபாலவின் பௌத்த சமய எழுச்சிக்கு உதவிய பெரியார்கள்**

i) ஹிக்கடுவ ஸ்ரீ சுமங்கல தேரர்

ii) மீ தெட்டுவத்த குணானந்த தேரர்

iii) ஹென்றி ஸ்டீல் ஓல்கொட்

iv) ஹெலனா பலவெட்ஸ்கி அம்மையார்

v) மேரி போஸ்டர் றொபின்சன் அம்மையார்

ஹிக்கடுவே
ஸ்ரீ சுமங்கலதேரர்

மிதெட்டுவத்த
குணானந்த தேரர்

அநாகரிக தர்மபால

**42. பௌத்த மறுமலர்ச்சியை ஏற்படுத்த உதவிய அமைப்புக்கள்**

i) 1891ல் அநாகரிகதர்மபால ஆரம்பித்த மகாபோதி சங்கம்.
ii) 1898ல் டீ.பீ. ஜயதிலக ஆரம்பித்த பௌத்த வாலிப சங்கம்

**43. இந்து சமய வளர்ச்சியில் பங்காற்றிய பெரியார்கள்**

i) **ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்**

- இந்து சமய மறுமலர்ச்சி இயக்கத்தின் தலைவராகவும் முன்னோடியாகவும் வடக்கிலிருந்து செயற்பட்டவர்.
- இந்து சமயத்தின் முக்கியத்துவத்தையும், பாரம்பரியங்களையும் மீண்டும் கட்டியெழுப்புவதை நோக்கமாகக் கொண்டு செயற்பட்டார்.
- இந்து சமயப் பிள்ளைகளுக்காக தனது வீட்டிலேயே வகுப்புக்களை ஆரம்பித்தார்.
- 1853இல் சைவபரிபாலன சபை, இந்து கல்விச் சபை என்பவற்றை நிறுவியமை.
- 1848ல் வண்ணார்பண்ணையில் சைவப்பிரகாச வித்தியாலயத்தினை நிறுவினார். இப்பாடசாலை தமிழ் மொழியினதும் இந்து சமயத்தினதும் மறுமலர்ச்சி மத்திய நிலையமாகக் காணப்பட்டது.
- ஆங்கிலமொழியைப் புறக்கணிப்பது தமக்குப் பாதகமாக அமையும் எனக் கருதி 1890ல் யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணையில் ஆங்கிலப் பாடசாலையை (தற்போதைய யாழ் இந்துக்கல்லூரி) நிறுவினார்.
- பாடநூல்களை எழுதி தமிழ் மாணவர்களுக்கு உதவினார்.
  உ+ ம்:- பாலர் பாடம் என்னும் பாடநூல் மாணவர்கள் மத்தியில் பிரபல்யம் பெற்றிருந்தது.
- சமய, கலாசார மறுமலர்ச்சிக்குப் பத்திரிகைகள், புத்தகங்களின் முக்கியத்துவத்தை உணர்ந்து சொந்தமாக அச்சகத்தை நிறுவினார்.
- கவிதை, உரைநடை, பாடல், மொழிபெயர்ப்பு போன்ற நூல்களை வெளியிட்டமை.

உ+ம் :- கந்தபுராணம், சேது புராணம், பெரிய புராணம், மணிமேகலை, சரசோதி மாலை, திருக்குறள், நாலடியார் முதலிய நூல்களை வெளியிட்டார்.

- போ்ஸிவல் அடிகளாருடன் இணைந்து பைபிளை தமிழில் மொழி பெயர்த்தார்.

ii) **சேர். பொன். இராமநாதன்**

- இந்துசமய மறுமலர்ச்சிக்குப் பெருந் தொண்டாற்றியவர்கள் வரிசையில் இருவரும் ஒருவர்.
- தமிழ் மக்கள் மத்தியில் மாத்திரமன்றி சிங்கள மக்கள் மத்தியிலும் பிரபல்யமான மக்கள் தலைவராக திகழ்ந்தார்.
- 1915ல் சிங்கள- முஸ்லீம் கலவரத்திலே விசாரணையின்றி கைது செய்யப்பட்ட சிங்களத் தலைவர்களை இங்கிலாந்து சென்று வாதாடி விடுதலையடையச் செய்தார்.
- 1919ல் ஆண்களுக்காக பரமேஸ்வராக் கல்லூரியையும் (தற்போதைய யாழ் பல்கலைக் கழகம்), 1931ல் பெண்களுக்காக இராமநாதன் மகளீர் கல்லூரியையும் தமது சொந்தப்பணத்தில் கட்டுவித்தார்.
- பகவத்கீதை விரிவுரை, செந்தமிழ் இலக்கணம் ஆகிய நூல்களை எழுதினார்.


ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்


சேர்.பொன்.இராமநாதன்


எம்.சி.எம்.சித்திலெப்பை

## 44. இஸ்லாமிய சமய வளர்ச்சியில் பெரியார்கள்

i) **அறிஞர் எம்.சி.எம். சித்திலெப்பை**

- அரபு மொழியை கற்பதில் முஸ்லீம்களை ஊக்குவித்த இவர் ஆங்கில மொழியையும் கற்குமாறு தூண்டினர்.
- மத்ரஸா என்னும் முஸ்லீம்களின் சமயப் பாடசாலைகளைக் காலத்தின் தேவைக்கேற்ப மாற்றியமைத்தார்.
- 1882ல் மருதானை சாஹிராக் கல்லூரியை நிறுவுவதற்கு முன்னோடியாக விளங்கினார்.
- முஸ்லிம் பெண்களின் கல்வி முன்னேற்றத் திற்காக கண்டியில் முஸ்லீம் பெண்கள் பாடசாலையை ஆரம்பித்தார். இன்று இப்பாடசாலை "சித்திலெப்பை பாடசாலை" என்ற பெயரில் இயங்குகின்றது.

## 47. மது ஒழிப்பு இயக்கம் : முக்கிய அம்சங்கள்

i) 1912ல் அமுலுக்கு வந்த மதுவரிச்சட்டம் காரணமாக மதுக்கடைகள் பல தோன்றின. மது அருந்துதல், தவறணைகள் திறக்கப்படுவதை எதிர்த்து ஆரம்பிக்கப்பட்ட போராட்டம் மது ஒழிப்பு இயக்கமாகும்.

ii) மது ஒழிப்பு இயக்கம் ஆரம்பிக்கப்பட்டதற்கான காரணங்கள் வருமாறு:-

- நாடு முழுவதும் மதுபாணக் கடைகள் திறக்கப்பட்டமை.
- ஆங்கிலேயர் எதிர்பார்த்தது போலவே அவர்களது வருமானம் பல மடங்கு அதிகரித்தமை.
- தேசிய சமயங்கள், கலாசாரமும் மேலும் சீரழிந்தமை.

iii) இது பரந்துபட்ட ஒரு தேசிய தலைவர்களை ஒன்றுபடுத்துவதில் மது ஒழிப்பு இயக்கம் வெற்றி பெற்றது.

iv) மது ஒழிப்பு இயக்கத்திலூடாக பௌத்த தலைவர்கள் தேசியத் தலைவர்களாக மாறுவதற்கு சந்தர்ப்பமும் கிடைத்தது.

v) மது ஒழிப்பு இயக்கத்தின் தந்தையாக **ஆத்தர் வி. தியேஸ்** கருதப்படு கிறார். இவருடன் D.C. சேனநாயக்கா, F.R. சேனநாயக்கா, D.S சேனநாயக்கா, அநகாரிக தர்மபால, D.P. ஜயதிலக, W.R. சில்வா, பியதாச சிறிசேன போன்ற பலர் தலைமை வகித்தனர்.

vi) மது ஒழிப்பு இயக்கத்தின் செயற்பாடுகள் வருமாறு

- நகரங்கள், கிராமங்கள் தோறும் மக்கள் மத்தியில் விழிப்புணர்வை ஏற்படுத்துதல்.
- மதுஒழிப்பு இயக்கத்தின் கிளைகளை கிராமப் புறங்களில் நிறுவுதல்.
- பத்திரிகைகள், சஞ்சிகைகள், நூல்கள் மூலம் மதுவின் தீமைகளை விளக்குதல்.

அரசியல் மறுமலர்ச்சி

## 48. இலங்கையில் மத்திய வகுப்பினரை அரசியல் போராட்டங்களில் ஈடுபடத்தூண்டிய காரணிகள்

i) ஆங்கிலக்கல்வி அறிமுகம் செய்யப்பட்டமை. ஆங்கிலத்தில் கற்று வெளிநாடு சென்று உயர் கல்வியை பெற்று மீண்ட இலங்கை யிரிடையே தாராண்மை (லிபரல்) வாதக் கொள்கை பற்றிய தெளிவு.

ii) இந்தியாவில் தேசிய இயக்கம் வேகமாக வளர்ச்சி கண்டிருந்தமை மத்திய வகுப்பினரால் கவரப்பட்டது.

iii) தாம் பெற்ற கல்விக்கு ஒப்பாக சமூக, பொருளாதார, அரசியல் துறைகளில் பிரவேசிக்கும் சந்தர்ப்பம் சுதேசிகளுக்கு கிடைக்காமை.

iv) மத்திய வகுப்பினர் அரசியலிருந்து ஒதுக்கி வைக்கப்பட்டிருந் தமையால் சீர்திருத்தங்களின் மூலம் அரசியலில் ஈடுபட சந்தர்ப்பம் கிடைக்காமை.

v) சட்டவாக்க கழகத்தின் உத்தியோக சார்பற்றவர்களின் எண்ணிக்கை யினை உயர்த்த வேண்டும் என்ற கோரிக்கைகள் நிலவியமை.

- முஸ்லீம் நேசன், ஞானதீபம் எனும் பத்திரிகைகளை ஆரம்பித்து இஸ்லாமியக் கலாச்சாரத்தை மேம்படுத்த முயற்சித்தார்.

ii) **டி.பி. ஜாயா**


டி.பி. ஜாயா

- முஸ்லிம்களின் கல்வி, கலாசார வளர்ச்சிக்கு முக்கிய பங்களிப்பு செய்தவர்களில் ஒருவராவர்.
- 1914ல் சிலோன் முஸ்லீம் ரிவிவ் எனும் சஞ்சிகையில் முஸ்லிம் மக்களுக்குக் கல்வியின் முக்கியத்துவத்தை விளக்கினார்.
- சஹிராக் கல்லூரியின் அதிபராக பதவி வகித்து முஸ்லிம் கல்வி வளர்ச்சிக்கும், கல்லூரியின் வளர்ச்சிக்கும் அரும்பணியாற்றினார்.
- பிரதிநிதிகள் சபையின் நியமன அங்கத்தவராகவும், 1947ல் முதலாவது பாராளுமன்றத்தில் தொழில், சமூக சேவை அமைச்சராகவும் இருந்து முஸ்லீம்களின் முன்னேற்றத்துக்காக செயற்பட்டார்.

**45. கலாசாரா மறுமலர்ச்சியில் பத்திரிகைகளின் பங்களிப்பு**

i) 1841ல் - உதயதாரகை (தமிழ்)
ii) 1860ல் - லங்காலோகய
iii) 1864ல் - லக்மினிகிரண, லக்மினி பஹண, அருணோதய
iv) 1866ல் - ஞானார்த்த பரதீபய (இன்றும் வெளியாகும் பழையசிங்களப் பத்திரிகை)
v) 1880ல் - சரசவி சந்தேஷய
vi) 1888ல் - இந்து சாசனம்
vii) 1902ல் - சிங்கள ஜாதிய
viii) 1909ல் - தினமின
ix) 1930ல் - வீரகேசரி
x) 1931ல் - தினகரன்

**46. கலாசார மறுமலர்ச்சி ஏற்படுவதில் செல்வாக்கு செலுத்திய காரணிகள்**

i) சமய, கலாசார விடயங்களை அடிப்படையாகக் கொண்ட நாடகங்கள் அரங்கேற்றப்பட்டமை.
ii) பியதாஸ சிரிசேன உணர்ச்சியை ஏற்படுத்தும் நாவல்களை வெளியிட்டமை.
iii) திபெத் நாட்டவரான மகிந்ததேரர் மக்கள் மத்தியில் சமய உணர்ச்சியை ஊட்டும் வண்ணம் செயற்பட்டமை.
iv) பௌத்த, இந்து, முஸ்லிம் சமயத் தலைவர்களின் தேசிய உணர்வுடனான அர்ப்பணிப்புக்கள்.

**47. மது ஒழிப்பு இயக்கம் : முக்கிய அம்சங்கள்**

i) 1912ல் அமுலுக்கு வந்த மதுவரிச்சட்டம் காரணமாக மதுக்கடைகள் பல தோன்றின. மது அருந்துதல், தவறணைகள் திறக்கப்படுவதை எதிர்த்து ஆரம்பிக்கப்பட்ட போராட்டம் மது ஒழிப்பு இயக்கமாகும்.

ii) மது ஒழிப்பு இயக்கம் ஆரம்பிக்கப்பட்டதற்கான காரணங்கள் வருமாறு:-

- நாடு முழுவதும் மதுபானக் கடைகள் திறக்கப்பட்டமை.
- ஆங்கிலேயர் எதிர்பார்த்தது போலவே அவர்களது வருமானம் பல மடங்கு அதிகரித்தமை.
- தேசிய சமயங்கள், கலாசாரமும் மேலும் சீரழிந்தமை.

iii) இது பரந்துபட்ட ஒரு தேசிய தலைவர்களை ஒன்றுபடுத்துவதில் மது ஒழிப்பு இயக்கம் வெற்றி பெற்றது.

iv) மது ஒழிப்பு இயக்கத்திலூடாக பௌத்த தலைவர்கள் தேசியத் தலைவர்களாக மாறுவதற்கு சந்தர்ப்பமும் கிடைத்தது.

v) மது ஒழிப்பு இயக்கத்தின் தந்தையாக **ஆத்தர் வி. தியேஸ்** கருதப்படு கிறார். இவருடன் D.C. சேனநாயக்கா, F.R. சேனநாயக்கா, D.S சேனநாயக்கா, அநகாரிக தர்மபால, D.P. ஜயதிலக, W.R. சில்வா, பியதாச சிறிசேன போன்ற பலர் தலைமை வகித்தனர்.

vi) மது ஒழிப்பு இயக்கத்தின் செயற்பாடுகள் வருமாறு

- நகரங்கள், கிராமங்கள் தோறும் மக்கள் மத்தியில் விழிப்புணர்வை ஏற்படுத்துதல்.
- மதுஒழிப்பு இயக்கத்தின் கிளைகளை கிராமப் புறங்களில் நிறுவுதல்.
- பத்திரிகைகள், சஞ்சிகைகள், நூல்கள் மூலம் மதுவின் தீமைகளை விளக்குதல்.

அரசியல் மறுமலர்ச்சி

**48. இலங்கையில் மத்திய வகுப்பினரை அரசியல் போராட்டங்களில் ஈடுபடத்தூண்டிய காரணிகள்**

i) ஆங்கிலக்கல்வி அறிமுகம் செய்யப்பட்டமை. ஆங்கிலத்தில் கற்று வெளிநாடு சென்று உயர் கல்வியை பெற்று மீண்ட இலங்கை யிரிடையே தாராண்மை (லிபரல்) வாதக் கொள்கை பற்றிய தெளிவு.

ii) இந்தியாவில் தேசிய இயக்கம் வேகமாக வளர்ச்சி கண்டிருந்தமை மத்திய வகுப்பினரால் கவரப்பட்டது.

iii) தாம் பெற்ற கல்விக்கு ஒப்பாக சமூக, பொருளாதார, அரசியல் துறைகளில் பிரவேசிக்கும் சந்தர்ப்பம் சுதேசிகளுக்கு கிடைக்காமை.

iv) மத்திய வகுப்பினர் அரசியலிருந்து ஒதுக்கி வைக்கப்பட்டிருந் தமையால் சீர்திருத்தங்களின் மூலம் அரசியலில் ஈடுபட சந்தர்ப்பம் கிடைக்காமை.

v) சட்டவாக்க கழகத்தின் உத்தியோக சார்பற்றவர்களின் எண்ணிக்கை யினை உயர்த்த வேண்டும் என்ற கோரிக்கைகள் நிலவியமை.

## 49. அரசியல் போராட்டங்களில் ஈடுபட்ட சங்கங்கள்

- 19ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் செயற்பட்ட அரசியல் இயக்கங்கள் வருமாறு

i) சிலாப சங்கம்

ii) மலைநாட்டு பெருந்தோட்ட உற்பத்தியாளர் சங்கம்

iii) யாழ்ப்பாணச் சங்கம்

iv) இலங்கை தேசிய சங்கம்

## 50. 1915ம் ஆண்டு சிங்கள - முஸ்லீம் கலவரம் : பிரதான விடயங்கள்

i) கம்பளை வல்லக்கோட தேவாலயத்திலிருந்து பெரகரா கங்கதிலக விகாரைக்கு செல்லும்போது முஸ்லீம் பள்ளிவாசலைக் கடக்கும் சமயத்தில் மேளமுழுக்கம், நடனம், ஆடல், பாடல் என்பவற்றை தவிர்க்க வேண்டும் என முஸ்லீம்கள் அறிவித்தனர். பௌத்தர்கள் இவ் நிபந்தனையை மீறியதால் கலவரம் ஏற்பட்டது.

ii) சகல வியாபாரங்களையும் தமது கட்டுப்பாட்டில் வைத்திருந்த முஸ்லீம் வியாபாரிகள்மீது கடுமையான விரோத மனப்பான்மை உருவாகியமை.

iii) அரசாங்கத்திற்கு விரோதமான கலவரம் எனக் கருதிய ஆளுநர் றொபார்ட் சாமர்ஸ் இராணுவச்சட்டத்தை (மார்ஷல்லோ) பிறப்பித்து கலவரத்தை கடுமையாக அடக்கியமை.


D.P.ஜயதிலக்க


A.E.குணசிங்க


D.S.சேனநாயக்க


றொபார்ட் சாமர்ஸ்


F.R.சேனநாயக்க


சேர்.பொன்.அருணாசலம்

iv) பௌத்த தலைவர்கள் கைது செய்யப்பட்டனர். "வில்லியம் ஹென்றி பேதிரிஸ்" விசாரணையின்றி கொலை செய்யப்பட்டார். D.S. சேனநாயக்கா, F.R. சேனநாயக்கா, D.P. ஜயதிலக, A.E. குணசிங்க போன்றோர் சிறை வைக்கப்பட்டனர்.

v) இதனால் ஏகாதிபத்தியவாதிகளிடமிருந்து சுதந்திரமடைய வேண்டுமென்ற எண்ணம் சுதேசிகளிடம் பலமடைந்தமை.

## 51. இலங்கைத் தேசிய சங்கம் (காங்கிரஸ்)

i) இந்திய தேசிய காங்கிரஸின் செல்வாக்கிற்கு ஆட்பட்டு அதே போல் இலங்கையிலும் 1919ல் இலங்கை தேசிய சங்கம் நிறுவப்பட்டது.

ii) சேர்.பொன் அருணாசலம் இச்சபையின் முதல் தலைவரானார்.

iii) தேசிய சங்கம் உருவானதற்கான காரணங் கள் வருமாறு:-
- 1915இல் ஏற்பட்ட சிங்கள முஸ்லீம் இனக் கலவரம்
- மது ஒழிப்பு இயக்கத்தின் மூலம் கிடைத்த பயிற்சி

iv) இலங்கைத் தேசிய சங்கத்தின் நோக்கங்கள் வருமாறு:
- சட்டவாக்கக் கழகத்தை விரிவுபடுத்துதல்.
- சட்டவாக்கக் கழகத்தின் அதிகாரத்தை அதிகரித்தல்.
- சுதேச தலைவர்கள் நிர்வாகத்தில் கூடுதல் பங்குபெறுவதற்குச் சந்தர்ப்பங்களைப் பெற்றுக் கொடுத்தல்.

v) காங்கிரஸ் தலைவர்கள் தமது நோக்கங்களை அடைவதற்காக மேற்கொண்ட சில நடவடிக்கைகள் வருமாறு:
- பிரித்தானிய அரசுக்கு மனுக்களைச் சமர்ப்பித்தல்.
- குடியேற்ற நாட்டுக் காரியதரிசியிடம் தூதுக் குழுக்களை அனுப்புதல்.
- கூட்டங்களை நடாத்தி மக்களை விழிப்பூட்டுதல்.
- சட்டவாக்கக் கழகத்தில் வாத விவாதங்களில் ஈடுபடுதல்.
- பத்திரகை மூலம் யாப்பு சீர்திருத்தத்தின் அவசியத்தை தெளிவு படுத்துதல்

vi) தேசிய இயக்கத்தின் நெறிப்படுத்தலின் கீழ் 1920, 1924, 1931ஆகிய வருடங்களில் அரசியலமைப்புச் சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப் பட்டமை.

vii) தேசிய இயக்கம் செயற்படுத்தப்பட்டபோது சட்டவாக்கசபையில் ஆசனங்களைப் பகிர்ந்து கொள்வதில் சிங்கள, தமிழ் தலைவர் களிடையே கருத்துவேறுபாடுகள் தோன்றியமை. இதனால் 1921ல் தமிழ் தலைவர்கள் தேசிய சங்கத்திலிருந்து விலகி "தமிழ் மக்கள் சபை" ஒன்றினை நிறுவினர்.

viii) 1942ல் தேசிய சங்கத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தை 1943ல் பிரித்தானிய அரசு அங்கீகரித்தது. இதற்கமைய 1947ல் சோல்பரி ஆணைக்குழுவின் ஆலோசனைகளுக்கமைய 1948ல் இலங்கை சுதந்திரத்தை பெற்றது.



சுதந்திர சதுக்கம்

**52. கல்வி நடவடிக்கைகள்**

i) இலங்கையில் ஆரம்பகாலத்தில் பௌத்த விகாரைகளை அடிப்படையாகக் கொண்ட பிரிவேனா கல்வி முறை நடைமுறைப்படுத்தப்பட்டது.

ii) போர்த்துக்கேயர், ஒல்லாந்தர் கரையோரப் பிரதேசங்களில் பரிஸ் பாடசாலையை அடிப்படையாகக் கொண்ட கல்வி நிறுவனங்களை நடைமுறைப்படுத்தினர்.

iii) ஆளுநர் நோர்த் கல்வி நடவடிக்கைகளை முன்னெடுப்பதற்காக மேற்கொண்ட நடவடிக்கைகள் வருமாறு,

- ஒல்லாந்தரின் கல்வி முறையை அடிப்படையாகக் கொள்ளுதல்.
- கிறிஸ்தவ சமய சூழலினை மேற்கத்தய முறையிலான கல்வியை வழங்குதல்.
- கொட்னர் அடிகளாரினதும், மிஷனரி குருமார்களினதும் உதவி களைப் பெற்றுக்கொள்ளல்.
- கொழும்பு அக்கடமி எனும் தாபனத்தை ஆரம்பித்து அதனூடாக கல்வியாளர்களை உருவாக்குதல்.

iv) 1812ல் றொபேட் பிறவுன்றிக் ஆளுநராக இலங்கை வந்த பின் கல்வியில் முன்னேற்றம் ஏற்பட்டது. அதற்காக மிஷனரி இயக்கங்களின் உதவிகிடைத்தமை.

- இங்கிலாந்து மிஷனரி சங்கம்
- லண்டன் மிஷனரி சங்கம்
- பப்டிஸ்ட் இயக்கம் - கொழும்பை மையமாகக் கொண்டு இயங்கியது.
- வெஸ்லியன் மெதடிஸ்ற் இயக்கம் - வடக்கு, தெற்கு பிரதேசங் களில் செயற்பட்டது.
- அமெரிக்கர்கள் மிஷனரி இயக்கம் - வட பிரதேசத்தில் சிறப்பாக கல்வி வளர்ச்சியில் ஈடுபட்டது.

v) கோல்புறூக் ஆணைக்குழுவினர் கல்வி தொடர்பாக செய்த முன்மொழிவுகள் வருமாறு,

- கல்வி நிருவாகத்திற்கென பாடசாலை ஆணைக்குழுவை நிறுவியமை.
- ஆங்கில மொழி மூலப் பாடசாலைகளை ஏற்படுத்துதல். ஆங்கில மொழியைக் கட்டாயமாக்குதல்.
- கிறிஸ்தவ மிஷனரிக் கல்விக்கு உதவுதல்
- ஆங்கிலம் கற்ற இலங்கையரை அரச பணிகளில் இணைத்துக் கொண்டமை.

vi) 1841ல் மெக்கன்ஸி ஆளுநர் காலத்தில் மேற்கொண்ட கல்வி மறுசீரமைப்புக்கள்

- கோல்புறூக் சிபார்சுக்கு அமைய உருவாக்கப்பட்ட கல்வி ஆணைக்குழு வெற்றியளிக்காமையால் "மத்திய பாடசாலைகளின் ஆணைக்குழு" உருவாக்கப்பட்டது.
- சுய மொழிப் பாடசாலைகளும் இரு மொழிப் பாடசாலைகளும் உருவாக்கப்பட்டமை.
- உதவி பெறும் பாடசாலைகள் உருவாக்கப்பட்டமை.
- மத்திய கல்லூரி முறை உருவாக்கப்பட்டமை.
- பிரதான நகரங்களில் மகளிர் பாடசாலைகள் ஆரம்பிக்கப்பட்டமை.
- கொழும்பு அக்கடமி ***(Royal College)*** எனும் பெயரில் உயர் தொழிலுக்கு மாணவரைப் பயிற்றுவிக்கும் மத்திய நிலையம் உருவாக்கப்பட்டமை.

vii) 1865ல் மோர்கள் குழு முன்வைத்த ஆலோசனைகள் வருமாறு

- கல்வி நிர்வாகத்திற்காக பகிரங்கக் கற்பித்தல் திணைக்களம் ஆரம்பிக்கப்பட்டமை.
- கல்வியின் பொறுப்பு அரசுக்கு உரித்தாக்கப்படல்.
- தனியார் பாடசாலைகளுக்கு உதவி வழங்குதல்
- பெண்களிடமிருந்து கட்டணம் அறவிடாது பெண்களின் கல்வியை மேம்படுத்துதல்.

viii) 1920 மனிங் சீர்திருத்தத்தில் முன்வைக்கப்பட்ட கல்வி ஆலோசனைகள் வருமாறு,

- கல்வித் திணைக்களம் உருவாக்கப்பட்டு நிர்வாக நடவடிக்கைகள் பொறுப்பேற்கப்பட்டமை.
- பாடசாலை செல்வது கட்டாயமாக்கப்படல்
- சமய பிரிவுகளால் பாடசாலைகள் அமைக்கப்படாத இடங்களில் அரசாங்கம் பாடசாலைகளை ஆரம்பித்தல்.
- அரசாங்கப் பாடசாலைகளில் சமய போதனை தடுக்கப்பட்டமை முறையான தோட்டப் பாடசாலைகளை உருவாக்குதல்.
- 1921ல் பல்கலைக்கழகம் ஒன்று உருவாக்கப்பட்டது.

ix) டொனமூர் சீர்திருத்தத்தின் கீழ் முன் வைக்கப்பட்ட கல்வி ஆலோசனைகள்

➢ கல்வி பொறுப்பை ஏற்றிருந்த C.W.C. கன்னங்கரா இலவசக் கல்வி முறைக்கு காரணமானார்


C.W.C. கன்னங்கரா

- தாய்மொழியில் கல்வி வழங்குதல்
- கட்டாயக் கல்வி முறை
- பாலர் வகுப்பிலிருந்து பல்கலைக் கழகம் வரை இலவசமாகக் கல்வி வழங்குதல்
- தேசிய பரீட்சை முறையை உருவாக்குதல்.
- பாடசாலையில் சமய பாடம் கட்டாயமாக்கப்படல்.
- இரண்டாம் மொழியாக ஆங்கிலம் கற்பித்தல்.
- ஆசிரிய பயிற்சிக்காக விசேட அமைப்புக்களை உருவாக்குதல்.
- ஆசிரியர்களின் சம்பளத்தை திணைக்களத்தால் நேரடியாக வழங்குவதற்கான முறை ஒன்றை ஆரம்பித்தல்.
- கிராமிய மாணவர்களில் திறமைமிக்க ஏழைப் பிள்ளைகளுக்கு உயர்கல்வியைப் பெற்றுக் கொடுப்பதற்கு ஐந்தாம் தரத்தில் உபகாரநிதி வழங்கும் முறையை ஆரம்பித்தல்.

**53. பிரித்தானியர் ஆட்சியினால் ஏற்பட்ட விளைவுகள்**

i) மிஷனரிக் கல்வி முறையின் மூலம் ஆங்கிலம் கற்பிக்கப்பட்டமை.

ii) சுயமொழிக் கல்வியில் கவனம் செலுத்தப்பட்டமை.

iii) பெருந்தெருக்களும் ரதப் பாதைகளும் அமைக்கப்பட்டமை.

iv) துறைமுகங்கள் அபிவருத்தியடையச் செய்தமை

v) வர்த்தகப் பயிர்ச்செய்கை முறைமையை பிரதான வருமானமாக்கியமை.

vi) சுயதேவைப் பொருளாதார முறை வீழ்ச்சியடைந்து ஏற்றுமதி, இறக்குமதிப் பொருளாதாரமுறை உருவாக்கப்பட்டமை.

vii) இந்நாட்டுப் பொருளாதாரத்தை உலக சர் ில் தங்கியிருக்கச் செய்தமை.

viii) நாட்டு மக்களின் உடமையாக இருந்த நிலத்தை வெளிநாட்டு முயற்சியாளருக்கு பெற்றுக் கொடுத்தமை.

ix) 20ம் நூற்றாண்டுகளுக்கு மேலாகக் கட்டியெழுப்பப்பட்ட சுதந்திர அரசியல், பொருளாதார கலாசார பண்புகளைக் கொண்டிருந்த எமது தேசிய பாரம் பரியத்தை அழித்தமை.

x) பணப்பரிமாற்றத்தை அறிமுகப்படுத்தியதுடன் பணத்திற்கு முதலிடம் வழங்கும் சமூகத்தை உருவாக்கியமை.

# இருபதாம் நூற்றாண்டில் ஆசிய நாடுகளின் எழுச்சி 3

**1. 20ம் நூற்றாண்டில் எழுச்சி பெற்ற ஆசிய நாடுகள்**

i) இந்தியா ii) யப்பான் iii) சீனா

**2. இந்தியாவின் வரலாற்றுப் பின்னணி**

i) இந்தியா நூறு மொழிகளுக்கு அதிகமாகப் பேசும் கலாசாரமுறையில் பலவிதமான பிராந்தியங்களாக பிரிந்து சென்ற நாடாக இருப்பதனால் ஒருங்கிணைந்த நாடாக ஒற்றுமைப்படுத்துதல் மிகக் கஷ்டமான காரியமாகும்.

ii) மஹாபத்மநந்த, சந்திரகுப்த மௌரியர், சமுத்திரகுப்த, ஹர்சவர்தனன், அலாவுத்தீன், பல்ஜி, அக்பர் போன்ற அரசர்கள் இந்தியாவை ஒற்றுமைப்படுத்த முயற்சித்த போதும் முடியவில்லை.



வஸ்கொடகாமா

iii) 1498ல் வஸ்கொடகாமா இந்தியாவின் கள்ளிக்கோட்டையை வந்தடைந்ததைத் தொடர்ந்து, மேல் நாட்டவர்கள் இந்தியாவிற்கு வரும் வாய்ப்பு ஏற்பட்டது.

iv) போர்த்துக்கேயர், ஒல்லாந்தர், பிரான்சியர் ஆகியோரும் இந்தியாவின் பல பாகங்களிலும் தமது ஆட்சியை நிறுவியபோதும் இந்தியாவை ஒற்றை ஆட்சியின்கீழ் ஒற்றுமைப்படுத்த முடியவில்லை. ஆயினும் இந்தியாவில் முழுமையாக ஒற்றையாட்சி முறையை ஏற்படுத்துவதற்கு பிரித்தானியர்களினால் மாத்திரம் தான் முடிந்தது.

v) இந்தியாவின் இறுதிச்சுயாதீன அரசான பஞ்சாப் 1846ல் பிரித்தானியரின் ஆட்சியின் கீழ் வந்ததைத் தொடாந்து 1848ல் இந்தியா முழுவதும் பிரித்தானியரின் ஆட்சிக்குட்பட்டது. ஆயினும் இந்த முயற்சி அவ்வளவு வெற்றியளிக்கவில்லை ஏனெனில் அரசியற் சுதந்திரம் அடைந்தவுடன் இந்தியா சமஷ்டி ஆட்சியாக மாறியது.

vi) பிரித்தானியரின் ஆட்சி காஷ்மீர் தொடக்கம் கன்னியாகுமாரி வரையிலும், இந்துகுஷ் மலைத்தொடரிலிருந்து அஸ்ஸாம் வரையிலும் பரவியது.

**3. சிப்பாய்க் கலகம் - 1857**

- பிரித்தானியருக்கு எதிராக சிப்பாய் என அழைக்கப்பட்ட இந்திய வீரர்கள் தமது குறைகளை தீர்க்க வேண்டி மேற்கொண்ட கலகமே சிப்பாய்க் கலகம் என்பர். இதனை வரலாற்றில் "இந்திய சிப்பாய் காலம்" எனவும் கூறுவார்.

ஊதியம் வளர்ப்பு மகனான நானாசாகிப் மன்னனுக்கு வழங்கப் படாமை.

- ஜான்சிராணி, பகதூர்ஷா போன்றோர் ஆங்கிலேயரை ஒழிக்க திட்டம் தீட்டியதால் செல்வாக்கற்று சீரழிந்தனர்.

iv) பிரித்தானியர்கள் கிறிஸ்தவ மிஷனரிமார்களுக்கு உதவி வழங்கியமை. குறிப்பாக இந்து மதக் கொள்கைகளை நேரடியாகவும், மறைமுகமாகவும் தாக்கி எழுதிய நூல்கள் வெளிவந்தன.

உ+ம்: ஆங்கிலேயர் இந்தியாவிற்கு வந்தது மதமாற்றம் செய்வதற் காகவே என்று மேஜர் எட்வர்ஸ் கூறினார்.

v) இந்தியாவின் வளங்கள் வெளிநாடுகளைச் சென்றடைந்தமை.

vi) 1856ல் கொண்டு வரப்பட்ட விதவைத் திருமணம் மற்றும் வாரிசுரிமைச் சட்டம் போன்றவற்றை மக்கள் வெறுத்தமை.

vii) புகையிரதச்சேவை, தந்திச்சேவை, தபாற்சேவை என்பன ஆரம்பிக்கப் பட்டமையினால் பிரதேசங்களுக்கு இடையில் தொடர்பு ஏற்பட்டமை.

viii) இந்தியாவின் தேவை கவனிக்கப்படாமை. பெண்டிங் பிரபுவின் தீர்வை யற்ற உரிமை முறையால் பல பெரும் நிலக்கிழார்கள் தங்கள் நிலங்களை இழந்தனர். இதனால் வெள்ளம், பஞ்சம் ஏற்பட்ட காலங் களில் சிற்றரசர்கள் உதவியது போல் ஆங்கிலேயர் உரிய உதவியை புரிய முன்வராமை.

ix) முதல் ஆப்கானியப் போரில் ஆங்கிலேயர் அடைந்த தோல்வி அவர்களின் படைப்பலம் திறமையற்றது என்பதை இந்தியப் படையினர் நன்கு அறிந்தமை.

- நானா சாகிப், காந்தியா கோபி, லட்சுமிபாய் போன்றோர் கிளர்ச்சித் தலைவர்களாக இருந்தனர்.

5. **சிப்பாய்க் கலகம் தோல்வியடைந்தமைக்கான காரணங்கள் எவை?**

i) **திடீரென ஏற்பட்டது:-** கலகம் ஒழுங்கான முறையில் திட்டமிடப்படாமை.

ii) **இந்தியா முழுவதும் நடைபெறவில்லை :-** இக்கலகம் மீரட்டிலும், டில்லியிலும் பின்னர் ஜான்சி போன்ற இடங்களிலும் ஏற்பட்டது. ஆனால் ஆங்கிலேயர் ஆதிக்கம் இந்தியா முழுவதிலும் இருந்தமை.

iii) **குறிக்கோள் இல்லை:-** கலகத்தில் ஈடுபட்ட சிப்பாய்களிடையே பொதுக் குறிக்கோள் இல்லாமை.

iv) **ஒழுங்கான தலைமைத்துவம் இன்மை:-** படைவீரர்களையும், மக்களையும், மன்னர்களையும் ஒன்று சேர்க்கும் தலைவர் யாரும் இல்லை. ஜான்சியின் தலைமை சில பகுதியிலேயே இருந்தது.

v) **இந்தியரிடம் ஒற்றுமையில்லை:-** சிலர் ஆங்கிலேயருக்கு உதவி புரிந்தனர். நேபாள மன்னன் கூர்க்காப் படையை அனுப்பி கலகத்தை அடக்க உதவினார்.

vi) **பொதுமக்களின் ஒத்துழைப்பின்மை:-** செல்வமும், படைப்பலமும் உள்ளவர்கள் இந்தக் கலகத்திற்கு ஆதரவு வழங்காமை.

- சிப்பாய்க் கலகம் டில்லி, லக்னோ, கான்பூர், மத்தியபிரதேசம், புன்தேல்காண்ட், உரோஹில்கன்ட் ஆகிய இடங்களில் நடைபெற்றது.
- சிப்பாய்க் கலகம் இந்தியாவின் சுதந்திரப் போராட்டத்தின் முக்கிய நிகழ்வாக கருதப்படுகிறது.
- 1806, 1844, 1849, 1850, 1852 ஆகிய ஆண்டுகளில் வர்த்தக சங்கத்திற்கு எதிராக கலகங்கள் ஏற்பட்டபோதும் விரைவாக அடக்கப்பட்டுவிட்டன.


வங்காளத்தில் சிப்பாய்கள்


பகதூர் ஷா


ஜன்சி ராணி

## 4. சிப்பாய்க்கலகம் ஏற்பட்டமைக்கான காரணங்கள்

**உடனடிக் காரணம்**

i) இந்தியப்படையில் உயர்சாதியினரும், முஸ்லிம்களும் இருந்தனர். இவர்களுக்குப் புதிதாக பசு, பன்றிக் கொழுப்பு தடவிய **என் பீல்டு துப்பாக்கிகள்** (En field Rifles) வழங்கப்பட்டன. இதனை பசுக்களைப் புனிதமாக கருதும் இந்துக்களும், பன்றியை வெறுக்கும் முஸ்லிம் களும் எதிர்த்தனர். இது அனைத்துப் பகுதியிலும் உள்ள சிப்பாய் களுக்கும் தெரிந்ததும் போராட்டம் தொடங்கியது.

ii) ஆங்கிலேயர் இந்தியாவின் பிரதேசங்களை இணைக்கும்போது வஞ்சக மாகச் செயற்பட்டமை.
**உ+ம்:** சீர்கேடாக ஆட்சிபுரியும் நாடுகள் இணைக்கப்படும் என்ற போர்வையில் அயோத்தியும் நிசாமும் இணைக்கப் பட்டமை.


டல்ஹௌசி பிரபு

iii) இந்தியத் தலைவர்களை ஆட்சி யாளர்கள் மதியாமை
**உ+ம்:**
- இந்திய மன்னர்கள் தாங்கள் வைத் திருந்த ஆடம்பர பட்டங்களை (பேரரசர், நவாப்) டல்ஹௌசி பிரபு ஏற்க மறுத்தமை
- பேஷ்வா மன்னன் 2ம் பாஜிராவிற்கு அளிக்கப்பட்ட ஓய்வூதிய கால

ஊதியம் வளர்ப்பு மகனான நானாசாகிப் மன்னனுக்கு வழங்கப் படாமை.

- ஜான்சிராணி, பகதூர்ஷா போன்றோர் ஆங்கிலேயரை ஒழிக்க திட்டம் தீட்டியதால் செல்வாக்கற்று சீரழிந்தனர்.

iv) பிரித்தானியர்கள் கிறிஸ்தவ மிஷனரிமார்களுக்கு உதவி வழங்கியமை. குறிப்பாக இந்து மதக் கொள்கைகளை நேரடியாகவும், மறைமுகமாகவும் தாக்கி எழுதிய நூல்கள் வெளிவந்தன.
உ+ம்: ஆங்கிலேயர் இந்தியாவிற்கு வந்தது மதமாற்றம் செய்வதற்காகவே என்று மேஜர் எட்வர்ஸ் கூறினார்.

v) இந்தியாவின் வளங்கள் வெளிநாடுகளைச் சென்றடைந்தமை.

vi) 1856ல் கொண்டு வரப்பட்ட விதவைத் திருமணம் மற்றும் வாரிசுரிமைச் சட்டம் போன்றவற்றை மக்கள் வெறுத்தமை.

vii) புகையிரதச்சேவை, தந்திச்சேவை, தபாற்சேவை என்பன ஆரம்பிக்கப் பட்டமையினால் பிரதேசங்களுக்கு இடையில் தொடர்பு ஏற்பட்டமை.

viii) இந்தியாவின் தேவை கவனிக்கப்படாமை. பெண்டிங் பிரபுவின் தீர்வை யற்ற உரிமை முறையால் பல பெரும் நிலக்கிழார்கள் தங்கள் நிலங்களை இழந்தனர். இதனால் வெள்ளம், பஞ்சம் ஏற்பட்ட காலங் களில் சிற்றரசர்கள் உதவியது போல் ஆங்கிலேயர் உரிய உதவியை புரிய முன்வராமை.

ix) முதல் ஆப்கானியப் போரில் ஆங்கிலேயர் அடைந்த தோல்வி அவர்களின் படைப்பலம் திறமையற்றது என்பதை இந்தியப் படையினர் நன்கு அறிந்தமை.

- நானா சாகிப், காந்தியா தோபி, லட்சுமிபாய் போன்றோர் கிளர்ச்சித் தலைவர்களாக இருந்தனர்.

**5. சிப்பாய்க் கலகம் தோல்வியடைந்தமைக்கான காரணங்கள் எவை?**

i) **திடீரென ஏற்பட்டது:-** கலகம் ஒழுங்கான முறையில் திட்டமிடப்படாமை.

ii) **இந்தியா முழுவதும் நடைபெறவில்லை :-** இக்கலகம் மீரட்டிலும், டில்லியிலும் பின்னர் ஜான்சி போன்ற இடங்களிலும் ஏற்பட்டது. ஆனால் ஆங்கிலேயர் ஆதிக்கம் இந்தியா முழுவதிலும் இருந்தமை.

iii) **குறிக்கோள் இல்லை:-** கலகத்தில் ஈடுபட்ட சிப்பாய்களிடையே பொதுக் குறிக்கோள் இல்லாமை.

iv) **ஒழுங்கான தலைமைத்துவம் இன்மை:-** படைவீரர்களையும், மக்களையும், மன்னர்களையும் ஒன்று சேர்க்கும் தலைவர் யாரும் இல்லை. ஜான்சியின் தலைமை சில பகுதியிலேயே இருந்தது.

v) **இந்தியரிடம் ஒற்றுமையில்லை:-** சிலர் ஆங்கிலேயருக்கு உதவி புரிந்தனர். நேபாள மன்னன் கூர்க்காப் படையை அனுப்பி கலகத்தை அடக்க உதவினார்.

vi) **பொதுமக்களின் ஒத்துழைப்பின்மை:-** செல்வமும், படைப்பலமும் உள்ளவர்கள் இந்தக் கலகத்திற்கு ஆதரவு வழங்காமை.

vii) **பிரித்தானியரிடம் பொருளாதாரம், படைப்பலம் என்பன உயர் நிலையில் காணப்பட்டமை:-** துப்பாக்கியில் மருந்தைத் திணித்து சுடும் பழைய துப்பாக்கியையே கலகக்காரர்கள் பயன்படுத்தினார். ஆனால் ஆங்கிலேயர் இயந்திரத் துப்பாக்கியைப் பயன்படுத்தினார்.

### 6. சிப்பாய் கலகத்தினால் ஏற்பட்ட விளைவுகள்

i) இந்தியாவில் கம்பனியும் பிரித்தானிய அரசாங்கமும் செய்து வந்த இரட்டை ஆட்சி முறை நீக்கப்பட்டு இந்தியா 1858ல் பிரித்தானிய முடியின் (விக்ரோறியா மகாராணி) கீழ் வந்தது.

ii) இந்தியா சுதந்திரம் அடைய வேண்டும் என்ற எண்ணம் இந்திய மக்களிடையே ஏற்பட்டமை.

iii) பிரித்தானியர்களுக்கு எதிராக போர் செய்வதை விட பேச்சுவார்த்தை மூலமும், தர்க்க ரீதியாகவும் தமது தேவைகளை எடுத்துக் கூறுவதே சிறந்தது என தலைவர்கள் உணர்ந்தமை.

iv) சிற்றரசர்களுக்கு உரிமைகள் தரப்பட்டன.

### 7. இந்தியர்களிடையே தேசிய உணர்வு ஏற்பட வழிகோலிய காரணங்கள்

i) **சுயதேவை கிராமப் பொருளாதாரம் வீழ்ச்சியடைந்தமை :** ஆட்சியாளர்களின் அதிகமான நிலவரி விவசாயத்தின் வீழ்ச்சிக்கு வழிகோலியது.

ii) **கைத்தொழில் பற்றி எதுவித நடவடிக்கைகளையும் பிரித்தானியர்கள் எடுக்காமை :** தேயிலை, கோப்பி மீது செல்வந்தர்களை ஊக்கமளித்த பிரித்தானியர்கள் மிகக் குறைந்த சம்பளத்திற்குத் தொழிலாளரை வேலைக்கமர்த்தி உழைப்பைச் சுரண்டியமை.

iii) **இடையிடையே ஏற்பட்ட பஞ்சம்:** உணவுப் பொருட்களை வாங்க முடியாதவர்கள் பட்டினியால் உயிரிழந்தமை. அத்துடன் கறுப்புச் சந்தையில் உணவுப் பொருட்கள் அதிக விலையில் விற்கப்பட்டமை.

iv) **மேல்நாட்டுக் கல்வியால் இந்தியர்கள் ஜனநாயகம் பற்றிய விளக்கத்தை பெற்றுக்கொண்டமை :** தமது நிர்வாக அரசியல் தேவைகளுக்காக பிரித்தானியர்கள் அறிமுகம் செய்த மேல்நாட்டுக் கல்வியினால் ஐரோப்பிய நாடுகளில் நிலவிய ஜனநாயகம் தொடர்பான விளக்கத்தைப் பெற்றுக் கொண்டமை.
**உ+ம்:** சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற பிரான்சியப் புரட்சியின் தத்துவங்கள் இந்தியர்களைக் கவர்ந்தமை.

v) **ஆங்கிலேயருக்கு இருக்கும் உரிமை தமக்கும் உண்டென இந்தியர்கள் எண்ணியமை :** ஆங்கிலேய அரசனான முதலாம் சாள்ஸ் கொடூரமான ஆட்சியாளனாக இருந்தமையால் அவனைக் கொலை செய்தனர். அதே உரிமை தமக்கும் உள்ளது என இந்தியர்கள் எண்ணியமை.

vi) **ஆங்கில மொழி இந்தியர்களிடையே நெருங்கிய தொடர்பை ஏற்படுத்தியது :** பலமொழி பேசும் இந்தியர்களிடையே கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளவும், தொடர்பினை ஏற்படுத்தவும் ஆங்கில மொழி உதவியது.

vii) **புகையிரதப் பாதை, பெருந்தெருக்கள், தபால்சேவை ஆரம்பித்தமை :** பிரித்தானியர் தமது உற்பத்தி பொருட்களைக் கொண்டு செல்வதற்கே இச்சேவைகளை ஆரம்பித்தனர். ஆயினும் இந்தியர்களிடையே தொடர்புகளை ஏற்படுத்தி தேசிய உணர்வுக்கு வழிவகுத்தமை.

viii) **இந்தியர்களிடையே விழிப்புணர்ச்சி தோன்றியமை :** ஜோன் மார்ஷல், வில்லியம் ஜோன்ஸ், மெக்மூர், மோத்திமர் வீலர் போன்ற தொல்பொருள் ஆய்வாளர்கள் இந்தியாவின் ஹரப்பா நாகரிகத்தை வெளிப்படுத்தியமை.

iv) **ஜாலியன் வாலா பாக் படுகொலை :** 1919ல் பிரித்தானியர் இந்தியர்களுக்கு சுயஆட்சி வழங்குவதற்கு மொன்டேகு- சேம்ஸ்பர்ட் அறிக்கை மூலம் இணங்கினர். இக்காலத்தில் ஏற்பட்ட அமைதியின்மை காரணமாக பஞ்சாப்பில் அமிர்தசரஸ் நகருக்கு அண்மையில் ஜாலியன் வாலா இடத்தில் நடைபெற்ற அமைதி ஊர்வலக்காரர்கள் காரணமின்றி படுகொலை செய்யப்பட்டமை.

## சுதந்திரப் போராட்டம்

### 8. தேசிய விழிப்புணர்வு கிளர்ச்சியாக மாறியமைக்கான காரணங்கள்

i) உயர்பதவிகள் இந்தியர்களுக்குக் கிடைக்காமை ஐ.சி.எஸ். (Indian Civil Services) போன்ற உயர்பதவிகள் இந்தியர்களுக்கு வழங்க உறுதியளிக்கப்பட்ட போதிலும் நிறைவேற்றப்படாமை.

ii) ஐ. சி. எஸ் தேர்வில் வெற்றிபெற்ற சுரேந்திரநாத் பானர்ஜியின் பெயரை வெற்றி பெற்றோர் பட்டியலிலிருந்து நீக்கியமை.

iii) கல்கத்தா இந்தியர் சங்கம் (Indian Association of Calcutta) ஆங்கிலேயரின் அநீதிகளை வெளிப்படுத்தியமை.


சுரேந்திரநாத் பாணர்ஜி


ஹ"!ம்


W.C. பாணர்ஜி

### 9. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்கூற்றில் சுதந்திரம் பெறும் நோக்குடன் தோன்றிய அரசியல் அமைப்புக்கள்

i) **கல்கத்தா இந்தியர் சங்கம் (Indian Association of Calcutta)**

- 1876ல் சுரேந்திரநாத் பானர்ஜி என்பவரால் கல்கத்தாவில் நிறுவப் பட்டது.

- படித்த மத்தியதர வகுப்பு இளைஞர்கள் அதிகம் இவ்வியக்கத்தில் சேர்ந்து கொண்டனர்.
- பிரித்தானியர்கள் மீதிருந்த வெறுப்பை வெளிப்படையாகத் தெரி வித்த முதல் அமைப்பு இதுவாகும்
- பானர்ஜி நாடு முழுவதும் பிரயாணம் செய்து மக்களுக்கு சங்கத் தின் நோக்கத்தை தெளிவுபடுத்தினார்.
  1) சிவில் சேவை பரீட்சையை (ஐ.சி.எஸ்) மீளாய்வு செய்தல்.
  2) ஆயுதங்கள் சட்டத்தை மறுபரிசீலனை செய்தல்.
  3) பிரித்தானிய பயிர்ச் செய்கையாளரிடமிருந்து விவசாயிகளைப் பாதுகாத்தல்.

ii) **இந்திய தேசிய காங்கிரஸ் (Indian National Congress)**

- 1885ல் ஆலன் ஒக்டெவியன் ஹியும் என்ற ஓய்வுபெற்ற பிரித் தானிய ஊழியரால் இந்திய தேசிய சங்கம் (Indian National Union) ஆரம்பிக்கப்பட்டது.
- இதன் முதல் மாநாடு W.C. பானர்ஜியின் தலைமையில் பம்பாயில் நடைபெற்றது. இக்கூட்டத்தில் சங்கத்தின் பெயர் "இந்திய தேசிய காங்கிரஸ்" என மாற்றப்பட்டது.
- **இந்திய தேசிய காங்கிரஸின் நோக்கங்கள் பின்வருமாறு.**
  1) இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் வாழும் மக்களிடையே நாட்டுப்பற்றை ஏற்படுத்துதல்.
  2) பொதுசன அபிப்பிராயத்தைப் பெறுதல்
  3) இனம், மதம், பிரதேசம் என்பவற்றை கருத்தில் கொள்ளாது தேசிய வாதத்தை வளர்த்தல்.
  4) பொதுத் தேசிய அபிலாசைகளை பிரித்தானியரிடம் முன்வைத்தல்.
- இந்திய தேசிய காங்கிரஸிற்கு தலைமை தாங்கிய தலைவர்கள் வருமாறு:

  தடாபாய் நபரோஜி, கோபால கிருஷ்ண கோகிலே, சுரேந்திரநாத் பாணர்ஜி, பாலகங்காதார திலக, பிபின் சந்ரபோல், லாலா லஸ்பதிராய், மகாத்மா காந்தி



காங்கிரஸ் உறுப்பினர்கள்

- தொடக்கத்தில் காங்கிரஸில் பிரிட்டிஷ் விசுவாசிகளே நிறைந் திருந்தனர். ஆயினும் பின்னர் மிதவாதிகள், தீவிரவாதிகள் எனும் இரு பிரிவுகள் தோன்றியது.

## 10. மிதவாதிகள் எனப்படுவோர் யார்?

i) கலந்துரையாடல், விவாதித்தல், விண்ணப்பங்கள் என்பவற்றின் மூலம் தமது வேண்டுகோளை நிறைவேற்றக்கூடியதாக இருக்குமென நம்பு பவர்கள் மிதவாதிகள் (நடுநிலைவாதிகள்) எனப்படுவர்.

ii) வெள்ளையர்கள் இந்தியாவிற்கு பல நன்மைகள் செய்துள்ளனர் அவர்களிடம் கலந்துரையாடி உரிமைகளைப்பெற வேண்டும் என்ற கொள்கை உடையவர்களாக மிதவாதிகள் காணப்பட்டனர்.

iii) உடன்கட்டை ஏறுதல், பாலியல் திருமணம், சாதி வேற்றுமைகள் என்பவற்றை இல்லாதொழித்தல் என்பன இந்தியாவிற்கு பெரும் நன்மையே என மிதவாதிகள் கருதினார்கள்.

iv) மிதவாதிகள் பலவிதமான வெற்றிகளை அடைந்தபோது அதிக மானவை நிராகரிக்கப்பட்டது.

## 11. மிதவாதிகளின் வேண்டுகோள்கள்

- இந்திய தேசிய காங்கிரஸின் வருடாந்தக் கூட்டங்கள் மூலம் அரசுக்கு மிதவாதிகள் பல்வேறு கோரிக்கைகளை முன்வைத்தனர்.

i) சிவில் சேவை பரீட்சையைப் (ஐ.சி.எஸ்) பிரித்தானியாவிலும் இந்தியாவிலும் ஒரே நேரத்தில் நடாத்துதல்.

ii) ஆயுதங்களை கொண்டு செல்வதற்கான அனுமதியளித்தல்.

iii) கல்வியின் பொருட்டு மேலதிக வசதிகளைச் செய்து கொடுத்தல்.

iv) உயர் பதவிகளுக்கு இந்தியர்களிலிருந்து அதிகமானோரைச் சேர்த்தல்.

v) போர்ச் செலவைக் குறைத்தல்.

## 12. மிதவாதிகளின் தோல்விக்கான காரணங்கள்

i) தேசிய காங்கிரஸின் சில அங்கத்தவர்கள் பிரித்தானியரது ஆட்சியை வெளிப்படையாக விமர்சித்தமை.

ii) காங்கிரஸில் பொதுமக்கள் அங்கத்துவம் வகிக்காததால் தலைவர்களுக்கும் மக்களுக்கும் இடையில் மனக்கசப்பு ஏற்பட்டமை.

iii) தாராண்மை வாதிகளின் அடிப்படைக் குறை பாடாக அமைந்தது அவர்களது பலவீனமான அமைப்பாகும் என P.B. மஹாஜன் குறிப்பிடு கின்றார்.

## 13. இந்திய தேசிய காங்கிரஸில் இருந்த மிதவாதத் தலைவர்கள்

i) **தடாபாய் நபரோஜி**

- "இந்தியாவின் முதுப்பெருங் கிழவர்" (Grand old Man of India) ஆன தடாபாய் நபரோஜி இந்திய தேசிய சங்கத்தின் ஆரம்ப உறுப்பினராவார்.

- இந்தியாவின் இலட்சியம் சம்பந்தமாகச் "சுயராஜ்யம்" எனும் வார்த்தையை இவரே முதன் முதலில் உபயோகித்தார்.
- பிரித்தானிய லிபரல் கட்சியின் உறுப்பினரான இவர் பிரித்தானிய பாராளுமன்ற உறுப்பினராகவும் இருந்தார்.
- பிரித்தானியரால் இந்தியாவில் நடைபெற்ற சுரண்டல், அநீதி என்பவற்றை கண்டித்து இந்தியர்களுக்காக தமது போராட்டத்தை பிரித்தானியாவிலே மேற்கொண்டனர்.

ii) **கோபால் கிருஷ்ண கோகிலே**

- 1856ல் மாராஷ்டிரத்தில் பிறந்தார் இவர் ஆசிரியராகவும், அதிபராக வும் கடமை புரிந்தார்.
- ஆரம்பக் கல்வியை கட்டாயமாக்க சட்டம் ஒன்றைக் கொண்டு வந்தார்.
- காந்தி 'என் அரசியல் குரு" என்று குறிப்பிட்டதும் கோகிலேயே ஆகும்.

iii) **சுரேந்திரநாத் பானர்ஜி**

- இந்திய தேசிய சங்கத்தின் தந்தை எனக் குறிப்பிடப்பட்டார்.
- வங்காளம் எனும் பத்திரிகையின் ஆசிரிய ராக திகழ்ந்தார்.
- இந்திய தேசிய சங்கத்தின் தலைவராக இருமுறை தெரிவு செய்யப் பட்டார்.


தடாபாய் நபரோஜி


கோகிலே


சுரேந்திரநாத் பானர்ஜி

**14. தீவிரவாதிகள் எனப்படுவோர் யார்?**

- ஒரு கொள்கையைக் கொண்டு தீவிரமாகச் செயற்படுவோர் தீவிர வாதிகள் எனப்படுவர். அதாவது கிளர்ச்சிகள், வன்முறைகள், வேலை நிறுத்தங்கள் என்பவற்றில் இடப்படுவதன் மூலம் தமது வேண்டு கோள்களை நிறைவேற்றுபவர்களாக விளங்குபவர்களே தீவிரவாதி களாவர்.
- மிதவாதக் கொள்கையுடையோர் பலவீனமடைந்தபோது தீவிரவாதத் தலைவர்கள் தோன்றினார்கள். வெள்ளையர்களை அடித்துத் துரத்தி விட்டு இந்தியாவை சுதந்திர நாடாக்கவேண்டுமென்று தீவிரவாதிகள் முழக்கமிட்டனர்.

## 15. தீவிரவாத தலைவர்களால் பெறப்பட்ட வெற்றிகள்

i) சுதந்திரப்போராட்டத்தில் பொதுமக்களை இணைத்தமை. கல்வி மான்கள் மாத்திரமின்றி விவசாயிகள், தொழிலாளர்கள் போன்றோரை யும் சேர்த்துக்கொண்டமை

ii) பூரண சுதந்திரத்தின் பொருட்டு போராட்டம் நடத்தியமை.

iii) வெளிநாட்டுப் பொருட்களைப் பாவிக்காது தடுத்தமை.

iv) வேலை நிறுத்தங்கள் மூலம் பிரித்தானியப் பொருளாதாரத்தை வீழ்ச்சியுறச் செய்தமை.

v) பத்திரிகைகள் மூலம் மக்கள் கருத்துக்களை வெளியிட்டமை.



பால காங்காதாரதிலகர்



பிபின் சந்ரபோல்



லாலா லஜ்பதி ராய்

## 16. இந்திய தேசிய காங்கிரஸிலிருந்த தீவிரவாதத் தலைவர்கள்

i) **பால காங்காதாரதிலகர்**

- 1856ல் மகாரஷ்டிரத்தில் பிறந்த இவர் வழக்கறிஞராக விளங்கி னார்.
- இத்தாலியின் ஐக்கியத்திற்கு கவூர் பாடுபட்டதைப்போல இந்தியா வின் பழம் பெருமையைப் பேசி மக்களை ஒன்று திரட்டுவதில் முன்நின்றார். இதனால் "உலக அபிமானி" என அழைக்கப்பட்டார்.
- இந்தியாவில் மாற்றங்களை கொண்டு வருவதற்கு கல்வி முக்கிய ஊடகம் எனக்கருதினார்.
- "கேஷரி", "மருத" போன்ற பத்திரிகைகளை வெளியிட்டார்.

ii) **பிபின் சந்ரபோல்**

- 1887ல் இந்திய தேசிய சங்கத்தில் சேர்ந்து கொண்டார்.
- இந்தியாவின் பூரண சுதந்திரத்திற்காகப் பாடுபட வேண்டுமெனக் கூறினார்.

iii) **லாலா லஜ்பதி ராய்**

- 1865ல் பஞ்சாப்பில் பிறந்த இவர் ஒரு வழக்கறிஞர் ஆவர்.
- 1888ல் தேசிய சங்கத்தில் இணைந்து கொண்டார்.

• பிரித்தானிய அரசுக்கு விண்ணப்பங்கள் அனுப்புவது பயனற்றது என்பதை உணர்ந்த இவர் பிரித்தானிய ஆட்சிக்கு எதிராக செயற் பட வேண்டுமென எடுத்துக்காட்டினார்.

### 17. இந்திய தேசிய காங்கிரஸ் பிளவுபடுதல்

i) 1907ல் சூரத் நகரில் நடந்த காங்கிரஸ் மாநாட்டில் தீவிரவாதிகளும், மிதவாதிகளும் கடுமையாகமோதிக் கொண்டனர்.

ii) மிதவாதிகள் டொமினியன் நிலையில் சுதந்திரம் வேண்டி நின்ற வேளையில் தீவிர வாதிகள் பூரண சுதந்திரத்தை வேண்டி நின்றனர். இக்கருத்து வேறுபாடு காங்கிரஸின் பிளவுக்கு வித்திட்டது.

iii) தீவிரவாதிகள் தேசிய மாநாடு என்ற பெயரில் தனித்து இயக்க முடிவு செய்தனர்.

iv) தீவிரவாதத் தலைவர்களால் தங்களுக்கு ஆபத்து என்பதை உணர்ந்த வெள்ளை யர்கள் பல்வேறு குற்றச்சாட்டுக்களின் கீழ் கைதுசெய்து சிறைவைத்தனர்.
**உ+ம்:-** தீவிரவாதத் தலைவர் திலகர் கைது செய்யப்பட்டு பர்மாவில் உள்ள மாண்டலே சிறையில் அடைக்கப்பட்டார்.

### 18. வங்காளம் பிளவுபடுதல்: முக்கிய அம்சங்கள்

i) காங்கிரஸ் பேரியக்கமாக வளர்வதைக் கண்ட பிரிட்டிஷ் அரசாங்கம், பிரித்தாளும் கொள்கையில் இறங்கி இந்துக்களும், முஸ்ஸிம்களும் ஒற்றுமையுடன் வாழ்ந்த வங்காளத்தை இரண்டாகப் பிரித்தது.

ii) முஸ்லிம் அதிகமாக வாழும் பகுதியை கிழக்கு வங்காளம் என்றும், இந்துக்கள் அதிகம் வாழும் பகுதியை மேற்கு வங்காளம் என்றும் இரு மாகாணங்களாகப் பிரிவினை செய்ய உத்தரவிட்டார் ஹர்சன் பிரபு.


ஹர்சன் பிரபு

iii) கடும் எதிர்ப்புக்கு இடையே 1906 முதல் இந்தப் பிரிவினை அமுலுக்கு வந்தது.

### 19. முஸ்லீம் லீக் கட்சி (Muslim League Party)

i) தேசிய இயக்கம் பலம் வாய்ந்ததாக எழுச்சியடைவதால் தமக்கு ஆபத்து ஏற்படும் என கண்ட பிரித்தானியர் அக்கட்சிக்குள் பிளவு ஏற்படுத்தும் நோக்கில் 1906ல் முஸ்லீம்களை கொண்டு அமைக்கப் பட்டதே முஸ்லீம் லீக் கட்சி ஆகும்.

ii) சிறுபான்மையினரான முஸ்லீம்களைத் தம் பக்கம் திருப்புவதற் காகவே பிரித்தானியரால் இவ் அமைப்பு உருவாக்கப்பட்டது.

iii) முஸ்லீம் லீக்கின் முக்கிய தலைவரான சதித்தான் முஸ்லீம் மக்களை இந்துக்களோடு இணையாது பிரித்தானியருக்கு ஒத்துழைப்பு வழங்கு மாறு பணித்தான்.

## 20. மகாத்மா காந்தியின் ஆரம்பகால விபரம்


மகாத்மா காந்தி

i) மோகனதாஸ் கரம்சந்த் காந்தி குஜராத்தி லுள்ள போர்பந்தர் எனுமிடத்தில் பிறந்தார்.

ii) தந்தையார் பெயர் காபாகாந்தி, தாயார் பெயர் புத்லிபாய் ஆவார்.

iii) காந்திஜி, பாபுஜி எனும் கௌரவப் பெயர் களாலும் இவர் அழைக்கப்பட்டார்.

iv) பிரித்தானியாவில் கல்விகற்று பரிஸ்ரர் பட்டம் பெற்று தென் ஆபிரிக்காவில் "நதால்" எனுமிடத்தில் சேவை செய்தார். தென் ஆபிரிக்கா அரசு இந்தியர்களுக்கு எதிராக கொண்டுவந்த கறுப்புச் சட்டத்தை எதிர்த்து சத்தியாக்கிரகம் செய்தார். இதில் 2 மாத சிறைத் தண்டனையை முதன் முதலில் அனுபவித்தார்.

v) 1915ல் இந்தியாவுக்கு வந்ததன்பின் இயக்கங்களில் கடமையாற்றினார்.

vi) சத்தியக்கிரகமும், அகிம்சையும் காந்தியின் தந்திர உபாயமாக இருந்தது.

vii) 1948ல் கோட்சே என்ற இந்துத் தீவிரவாதியின் துப்பாக்கிச் சூட்டினால் உயிரிழந்தார்.


தென்ஆபிரிக்காவில் சத்தியாக்கிரகத்தின்போது


உப்பு வரிக்கெதிரான பாதயாத்திரை



தனது உடைகளை நெய்து கொண்ட காந்தி

## 21. இந்தியாவின் சுதந்திரப்போராட்டத்திற்கு மகாத்மா காந்தியின் பங்களிப்பு

i) இந்திய விவசாயிகளின் வறுமை, பின்தங்கிய நிலையை நீக்கப் பாடுபட்டார்.

உ+ம்: வங்காளத்தில் இண்டிக்கோ (துணிகளுக்கு சாயமூட்டப் பயன்படும் பயிர்) பயிரிடுவோரின் பிரச்சனையை தீர்க்க சத்தியாக்கிரக போராட்டம் செய்தமை.

ii) உள்நாட்டு உற்பத்திகளுக்கு மதிப்பளிக்க வேண்டுமென்ற கருத்தை நிலை நிறுத்தி தமது உடைகளைத் தாமே நெய்து கொண்டார்.

iii) ஒத்துழையாமை இயக்கத்தை ஆரம்பித்தார். இந்திய தேசிய காங்கிரஸின் உதவியுடன் இவ்வியக்கத்தை ஆரம்பித்து போராட்டங்களில் ஈடுபட்டார்.

iv) சுயாட்சியை அடைவதற்கு இந்துக்களுக்கும், முஸ்லீம்களுக்கும் இடையில் ஒற்றுமை ஏற்பட வேண்டுமென்று கோரி அதற்காக பாடுபட்டார்.

v) இந்தியர்களது பிரச்சனைக்கு தீர்வு காணும் பொருட்டு அரசியல் யாப்பு சீர்திருத்தங்கள் சிலவற்றுடன் ஸ்டெபர்ட் கிரிப்ஸ் முன்வைத்த யோசனையை "எதிர்கால திகதி குறிப்பிட்ட காசோலை" என கூறி குறித்த யாப்பினை ஏற்க மறுத்தார்.

vi) சிவில் சட்டத்தை மீறும் இயக்கத்தை ஆரம்பித்தார். மகாத்மாகாந்தியின் சிவில் சட்டத்தை மீறும் இயக்கம் பாதயாத்திரை மூலமே ஆரம்பமானது.

உ+ம்: உப்புவரி தொடர்பான சட்டத்தை மீறும் பொருட்டு சபர்மதி ஆச்சிரமத்திலிருந்து தண்டி கடற்கரைவரை பாதயாத்திரை மேற்கொண்டார்.

vii) வெள்ளையனே வெளியேறு எனும் இயக்கத்தை ஆரம்பித்தார். இவ்வியக்கத்தின் போராட்டங்கள் மூலம் மக்களைக் கவர்ந்து கொண்டார்.

## 22. ஜாலியன் வாலா பாக் படுகொலை

i) சுதந்திர போராட்டத்தை அடக்க பிரித்தானியர் "ரவுலத் சட்டம்" (யாரையும் விசாரனையின்றி கைதுசெய்து சிறையில் அடைக்கும் சட்டம்) எனும் புதிய சட்டத்தை பிறப்பித்தது.

ii) இச்சட்டத்தை எதிர்த்து பஞ்சாப் மாநிலம் அமிர்தசரஸ் நகரில் ஊர் வலம் நடந்தது. இதை ஏற்பாடு செய்த தலைவர்கள் கைது செய்யப்பட்ட தோடு ஆர்ப்பாட்டக்காரர்கள் மீது துப்பாக்கிச்சூடு நடத்தி பலர் கொலை செய்யப்பட்டனர்.

iii) இச்சம்பவத்தை கண்டித்து 1919ல் அமித்தசரஸ் நகரில் ஜாலியன் வாலா பாக் மைதானத்தில் பொதுகூட்டத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டது.

iv) கூட்டம் நடந்து கொண்டிருந்த போது ஜெனரல் டயர் என்ற வெள் ளைக்கார தளபதி பீரங்கி வண்டிகளுடன் மைதானத்துக்குள் நுழைந் தான். எந்தவித எச்சரிக்கையுமின்றி பிரங்கியால் ராணுவத் தினர் சுட 379 பேர் உயிரிழந்ததுடன் 1200 பேர் காயமடைந்தனர்.


ஜெனரல் டயர்

v) இப்படுகொலை இந்தியர்களுக்கு ஆத்திரத்தை அதிகரித்ததுடன் உலக நாடுகளும் கண்டனங்கள் தெரிவித்தது. இதனால் பிரிட்டிஷ் அரசு கண்துடைப்புக்கு விசாரணை நடாத்தியது.

vi) விசாரணையின்போது "குண்டுகள் தீரும் வரை சுட்டேன். அது என்கடமை குண்டுகள் இருந்திருந்தால் இன்னும் சுட்டிருப்பேன்" என்றான் ஜெனரல் டயர்.

## 23. ஒத்துழையாமை இயக்கம் (1920 - 1922)

i) சுதந்திர போராட்டத்திற்கு தலமைவகித்த திலகர் 1920ல் இறக்க சுதந்திரப் போரில் "காந்தி யுகம்" தொடங்கியது.

ii) 1920ல் கல்கத்தாவில் நடைபெற்ற இந்திய தேசிய காங்கிரஸ் கட்சியின் பொதுக்குழு கூட்டத்தில் காந்தியால் **ஒத்துழையாமை இயக்கம்** நடத்துவது பற்றி முடிவு செய்யப்பட்டது.

iii) ஒத்துழையாமை இயக்கத்தின் செயல் திட்டங்கள் வருமாறு
- பிரிட்டிஷ் அரசு வழங்கிய பட்டங்கள், பதவிகளை துறத்தல்
- அரச விழாக்களில் கலந்து கொள்ளாது புறக்கணித்தல்
- தேர்தலில் போட்டியிடாமல் ஒதுங்குதல்
- பிரித்தானிய பொருட்களை பகிஷ்கரித்தல்
- நீதிமன்றம், சட்டமன்றம், கல்வி நிறுவனங்களை பகிஷ்கரித்தல்

iv) உத்தர பிரதேசத்தில் பொலிசார் சிலரை இவ் இயக்கத்தவர் சிலர் கொலை செய்ததால் வேதனை அடைந்த காந்தி அந்த இயக்கத்தை இடை நிறுத்தினார். இதனால் "மோதிலாஸ் நேரு" "S.M. தாஸ்" ஆகியோர் காந்தியை விட்டுச் சென்று **சுயராஜ்ய கட்சியை** ஆரம்பித்தனர்.

**24. வட்டமேசை மாநாடு**

i) இந்தியப் பிரச்சினை பற்றி விவாதிக்க லண்டனில் முதலாவது வட்டமேசை மாநாடு 1930ல் நடந்தது. இந்தியக் காங்கிரஸ் கலந்து கொள்ளாததால் மாநாடு தோல்வியில் முடிவடைந்தது. (இக்காலத்தில் காந்தி சிறையிலிருந்தார்.)

ii) 2வது வட்டமேசை மாநாட்டில் காந்தியைக் கலந்து கொள்ளச்செய்ய வேண்டுமென்று அன்றைய பிரிட்டிஷ் பிரதமர் ''ராம்சே மெக்டொனால்டு'' முயற்சி எடுத்தார்.

iii) சிறையிலிருந்த காந்தியை அழைத்து வந்த ஆளுநர் "வைஸ்ராய் இர்வின்" காந்தியுடன் பேசினார் அப்போது காந்தி சில நிபந்தனை களை முன்வைத்தார். அதை ஆளுநர் ஏற்றுக்கொள்ள காந்தி - இர்வின் ஒப்பந்தம் கையெழுத்தானது.

iv) 1931ல் லண்டனில் நடைபெற்ற 2வது வட்ட மேசை மாநாட்டில் காந்தி, காங்கிரஸின் ஒரே பிரதிநிதியாகக் கலந்துகொண்டார். இங்கு காந்தி 45 நிமிடங்கள் உணர்ச்சி பொங்க சுதந்திர முழக்க மிட்டார். உலகம் முழுவதும் உள்ள பத்திரிகைகளில் காந்தியின் பேச்சு வெளியானது இதனால் உலக ஆதரவை காந்தி பெற்றுக் கொண்டார்.

v) சாதி ரீதியாகத் தொகுதிகள் ஒதுக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கை யினால் 3வது வட்டமேசை மாநாடும் தோல்வியடைந்தது. இத்தோல் வியை அடிப்படையாகக் கொண்டு 1935ல் இந்தியச்சட்டம் அமைக்கப் பட்டது.



வட்டமேசை மகாநாட்டில் காந்தியடிகள் (1931)

**25. இந்திய சுதந்திர போராட்டத்தில் சுபாஷ் சந்திரபோஸ்**

i) 1897ல் பிறந்த சுபாஷ் சந்திரபோஸ் லண்டனில் ஐ.சி.எஸ் படிப்பினை மேற்கொண்டார்.

ii) இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியாளரின் கொடுமையால் கொதிப் படைந்து ஐ.சி.எஸ் பட்டத்தினை துறக்க முடிவு செய்தார். 1921ல் நாடு திரும்பினார்.

iii) 1938ல் நடந்த காங்கிரஸ் மாநாட்டுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவரை 'நேதாஜி'' (தலைவர்) என்று மக்கள் அழைத்தனர்.

iv) கருத்து வேறுபாட்டினால் காங்கிரசிலிருந்து விலகி "முன்னேற்றக் கட்சி" எனும் அமைப்பை ஆரம்பித்தார்.


காந்தியும் சந்திரபோஷ்சும்

v) பிரிட்டிஷ் அரசு நேதாஜியை கைதுசெய்து வீட்டுக் காவலில் வைத்தபோது மாறு வேடத்தில் ஜேர்மனி போய்ச்சேர்ந்தார்.

vi) ஜேர்மனியில் ஹிட்லரைச் சந்தித்துப் பேசிய நேதாஜி ஜப்பானின் உதவியுடன் பிரிட்டிஷ் அரசை எதிர்க்க முடிவு செய்து ஜப்பான் சென்றடைந்தார்.

vii) ''இந்தியாவில் உள்ள பிரித்தானிய ஆட்சியாளர்களை ஆயுத பலத்தால் வெளியேற்ற வேண்டும்" என்னும் கருத்திற்கு ஏற்ப செயற் பட்ட இந்திய முற்போக்காளர் குழுவிற்கு தலைமை தாங்கினார்.

viii) பிரித்தானியரிடமிருந்து ஜப்பான் கைப்பற்றிய பர்மா, மலாயா ஆகிய நாடுகளில் ஜப்பானிடம் சரணடைந்த பிரிட்டிஷ் படையிலிருந்த இந்திய வீரர்களைக் கொண்டு 'இந்திய தேசிய இராணுவம்'' அமைத்திருந்தார்.

ix) 1945ல் விமான விபத்தில் நேதாஜி இறந்தார்.

## 26. முகம்மது அலி ஜின்னாவும் பாகிஸ்தான் உதயமாகுதலும்

i) இந்தியாவில் முஸ்லிம்களுக் குத் தனியான இராச்சியம் தேவை என்ற கருத்தை முதன் முதல் "மொகமட் அல்லாமா இக்பால்'' கொண்டிருந்தார். இதனை முகமது அலி ஜின்னா வும் ஏற்றுச் செயற்பட்டார்.


ஜின்னாவும் காந்தியும்

ii) முஸ்லிம்களுக்கான தனியான நாட்டில் பஞ்சாப், வடமேற்கு எல்லைப் பிரதேசம், காஷ்மீர், சிந்து, பலுக்கிஸ்தான் முதலிய பிரதேசங்கள் அடங்கின.

iii) ஜின்னாவின் நோக்கினை முற்றிலும் காந்தி எதிர்த்துக் கொண்டார், ஆனாலும் நேதாஜி போன்றோர் ஆதரித்துக் கொண்டனர்.

iv) இந்திய தேசிய காங்கிரசிற்கும் முஸ்லிம் லீக்கிற்கும் இடையே இணக்கத்தை ஏற்படுத்த "சிம்லா மகாநாடு" ஒழுங்கு செய்யப்பட்ட போதும் அது தோல்வி கண்டது.

v) நேருவின் முயற்சியால் பிரிவினைக்கு காந்தி சம்மதித்தார். இந்தியா சுதந்திரம் பெறவும், வகுப்புக் கலவரங்களுக்கு முடிவு கட்டவும் பாகிஸ்தான் பிரிவினைக் குச் சம்மதிக்கிறேன் என காந்தி கூறினார்.



கிளமென்ட் ஆர்ட்லி

vi) இதனைத் தொடர்ந்து ஆளுநரான "மவுண்ட் பேட்டன்" லண்டன் சென்று பிரதமர் "கிளமென்ட் ஆர்ட்லி"யைச் சந்தித்து ஆலோசனை நடத்திவிட்டு 1947ல் இந்தியா திரும்பி தனது திட்டத்தை இந்தியத் தலைவர்களிடம் தெரிவித்தார்.

- இந்தியாவுக்கு 1947 ஆகஸ்ட் 15ம் திகதி சுதந்திரம் வழங்க பிரிட்டிஷ் அரசு முடிவு செய் துள்ளது.
- முஸ்லிம்கள் பெரும்பான்மையாக வாழும் பகுதிகள் பிரிக்கப்பட்டு "பாகிஸ்தான்" என்ற சுதந்திர நாடு அமைக்கப்படும். பஞ்சாப் பைச் சார்ந்த பகுதிகள் மேற்கு பாகிஸ்தான் எனவும், வங்காளத் தைச் சார்ந்த பகுதிகள் கிழக்குப் பாகிஸ்தான் எனவும் அமையும்.

இந்தியா 15-08-1947இல் சுந்திரம் அடைந்தது. 14-08-1947ல் பாகிஸ்தான் உதயமாகியது. 26-10-1950ல் இந்தியாவின் பூரண அரசியல் யாப்பு நடைமுறைக்கு வந்ததன் மூலம் சுதந்திரமுடைய ஜனநாயக அரசாக இந்தியா மாறியது.

## 27. ஜப்பான் : அறிமுகம்

i) ஜப்பானியர்கள் தமது நாட்டினை நிஹான் (Nihon) அல்லது நிப்பான் (Nippon) என்று அழைத்தனர். உதய சூரியன் நாடு அல்லது சூரியனின் தோற்றம் என்று இச்சொற் கள் பொருள்படும்.

ii) கியுஷு (Kyvshu), ஹிக்கொக்கு (Shi-koku), ஹான்ஷு (Honshu), ஹொக் கைடோ (Hok-kaido) ஆகிய நான்கு பெருந் தீவுகள் கொண்டதாக யப்பான் உள்ளது.

iii) ஆதிகாலத்தில் சீனாவிலிருந்தும், கொரியாவிலிருந்தும் கடல்கடந்து குடியேறிய மங்கோலிய இனத்தவரே ஜப்பானியராவார். ஆயினும் மங்கோலியர் அல்லாத அய்னுகள் (Ainu) என்று அழைக்கப்படும் சிறுபான்மை சமூகத்தவரும் தற்போது வாழ்கின்றனர்.

iv) சீனா மொழி, கலைகள், தத்துவம், ஆகியவை ஆதிமுதலே ஜப்பானைப் பாதித்தன. ஆயினும் ஜப்பான் பலவிதங்களிலும் வேறுபட்ட நாடாகவே இன்று உள்ளது.

v) ஆதிகாலத்தில் ஆதிக்கம் செலுத்திய நிலமானிய பிரபுக்கள் அந்நியர் மீது வெறுப்பினையும் தாம் மேம்பட்டவர்கள் என்ற கர்வ உணர்வினையும் மக்களிடையே வளர்த்து அண்டை நாடுகளிலிருந்து ஜப்பானியரை பிரித்து தனித்திருக்கச் செய்தனர்.




ஜப்பான்

## 28. ஜப்பானில் நிலவிய நிலமானிய முறை ஆட்சி

i) ஜப்பானிய முதல் தலைநகரான "நாரா" (Nara), கியோத்தோ (kyoto) நகருக்கு மாற்றப்பட்டு ஹீயன் (Heian) ஆட்சி தொடர்ந்த போதிலும் சமுதாய ஆற்றல்களை கட்டுப்படுத்த முடியவில்லை.

ii) குறிப்பாக பூஜிவாராக் குடும்பத்தினரது அடக்கு முறையும் நிலமானிய பிரபுக்களினதும் வளர்ச்சியும் சாமுராய் எனும் படைக்குலத்தவரின் ஒருங்கிணைப்பும் குறிப்பிடத்தக்கது.

iii) சிற்றரசர் போல் வாழ்ந்த உயர்நிலைப் பிரபுக்களும், நிலமானிய பிரபுக்களும் பண்ணைத் தனியுடைமையாளராக வாழ்ந்தனர். பண்ணையையும் படைகளையும் பெற்று வாழ்ந்த இத்தகையோரது "நில மானியப்படை - பண்ணை" முறைக்கு ஷோகன் (Shohen) எனப் பெயர் ஏற்பட்டது.

iv) மினமோட்டொ யொரித்தோமோ, 1192ல் பூஜிவாராக்களை ஆதிக்கத்திலிருந்து விரட்டியடித்து ஷோகனாட்சி முறையைத் துவக்கினார். இதனால் முதலாவது ஷோகன் இவரே காமகுராவிலிருந்தே ஆட்சி புரிந்தான்.

v) பிரபுக்களின் சதியால் அஷிகாகா என்பவர் கியோத்தோ நகரில் ஷோகன் பதவியில் அமர்த்தப்பட்டார். இதனால் காமகுரா ஷோகன்களுக்கும், கியோத்தோ ஷோகன்களுக்கும் இடையே இடையறாமல் போர்கள் நடைபெற்று வந்தது.

vi) காமகுரா ஷோகன்களால் பிரபுக்களின் பண்ணைகளில் அமர்த்தப்பட்ட அதிகாரிகள் வலிமை பெற்று தமியோக்கள் என்ற பெயர் பெற்று குடியானவர்களிடமிருந்து குத்தகை வசூலித்து சாமுராய்கள் (Samurai) எனும் படைவீரர்களை வைத்திருந்தனர்.

vii) சாமுராய்களுக்கு ஆட்சியாளா் ஒருவரின் கீழ் ஒரே அமைப்பாக ஒன்று படவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. பின்னர் படிப்படியாக ஒன்றுபடும் வழிமுறையில் பிரவேசித்தமையால் நவீன நாடுகளில் ஒன்றாக ஜப்பான் திகழ்கிறது.

**29. நிலமானிய முறை யுத்தங்கள் முடிவுக்குவர காரணமான வீரர்கள்**

**i) ஒடநொபுனகா (Oda Nobunaga)**


ஒடநொபுனகா

- இவனிடம் காமகுரா ஷோகன் உதவி கோரியபோது கியோடோ நகருள் படையோடு புகுந்து அஷிகாகா ஷோகனை விரட்டினான். இதன் மூலம் யப்பானை ஒன்றிணைத்து அமைதியையும் உறுதிப்பாட்டையும் ஏற்படுத்துவதற்கான அடிப்படையை அமைத்தான்.
- பௌத்த கோவில்களை அழித்ததோடு பிக்குகளையும் கொலைசெய்தான்.
- தனது படைஅதிகாரி ஒருவரால் 1583ல் கொலை செய்யப்பட்டான்.

**ii) தொயத்தோமி ஹிதேயோஷி (Toyatomi Hideyoshi)**

- நொபுனகாவின் படைத்தலைவர்கள் ஹிதேயோஷி என்பவரின் பின் திரண்டு தமது பணியைத் தொடர்ந்தனர்.
- ஹிதேயோஷி திறமை மிகுந்த மனிதா் பகைவர்களை அடக்கியதோடு பண்ணை தோறும் வாழும் மனிதர்கள், கால்நடைகள், நிலப் பரப்பு முதலிய புள்ளி விரபங்களைத் திரட்டி தொகுத்தான்.
- ஜப்பானில் கிறிஸ்த்தவ மதத்தை தடைசெய்தார்.
- உயர்ந்த நுண்மதி, சரியான தீர்மானங்களை மேற்கொள்ளல் போன்ற பண்புகள் நிறைந்த இவர் ஜப்பானிய இராணுவத்தின் அடிமட்டத்திலிருந்து ஆட்சியாளன் வரை உயர்ந்த ஒரே மனிதன் இவனே.
- கொரியாமீது படையெடுப்பதற்கு ஏற்பாடுகள் செய்யும் காலத்தில் (1598ல்) இவன் இறந்தான்.

**iii) டொகு காவா இயாஷு (Ieyayasu - இயேயாசு)**

- இவன் நொபுனகாவின் மற்றொரு படைத்தளபதியாவான். நொபுனகாவின் இறப்பின் பின்னர் மகன் நொபுகத்சுக்கும் ஹிதேயோஷிக்கும் இடையில் ஒற்றுமையை ஏற்படுத்தியவன் இயாஷு ஆகும்.
- ஷிதேயோஷிக்கு அடுத்தபடியாக பெரும் நிலப் பிரபுவாக விளங்கிய இயேயாசு மினமோட்டோ குடும்பத்தை சேர்ந்தவனாததால் ஷோகனாக வேண்டுமென்று ஆசைப்பட்டான். (மினமோட்டோ மரபினா் டொகுகாவா எனும் ஊரில் வாழ்ந்தமையால் தங்கள் பெயர்களுக்கு முன் டொகுகாவா எனும் அடைமொழியைச் சேர்த்து "டொகுகாவா ஷோகன்கள்" என அழைத்தனர்)

- ஆயினும் தமியோக்கள் அனைவரும் "மித்சுநாரி" என்பவரின் தலைமையில் கிளர்ச்சியில் ஈடுபட்டனர். கிளர்ச்சிக்காரர்களை செசிகஹாரா (Sekigahara) எனுமிடத்தில் தோற்கடித்து 1603ல் ஜப்பானிய ஆட்சியாளனாக மாறினான்.
- 1615ல் ஹிதேயோஷியின் மகன் ஹிதேயோரி (Hidenyori) தலைமையிலான மற்றொரு கிளர்ச்சியை ஓசாகா (Osaka) நகரில் வெற்றி கொண்டான்.
- இயேயாசு தனது தலைநகரமாக ஈடோவைத் (Yedo) தேர்ந்தெடுத்தான். இந்நகரம்தான் இன்றைய ஜப்பானின் தலைநகர் டோக்கியோ (Tokyo) ஆகும்.
  நகரின் பாதுகாப்புக்காக நீர் அகழியால் சூழப்பட்ட சக்தி வாய்ந்த கோட்டையொன்றைக் கட்டி எழுப்பினான்.
- பலம் வாய்ந்த மத்திய அரசைப் பாதுகாப்பதற்காக முழு நாட்டிலும் பரந்துபட்டுச் செயற்படும் வகையில் இரகசிய பொலிஸ் சேவை ஒன்றை உருவாக்கினான்.

**30. ஜப்பானில் டொகுகாவா ஷோன்களின் ஆட்சி: முக்கிய தகவல்கள்**

i) ஜப்பானிய அரசாங்கம் இரண்டு அமைப்புக்களின் அடிப்படையிலேயே செயற்பட்டது.
- ஜப்பானிய அரச குடும்பம்
- கியோடோ பிரபுக்களின் சபை

ii) ஈடோ நகரில் வாழ்ந்த ஷோகன்னே எல்லா அதிகாரங்களையும் பெற் றிருந்தார். ஷோகனது அரசாங்கம் பக்கு∴பு (Bakufu) எனப்பட்டது.

iii) ஷோகுன்கள் இறைவனின் ஏற்பாட்டுக்கமைய தாம் நாட்டை ஆள்வதாக கூறினார். இதன்மூலம் ஆட்சியாளருக்கு எந்தவொரு அநியாயத்தையும் செய்யமுடியாது என்பதை விளக்க முயற்சித்தார்.

iv) டொகுகாவா காலகட்டத்தில் (1603 - 1867) ஜப்பானின் மானிய முறை ஆட்சியமைப்பு தொடர்ச்சியாக இருந்து வந்தது. ஆயினும் சிறந்த ஆட்சிக்கான அமைப்பொன்றை ஜப்பானில் ஏற்படுத்தியவர்கள் டொகுகாவா ஷோகுன்களே.

v) டொகுகாவா ஷோகுன் ஆட்சியாளர்கள் வருமாறு:

1) **டொகுகாவா இயேயாசு (1603-1605)**
- டொகுகாவா ஷோகுகன் குடும்பத்தையேற்படுத்தியவன் இவனே.
- ஹிதே யோஷி இறந்த பின் 1603ல் 61வது வயதில் ஷோகுகன் ஆட்சியாளனானான்.
- 1605ல் தனது மகனான ஹிடேதடாவை (Hitetada) ஷோகுனாக்கி அவனது பெயரில்தானே ஆட்சி செய்தான்.

2) ஹிடேதடா (Hidetada) **1605 - 1603**
- தந்தை 1616ல் இறக்க ஆட்சி அதிகாரத்துக்கு வந்தான்.
- சிறந்த அறிவாளியாக விளங்கினான்.
- ஈடோவில் மாபெரும் கோட்டையொன்றைக் கட்டினான்

3) இயே மிஞ்சு (Iye - mitsu) 1623-1651

- தந்தை 1632ல் இறக்க அடுத்த ஷோகுனானான்
- கிறிஸ்தவ சமயத்தை வெறுத்தார். அதனை ஜப்பானிலிருந்து அடியோடு ஒழிப்பதற்கு மறைமுக ஒரு சட்டத்தை கொண்டு வந்தான்.

4) சுனயோஷி (Tsunayoshi) 1680-1709

- இயேமித்சுவின் மரணத்தின் பின் வயது வராத சிறுவர்களுக்கு குறுகியகாலமே உயிர் வாழ்ந்தவர்களும் ஷோகன்களானதால் குழப்பம் நிலவியது. பின்னர் சுனயோஷி ஆட்சியாளனானார்.
- இறுதியாக முக்கிய ஷோகானான சுனயோஷிக்கு பிறகு ஷோகன் ஆட்சி வீழ்ச்சியடைய தொடங்கியது.

31. டொகுகாவா அரசின் கீழ் சமுதாயம் : முக்கிய அம்சங்கள்

i) சமூக நிலை:

- அரசியல் ஆதிக்கமும் பொருளாதார வளர்ச்சியும் சமூகம் பெரும் மாற்றங்களிற்கு முகங்கொடுக்க வேண்டி இருந்தது.
- சமுராய்களின் நிலமை கீழ்மட்டத்தில் இருந்தது. ஏனெனில் ஷோகன்கள் இயன்றவரை பிச்சினைகளைத் தவிர்த்துக் கொண்ட மையே ஆகும்.
- சமுராய்கள் சாதாரண தொழில் புரிபவர்களின் பரம்பரையின் ஓர் பகுதியாகக் கருதப்பட்டன.
- சமூகத்தில் அடிமட்டத்தில் இருந்த வியாபாரிகள் பணத்தைச் சம்பாதித்துக் கொண்ட பின்னர் செல்வாக்க மிக்க கூட்டத்தினராக மாறினார்.
- வேகமாக முன்னேறிய நகர சமூகத்தில் மத்தியதர வர்க்கம் உருவாகி வளர்ச்சி பெற்றது.

ii) பொருளாதார நிலை:

- நாடு தன்னிறைவுடன் காணப்பட்டது.
- வெளிநாட்டு வியாபாரம் துண்டிக்கப்பட்ட நிலையிலும் உள்நாட்டு வியாபரரம், கைத்தொழில் வளர்ச்சியடைந்து வந்தது.
- வீதிகள், நீர்வழிகள் பரந்து காணப்பட்டன. இதனால் விவசாய, கைத்தொழில் பொருட்கள் வேகமாக பரிமாற்றப்பட்டது.
- முதலாளித்துவப் பொருளாதார முறை வளர்ச்சியடைவதற்கு காரணமாக இருந்தது.
  உ+ம்: அரிசியின் விலை நாளாந்தம் அறிவிப்பதும், வணிக நடவடிக்கைகளிற்கு கடன் கொடுப்பது என்பன நவீன பங்குச் சந்தையை ஒத்த தாக இருந்தது.

iii) விவசாயிகளின் நிலை

- ஷோகன் ஆட்சியில் விவசாயிகள் மோசமாகப் பாதிக்கப்பட்டிருந்தார்கள் என வரலாற்றாசிரியர்கள் நம்புகின்றபோதிலும்

விவசாயிகளது உழைப்பு மேல்வகுப்பு அதிகாரிகளிற்கு அவசியமாக இருந்தது.

- விவசாயத் தொழில் நாட்டின் தன்னிறைவிற்கு காரணமாக இருந்தது.
- விவசாயிகள் ஆயுதம் தரிப்பதற்குத் தடை இருந்தமையால் இராணுவ சேவையிலிருந்து அவர்கள் விடுவிக்கப்பட்டிருந்தனர்.

**iv) விவசாய, கைத்தொழில் வளர்ச்சி ஏற்பட்டது**

- புதுப்பயிர்கள் அறிமுகப்படுத்தப்பட்டதோடு பசளையிடல், இயந்திர சாதனங்களைப் பயன்படுத்தல் என்பவற்றால் விளைச்சல் அதிகரித்தது.
- கிராமமட்டத்தில் கைத்தொழில் வளர்ச்சியுற்றது. பட்டு, பருத்தி, உப்பு, புகையிலை, சீனி போன்ற கைத்தொழில் வளர்ச்சியடைந்திருந்தது.

**v) நகர நாகரீக நிலமை**

- ஈடோ, ஒஸாகா, கியாட்டோ போன்ற பிரதான நகரங்களைக் கொண்டு சமூக கலாசாரத்துறையில் மாற்றங்கள் ஏற்பட்டன.
- நகர மக்கள் கலாச்சார நடவடிக்கைகளிற்காக பணத்தைச் செலவழித்து அதற்கான சூழ்நிலையைத் தோற்றுவித்தனர்.

**உ+ம்:** 1) நகரக் கழியாட்ட விடுதிகளில் முக்கியமான பாத்திரம் நடிகைகளிற்கு கிடைத்தது.
2) மனதை ஈர்க்கும் சிறிய கதைகள், ஆடல், பாடல் என்பன இதில் அடங்கியது.

**vi) மிஷனறிச் செயற்பாடுகள்**

- ஐரோப்பிய வர்த்தகர்களின் பின் வந்தவர்கள் கிறிஸ்தவ மதத்தைப் பரப்பும் மிஷனரிகளே ஆவர்.
- போர்த்துக்கேய இயேசுசபைக் குருமார்களினதும், ஸ்பானிய பிரான்சிஸ்கன் சபைக் குருமார்களினதும் முயற்சியால் யப்பானின் பெரும்பாலானோர் கத்தோலிக்க சமயத்தை தழுவினர்.
- ஷோகன்கள் புதிய சமயத்தால் தமது கலாசாரத்திற்கு தீங்கு விளையும் என்றும், நாடு இரண்டுபடுவதற்கான சந்தர்ப்பம் ஏற்படும் என்றும் கருதி கிறிஸ்தவ மதத்தை தடைசெய்தன.
- கிறிஸ்தவர்கள் கடுமையாக அடக்கி ஒடுக்கப்பட்ட பின்னர் அனைத்து ஐரோப்பியர்களும் ஜப்பானில் பிரவேசிப்பதற்குத் தடை விதித்தனர்.
- ஆயினும் அரசியல் ரீதியாக ஆபத்தற்றவர்கள் எனக்கருதி வருடத்தில் ஒரு கப்பல் துறைமுகத்திற்கு வர அனுமதி வழங்கினர்.
- ஜப்பானியர்களின் வெளிநாட்டுப் பயணங்கள் அனைத்திற்கும் தடைவிதித்த ஷோகன்கள் முன்பு போலவே சீனாவுடன் தொடர்பைப் பேணி வந்தனர்.

## 32. ஜப்பானில் ஐக்கிய அமெரிக்கா தலையிடல்

i) 19ம் நூற்றாண்டின் மத்திய பகுதி வரை ஐரோப்பியர்கள் ஜப்பானுடன வர்த்தகத்திற்காக மேற்கொண்ட எல்லா முயற்சிகளும் தோல்வி கண்டது.

ii) தூரகிழக்கு வியாபாரத்தில் அதிகளவு உரிமையைப் பெற்றிருந்த ஐக்கிய அமெரிக்காவிற்கு ஜப்பானின் துறைமுக வசதிகள் தேவையாக இருந்தது.

iii) 1853ல் கொமாண்டர் பியறியின் புகைக் கப்பல்கள், துப்பாக்கி பொருத்தப்பட்ட படகுகள் என்பவற்றுடன் ஈடோ துறைமுகத்திற்கு வருகை தந்து பின்வரும் கோரிக்கையை முன்வைத்தது.

1) சேதமடைந்த அமெரிக்க கப்பல்களையும், மாலுமிகளையும் பாதுகாத்தல்.

2) வர்த்தகக் கப்பலுக்கு எரிபொருள், நீர், உணவு என்பவற்றை வழங்குதல்.

3) கப்பல்களைப் பழுதுபார்த்தல்

4) வர்த்தக நடவடிக்கைகளிற்கு அனுமதி வழங்குதல் அத்துடன் அமெரிக்க தூதுவர் ஒருவர் நிரந்தரமாய் இருப்பதற்கும் அனுமதி வழங்குதல்.

5) அமெரிக்கர்களிற்கு முதல்தர நாட்டுரிமை வழங்குதல்.

- ஜப்பான் ஆட்சியாளரிடமிருந்து சாதகமான மாற்றம் எதுவும் ஏற்படவில்லை.

iv) ஜப்பானிற்கு வருகை தந்த அமெரிக்க வர்த்தக ஆணையாளர் ஹெரிஸ் டவுண்டசென் ஜப்பானிய ஆட்சியாளரிடம் பின்வரும் கருத்துக்களை முன்வைத்தார்.

1) சீனா, ஐரோப்பியர்களுக்கு வியபாரத்திற்கு அனுமதி வழங்காமையால் பிரித்தானியாவும் வேறுசில நாடுகளும் சீனாவை ஆக்கிரமித்தமை.

2) சீனாவில் அமைதியற்றுப் போனமை.

3) வியாபாரத்திற்கு அனுமதி கிடைத்ததால் வர்த்தக நடவடிக்கைகளை சமாதானமான முறையில் மேற்கொள்ளக் கூடியதாய் இருக்கும்.

v) 1858ல் ஜப்பானுடன் ஹெரிஸ் டவுண்ட சென் ஏற்படுத்திக் கொண்ட ஒப்பந்தத்தால் இராஜதந்திர உறவு ஏற்பட்டது.

## 33. ஜப்பான் அமெரிக்கத் தொடர்பால் ஏற்பட்ட விளைவுகள்

i) ஷோகன்களின் ஆட்சி வீழ்ச்சியடையக் காரணமாகியது.

ii) பிரித்தானியர்களும் பிரான்சியர்களும் அமெரிக்கா போன்று உடன்படிக்கையை ஜப்பானோடு செய்து கொண்டனர்.

iii) டொகுகாவா யுகம் முற்றுப்பெறுவதை சமுராய் வீரர்கள் (சொஷீ, சத்சும, தொஸ, ஹீசைன்) ஆகிய பிரதேச வீரர்கள் விரும்பாமையால் ஐரோப்பியர்களை மிலேச்சர்களாகக் கருதியமை.

உ+ம் : 1863ல் சத்சும சமுராயின் வீரர்களால் ஆங்கிலேயர் ஒருவர் கொல்லப்பட்டமை.

iv) பிரித்தானியா, பிரான்ஸ், ஒல்லாந்து, ஐக்கிய அமெரிக்கா கடற் படைகள் "ஷிமோனோ ஸெக்" என்னும் இடத்தில் கடற்படை ஒத்தி கையை மேற்கொண்டது. இதன் பிண்ணனியில் ஐப்பானிய ஆட்சியாளர்கள் வெளி நாட்டவர்மீது கொண்டிருந்த அபிப்பிராயங் களை மாற்றிக் கொண்டனர்.

## 34. மேஜீஜீ சீர்திருத்தங்கள் பற்றிய முக்கிய அம்சங்கள்

i) 1867ல் ஷோகன்கள் தமது அதிகாரங்கள் அனைத்தையும் பேரரசரிடம் ஒப்படைத தனர். இதன் மூலம் 700 ஆண்டுகளாக ஜப்பானை ஆட்சி செய்த ஷோகன் வம்சத்தினர் முற்றாக அகற்றப் பட்டனர்.

ii) பேரரசரின் ஆட்சிமையம் இக்கோதோவி லிருந்து டோக்கியோவிற்கு இடம் மாற்றப்பட்டது. இச்செயற்பாட்டினையே **மேஜீஜீ சீர்திருத்தம்** எனக் குறிப்பிடப் படுகிறது.

iii) மேஜீஜீ சீர்திருத்தம் முட்சுஹீதோ (15வயது சிறுவன்) என்ற பேரரசர் காலத்தில் இடம் பெற்றது. இதனால் இப்பேரரசன் ஆட்சிக் காலம் (1868-1912) மேஜீஜீ சீர்திருத்தம் (ஒளிமயமானது) எனக் குறிப்பிடத்தக்கது.



முட்சுஹீதோ (மேஜீஜீ)

iv) முட்சுஹீதோ சர்வாதிகாரியின் எல்லா அதிகாரங்களையும் தனது அதிகாரத்தின் கீழ் கொண்டு வந்து யாப்பினைப் புனர்நிர்மானம் செய்யும் பணியினை மேற்கொண்டார்.

## 35. மேஜீஜீ சீர்திருத்தத்திற்கமைய புதிய அரசியல் யாப்பு

- கி.பி. 1889இல் பிரகடனப்படுத்தப்பட்ட புதிய அரசியல் அமைப்பிற்கேற்ப பின்வரும் மாற்றங்கள் ஏற்பட்டன.

i) டயட் எனப்படும் இரு சபைகள் (பிரபுகள் சபை, பிரதிநிதிகள் சபை) கொண்ட பாராளுமன்றம் உருவாக்கப்பட்டது. இதன் அதிகாரங்கள் வருமாறு:

- நிதி சம்மந்தமான கட்டுப்பாடுகளை வழங்கியது.
- பிரதிநிதிகள் சபைக்கு சட்டமியற்றும் அதிகாரம் வழங்கப்பட்டது.

ii) அடிப்படை உரிமைகள் தொடர்பான விடயங்கள் குறிப்பிடப்பட்டிருந்தன. வாக்குரிமை நிலச்சுவாந்தகர்களும், பணக்காரர்களும் மட்டுமே இருந்தது. இப்பிரிவினர் 1% ஆக காணப்பட்டனர்.

iii) முப்படைகளின் தலைவராகப் பேரரசர் விளங்குவார். பேரரசரின் அதிகாரங்கள் வருமாறு:

- பாராளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டமூலம் ஒன்று பேரரசின் அங்கி காரத்தின் பினனரே நடைமுறைப்படுத்தப்படும்.
- அமைச்சரவை மன்னருக்கன்றி பாராளுமன்றத்திற்கு பொறுப்புச் சொல்ல வேண்டியதில்லை.
- காலால் படையினதும், விமானப் படையினதும் பொறுப்பான அமைச்சர்கள் நேரடியாக பேரரசருடன் தொடர்புகளை வைத்திருப்பர்.
- வெளிநாட்டு விவகாரங்களுக்குப் பொறுப்பாக இருத்தல்.

**36. ஜப்பானிய புதிய அரசியல் யாப்பில் அடங்கியிருந்த கொன்மிசியஸ்சின் தத்துவங்கள்**

- அரசியல் யாப்பின் சிறப்புப் பண்பாக புராதன ஜப்பானிய பண்பாட்டு விடயங்கள் அடங்கி இருந்தது ஓர் சிறப்பம்சமாகும். இவை கொன்பியூசியஸ்சின் தத்துவங்களுடன் தொடர்புபட்டிருந்தன.

i) மனிதன் இயற்கையிலேயே அசம நிலமையானவன் தாழ்ந்த மனிதன் உயாந்த மனிதனிற்கு கட்டுப்பட வேண்டும்.

ii) சட்டத்தின் மூலம் நடத்தப்படும் ஆட்சியைவிட மனிதர்களால் மேற்கொள்ளப்படும் ஆட்சி சிறந்ததாகும்.

iii) தனி மனிதர்களை விட சமூகம் முக்கியமானது.

iv) அரசிற்கு முக்கியமானது தந்தைவழிச் சமூகமாகும்.

**37. அரசியல் யாப்பின்படி தோன்றிய அரசியல் கட்சிகள்**

i) **லிபரல் (தாராண்மைவாதக்) கட்சி**

- 1881ல் முதலாவது அரசியல் கட்சியாக தோற்றுவிக்கப்பட்டது.
- தோஸ பிரதேசத்தைச் சேர்ந்த **இத்தகி சமுராயாய்** என்பவரால் ஸ்தாபிக்கப்பட்டது.

ii) **முற்போக்குக் கட்சி**

- 1882ல் **ஒகுமா** என்பவரால் ஆரம்பிக்கப்பட்டது.

iii) அரசியல் கட்சிகள் தனிநபர்களை அடிப்படையாகக் கொண்டு அமைந்ததன்றி கொள்கைகள்மீது கட்டி எழுப்பப்படாததனால் நெடுங்காலம் நிலைத்திருக்கவில்லை.

**38. மேஜீஜீ காலத்தில் பொருளாதாரக் கொள்கை: முக்கிய அம்சாங்கள்**

i) பொருளாதாரத்தில் ஏற்பட்டமாற்றம் அரசியல் வளர்ச்சியை விட வியப் பளிப்பதாய் இருந்தது.

ii) டொகுகாவா யுகத்தில் விவசாயத்தை முதன்மையாகக் கொண்டிருந்த யப்பான் வியாபாரத்தை முதன்மையாக்கியது. இதனால் மானியமுறை நீங்கியது.

iii) முதலாளித்துவ பொருளாதார முறைக்கு ஏற்ப கைத்தொழில் மயமாத லில் கூடிய கவனம் செலுத்தப்பட்டது.

iv) புகையிரதப் பாதைகள், தந்தித்தொடர்புகள், தொலைபேசி கப்பல், பாரிய இயந்திர சாதனங்கள் ஆகியவற்றை உற்பத்தி செய்வதில் அரசும் தனியார்துறையும் ஈடுபடத்தொடங்கியது.

v) ஆயினும் புகையிரதப் பாதைகள், தொலைத்தொடர்பு, தேசிய பாதுகாப்பு என்பன அரசாங்கத்தின் கீழ் செயற்பட்டது.

vi) "மீட்சுய்" சீமெந்து "மிட்சுபிஸி" மோட்டார்சைக்கிள் உற்பத்தி செய்யும் ஸ்தாபனங்கள் ஆரம்பிக்கப்பட்டது. "மிட்சுய்" தாபனம் மிஸ்ரை என்பவராலும், மிட்சுபிசி தாபனம் சத்சுமா சாமுராயுடன் சம்பந்தப்பட்டவர்களாலும் ஆரம்பிக்கப்பட்டது.

vii) 19ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 20ம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் ஜப்பானில் ஏற்பட்ட கைத்தொழில் வளர்ச்சி மேற்கத்தேய நாடுகளை விட வேறுபட்டதாக இருந்தது. குறிப்பாக மேற்கத்தேய நாடுகளின் தொழில் நுட்பத்தை இறக்குமதி செய்து கைத்தொழில் புரட்சியை மேற்கொண்டமை ஓர் சிறப்பம்சமாகும்.

**39. கொரியாவில் சீனா - யப்பான் யுத்தம் - காரணங்கள்**

i) **உடனடிக்காரணம் :-**

ஜப்பானியர்களையும், ஐரோப்பியர்களையும் விரும்பாத கிழக்கிந்திய கல்விச் சங்கம் (Eastrn Learing Society) 1894ல் தென்கொரியாவில் கிளர்ச்சியை மேற்கொண்டது. கொரிய அரசு சீனாவின் உதவியை நாடிய போது டியன்ட்சின் உடன்படிக்கையின் படி (கொரியா சுதந்திர அரசாகும்) ஜப்பானிற்கு தெரிவித்துவிட்டு சீனா படைகளை அனுப்பியது. ஆயினும் ஜப்பானும் தனது படைகளை அனுப்பி வைத்தது இருநாட்டுப் படைகளும் வந்து சேர்வதற்கு முன்னர் கலகம் அடக்கப்பட்டபோதிலும் ஜப்பானியப் படையும் கொரிய அரசும் முரண்டுபட்டுக் கொண்டது. இதனாலேயே சீனா ஜப்பான் மோதல் ஆரம்பமானது. ஜப்பானால் சீனா 1895ல் தோற்கடிக்கப்பட்டது.

ii) **ஆக்கிரமிப்புத் திட்டங்கள் :-** கிழக்காசியாவில் தன் ஆதிக்கத்தை ஏற்படுத்துவது ஜப்பானின் எண்ணமாக இருந்தது.

iii) **இராணுவ மனப்பான்மை :-** கட்டாயப் படைச்சேர்ப்புச் சட்டம் கொண்டு வரப்பட்டு வலுக்கட்டாயமாகப் படைகளில் ஆட்கள் சேர்க்கப்பட்டனர். இவர்கள் ஐரோப்பாவிற்கும் அமெரிக்காவிற்கும் போய் புதிய இராணுவ முறைகளை அறிந்து திரும்பியமை.

**40. சீனா - யப்பான் மோதலின் விளைவுகள்**

i) ஷிமனோ செகி உடன்படிக்கை ஏற்படுத்தப்பட்டது. இவ் உடன்படிக்கையின் மூலம் கொரியா முழுச் சுதந்திரநாடு என்பதை சீனா ஏற்றுக்கொண்டது.

ii) இவ் உடன்படிக்கையின்படி சீனா - யப்பான் வணிக உடன்படிக்கை கையொப்பமானது.

iii) தனது போருக்கான செலவைத் தரவேண்டும் என்றும் போர் மோஸா, பெஸ்கதோத்தீவுகள், மஞ்சூரியாவின் தென்பகுதி மீது சீனா உரிமை கொள்வதை நிறுத்திக் கொள்ள வேண்டும் என ஜப்பான் நிபந்தனை விதித்தது.

**41. ரஷ்யா - ஜப்பான் யுத்தம்**

- **போருக்கான காரணங்கள்**

i) **யப்பானின் பழிவாங்கும் நோக்கம் :-** சீனா, யப்பானியப் போரின் இறுதியில் ஷிமனொசெகி உடன்படிக்கையின்படி பெற்ற லியாவ்டுங் தீபகற்பத்தை (சகலன் தீவு) ஜப்பான் திரும்பிதர ரஷ்யா தன்னுடன் இணைத்துக் கொண்டதோடு கொரியாவிலும், மஞ்சூரியாவிலும் யாப்பானுக்குப் போட்டியாக தனது செல்வாக்கை நிறுத்தி வந்தது. இப்பகுதியில் இரு நாடுகளிற்குமிடையிலான அதிகாரப் போட்டியே போருக்கு அடிப்படைக் காரணமாகியது ரஷ்யாவின் மீது பழிதீர்த்துக் கொள்ள வேண்டும் என்று யப்பானிய அரசியல்வாதிகள் ஆரவாரம் செய்தனர்.

ii) **யப்பானில் நிலவிய சூழ்நிலை:-** சீனா யப்பானியப் போரின்போது அரசுக்கு ஆதரவு தெரிவித்த யப்பானிய மக்கள் லியாவ்டுங் தீபகற்பத்தை ரஷ்யாவிடம் கொடுப்பதை விரும்பாமை. இதனால் அரசாங்கத்திற்கு எதிராக மக்கள் செயற்பட்டமை.

iii) **உடனடிக்காரணம் :-** ரஷ்யத் துருப்புக்கள் மஞ்சூரியாவில் இருந்து விலகாமையினால் அதனை ரஷ்யாவே வைத்துக்கொள்ளலாம் என்றும் அதற்குப் பதிலாகப் கொரியாவை தான் இணைப்பதற்கு அனுமதிக்க வேண்டும் என்றும் ஜப்பான் கேட்டுக்கொண்டது. இதனை ரஷ்யா ஏற்கவில்லை ஆயினும் அமெரிக்க அதிபர் தியோடர் ருசலவெல்ட்டும், பிரிட்டனும் ஆதரித்தது. அதேபோல் ஜேர்மனியும் பிரான்சும் ரஷ்யாவை ஆதரித்தது. இவ்வாறு நாடுகளால் தூண்டி விடப்பட்ட யப்பான் 1904ல் ரஷ்யாவைத் தாக்கியது. இதில் ரஷ்யா தோல்வி கண்டது.

iv) தியோடர் ருஸ்வெல்ட்டின் வழி காட்டுதலில் நியு ஹெம்ஷயரில் போர்ட்ஸ் மவுத் துறைமுகத்தில் வைத்து செய்து கொள்ளப்பட்ட சமாதான ஒப்பந்தத்துடன் யுத்தம் முடிவடைந்தது.

- **போரின் விளைவுகள்**

i) **யப்பான் வல்லரசு ஆகியமை:** உலக வல்லரசுகளில் ஒன்றாக யப்பான் உயர்ந்ததோடு பிரிட்டனும் அமெரிக்காவும் அதன் நட்பைப் பெறுவதற்காகப் போட்டி போட்டனர்.

ii) **ரஷ்யப் புரட்சிக்கு காரணமாகியது:** ரஷ்ய மக்களின் மனதில் யப்பானிடம் அரசு தோல்வியுற்றமை. அரசுக்கு எதிராக 1905ல் முதன் முதலாகப் புரட்சியில் ஈடுபட்டனர். இப்புரட்சி 1917ல் வெடித்த மாபெரும்புரட்சிக்கு ஒத்ததாகவே காணப்பட்டது.

iii) 1907ல் ரஷ்யாவுடன் இரகசிக ஒப்பந்தத்தை ஜப்பான் மேற்கொண்டது. இதன் மூலம் மஞ்சூரியாவை இரண்டுபடுத்தி கைப்பற்றிக் கொள்ள முயற்சித்தது.

**42. யப்பானிய சர்வாதிகாரமும் இதற்கு வழிவகுத்த காரணிகளும்**

i) போர்ட்ஸ் மவுத் உடன்படிக்கை யப்பானை ஓர் வல்லரசு நிலைக்கு உயர்த்தியது. சீனா, ரஷ்யாவிற்கு எதிராக போர்களைத் தொடுத்து

சீனாவின் பிரதேசங்களையும் கொரியாவையும் ஆக்கிரமித்துக் கொண்ட யப்பான் சர்வதிகாரத்திற்குள் சென்றதோடு 1905ல் இவ்வுடன் படிக்கையில் கைச்சாத்திட்டது.

ii) பிரிட்டனும், பிரான்சும் ஜப்பானுடன் நட்புடன்படிக்கையை செய்து கொண்டது. அதேவேளை மஞ்சூரியாவைத் தமக்குள் பங்கிட்டுக் கொள்ளும் ரகசிய உடன்படிக்கையை ரஷ்யா ஜப்பானோடு செய்து கொண்டது. 1910ல் கொரியாவையும் யப்பான் ஆக்கிரமித்துக் கொண்டது.

iii) யப்பானின் வலிமை ஓங்கி வருவதைக் கண்டு அமெரிகா அதிபர் ரூஸ்வெல்ட் பசுப்பிக் கடற்கரையில் ஜப்பானியரின் நடமாட்டத்தை தடுப்பதற்கு நடவடிக்கை மேற்கொண்டதோடு ஜப்பானை எச்சரிக்க தனது கடற்படையை ஆசிய நாடுகளுக்கு அனுப்பியமை.

iv) அமெரிக்காவின் செயற்பாடுகளினால் ஆத்திரமுற்ற ஜப்பான் ரஷ்யாவோடு சேர்ந்து கொண்டு தமக்கு ஆபத்துக்கள் வரும்போது இரு நாடுகளும் ஒன்றுக்கொன்று உதவவேண்டும் என்ற ஒப்பந்தத்தை செய்து கொண்டமை.

v) 1914வரை பொருளாதார வளர்ச்சி காணப்பட்டமை. வங்கிகள் நிறுவப் பட்டதோடு, தொழில் முயற்சியாளருக்கு நீண்டகால கடன் வழங்கும் திட்டமும் காணப்பட்டது. அத்துடன் ஜப்பானிய தொழில் வளர்ச்சி வியக்கத்தக்கதாயிருந்தமை. துணி தொழிற்சாலைகளின் வளர்ச்சி இதில் குறிப்பிடத்தக்கது.

**43. முதலாம் உலகப் போருக்கு முன்னர் ஜப்பானின் நிலை**

- முதலாம் உலகப் போருக்கு முன்னர் உள்ள காலத்தில் ஜப்பான் கிழக்காசியாவில் சொந்த அதிகாரத்தைப் பரப்புவதற்கு பல்வேறு பட்ட நடவடிக்கைகளை மேற்கொண்டது.

i) ஜப்பானின் மேலாதிக்கத்தை ஏற்படுத்த முயற்சித்தமை.

ii) கொரியாவுக்குள் தலையிட்டு கல்வியைப் பரப்பியமை.

iii) சீனாவுக்குள் தலையிட்டு கல்வியைப் பரப்பியமை.

iv) ரஷ்யாவை யுத்தத்தில் தோல்வியடையச் செய்தமை.

v) ஜேர்மனுக்குச் சொந்தமான பசுபிக் தீவைக் கைப்பற்றியமை.

**உலக மகா யுத்தங்களில் ஜப்பானின் பங்கேற்பு**

**44. முதலாம் உலகமகாயுத்தமும் ஜப்பானும்**

i) 1ம் உலகப்போர் தொடங்கியபோது பிரிட்டன் சீனக் கடலில் உள்ள ஜேர்மனியக் கப்பல்களைத் தாக்கி அழிக்குமாறு ஜப்பானைக் கேட்ட போது ஜேர்மனியக் கப்பல்களை கைப்பற்றியதோடு சீனாவில் ஜேர்மனுக்குச் சொந்தமான பிரதேசங்கள், பசுபிக் தீவுகள் என்பன ஜப்பானால் கைப்பற்றப்பட்டது.

ii) ஆசிய, ஆபிரிக்க நாடுகளுக்கு ஆயுத உபகரணங்களை விற்பதன் மூலம் பெருந்தொகைப் பணத்தை பெற்றமையால் யப்பானின் பொருளாதாரம் வேகமாக வளர்ச்சி பெற்றது.

iii) ரஷ்யாவில் தலையிட்டமை. ரஷ்யாவில் 1917ல் புரட்சி ஏற்பட்டு மாக்ஸிய அரசாங்கம் (போல்ஷ்லிக் ஆட்சி) உருவாக்கப்பட்டதால் 1ம் உலகப்போரில் தன்னை விடுவித்துக்கொண்டது. இச்சந்தர்ப்பத்தில் அங்கு சிக்கிய செக்கோஸ்லோவாக்கிய படைகளை மீட்க நேச நாடுகளுடன் (அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ்) சேர்ந்து ஜப்பானும் போரைத் துவக்கியது. ஆனால் இறுதியில் போல்ஷ்லிக் ஆட்சியாள ரால் ஜப்பானியர் தோற்கடிக்கப்பட்டனர்.

## 45. இரண்டாம் உலகமகாயுத்தமும் ஜப்பானும்

i) ஜப்பான் இரண்டாம் உலகப் போரி லிறங்கியதற்கு மிக நெருங்கிய காரணம் இரண்டாவது முறையாகவும் சீனவோடு 1937ல் தொடுத்த போராகும். ஜப்பான் ஜேர்மனியோடு ஒப்பந்தம் செய்தவுடன் இத்தாலி, ஜேர்மனி போன்ற அச்சு நாடுகளுடன் ஜப்பான் இணைந்து நேச நாடுகளுக்கு எதிராக போரிட்டது.

ii) ஐக்கிய அமெரிக்கா ஜப்பானுக்கு எதிரான கொள்கையை பின்பற்றியது.
- ஜப்பான் மஞ்சூரியாவை ஆக்கிரமித் ததை கண்டித்தமை
- சீனாவிலிருந்தும், இந்தோனேசியாவிலிருந்தும் ஜப்பான் வெளியேற வேண்டும்.
- ஜப்பானுடனான வர்த்தகத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டது.

iii) இரண்டாம் உலகப் போரில் பிரவேசித்த ஜப்பான் வியக்கத்தக்க வெற்றிகளை பெற்றிருந்தது.
- 1941ல் அமெரிக்காவின் பேர்ள் துறைமுகத்தை தாக்கியழித்தமை.
- அமெரிக்காவின் குவாம்படைமுகாம், தாய்லாந்து, மலேசியா, சிங்கப்பூர் என்பவற்றைக் கைப்பற்றியதோடு பசுபிக்சமுத்திரத்தில் நிலைகொண்ட யுத்தக் கப்பல்களைக் (பிரின்ஸ் ஒப்வேல்ஸ், ரிபல்ட்) சிங்கப்பூரின் அருகே மூழ்கடித்தமை.

iv) ஜேர்மனியினதும், இத்தாலியினதும் தோல்வி நிச்சயம் என்பதால் ஜப்பானை நிபந்தனையின்றி சரணடையுமாறும் இல்லையேல் பேரழிவை எதிர்கொள்ள நேரும் எனவும் அமெரிக்கா எச்சரிக்கை விடுத்தது.

v) அமெரிக்காவினது எச்சரிக்கையை ஜப்பான் பொருட்படுத்தவில்லை. இதனால் அமெரிக்கா அதிபர் ஹெரிட்ருமனும் பிரிட்டிஷ் பிரதமர் கிளமென் ஆட்லியும் "பொட்ஸ்டேம்" நகரில் கூடி ஆராய்ந்து ஜப்பான் மீது தாக்குதலை மேற்கொள்வது என்று முடிவுக்கு வந்தனர்.

vi) 1945 ஆகஸ்ட் 6ம் திகதி ஹிரோஷிமா நகர் மீது அணுகுண்டை வீசி 75000 மக்களை கொன்றது. உலக வரலாற்றிலே முதன்முதல் அணுகுண்டு பயன்படுத்தப்பட்ட சம்பவம் இதுவாகும்.

vii) ஹிரோஷிமாவில் அணுகுண்டு வீசிய மூன்றுநாள் கழித்து 1945ல் ஆகஸ்ட் 9ல் நாகசாகியா மீதும் அமெரிக்கா அணுகுண்டை வீசியது.

viii) இந்நிலையில் ஜப்பான் அமெரிக்காவிடம் சரணடைந்து கொண்டது. ஜப்பான் கடலில் தரித்து நின்ற மிசவுரி (Missouri) என்னும் போர்க் கப்பலில் நேசநாடுகளின் முன் நிலையில் 1945 செப்ரெம்பர் 2ல் சரணா கதி ஒப்பந்தத்தில் ஜப்பான் கையொப்பமிட்டது.

### 46. மார்ஷல் திட்டம்

i) இரண்டாம் உலகப்போரால் பாதிக்கப்பட்ட நாடுகளைக் கட்டியெழுப்ப ஐக்கிய அமெரிக்கா மேற்கொண்ட நடவடிக்கையே மார்ஷலின் திட்டம் ஆகும்.

ii) அமெரிக்காவின் இவ் நடவடிக்கையை வடிவமைத்தவர் "ஜோன் மார்ஷல்" என்ற அமெரிக்கர் ஆவார்.

iii) பொருளாதார ரீதியில் பாதிக்கப்பட்ட நாடுகள் கம்யூனிஸ் செல்வாக் கிற்கு உட்படுவதைத் தடுப்பதே மார்ஷல் திட்டத்தின் நோக்கமாகும்.

iv) உலகப் போரினால் அழிந்து போன ஜப்பான் மீண்டும் மார்ஷலின் திட்டத்திற்கு ஏற்ப கட்டியெழுப்பப்பட்டது.

## சீனா

### 47. பண்டைய சீனா: முக்கிய அம்சங்கள்

i) முப்பத்தைந்து நூற்றாண்டு கால நாகரிகப்பின்னணியினைக் கொண்ட பண்டைய நாடு சீனா ஆகும்.

ii) சீனாவை ஆட்சி செய்த வம்சங்கள் வருமாறு

1. ஷாங் காலம் (வரலாற்றின் ஆரம்ப காலம்)
2. சௌகாலம்
3. சின் அரசவம்சம் (சீனப் பெருமதில் கட்டப்பட்டமை, சீனா எனப் பெயர் நாட்டுக்கு வந்தமை.)
4. ஹான் வம்சம்
5. டாங் வம்சம் (சீனாவின் பொற்காலம்)
6. சுங் வம்சம்
7. மிங் வம்சம்
8. ஷ"ன் வம்சம்
9. மஞ்சூ வம்சம்



iii) மஞ்சூ வம்சம் பற்றிய பிரதான விடயங்கள்

- சீனப்பெருமதிலுக்கு வடகிழக்கே உள்ள மஞ்சூரியா எனப்பட்ட பிரதேசத்தில் தோன்றிய வம்சமே மஞ்சூவம்சம் ஆகும்.
- சிங் வம்சம் எனவும் பெயர் கொண்டு அழைப்பர்.
- மஞ்சூவம்சத்தின் இரண்டாவது அரசன் காங் - சி (Kang Hsi) சீனாவை முழுமையாக ஆட்சிக்கு உட்படுத்தினான். பிரான்சின் 14ம் லூயி, இந்தியாவின் அவுரங்கசீப் ஆகியோரது சமகாலத்தவர் இப் பேரரசன்.
- 267 வருடகாலம் (1644-1911) நீடித்த மஞ்சூ வம்சத்தின் ஆட்சி வடசீனாவில் பிற்போக்கு வாதிகளான நிலமானியப் பிரபுக்களின் வழித்தோன்றலான **"யுவாங்-ஷி - காயிகே"** என்பவனின் வற்புறுத்தலின் பேரரசர் "சுவான் - துங்" பதவியைத் துறந்தார். இதன் மூலம் மஞ்சூ வம்சத்தின் அரச அதிகாரம் 1911ம் ஆண்டுடன் முடிவுக்கு வந்தது.
- மஞ்சூ வம்சம் அதிகாரத்தை இழந்தமையானது சீன வரலாற்றில் மிக முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்வாக உள்ளது. ஏனெனில் சீனாவின் மரபுகள், கலாசாரம் போன்றவற்றில் துரித மாற்றங்கள் ஏற்பட்டன.

## 48. சீனப் புரட்சியின் பிரதான கட்டங்கள்

- மஞ்சூ அரசவம்சத்தின் வீழ்ச்சியைத் தொடர்ந்து ஒன்றன்பின் ஒன்றாக ஏற்பட்ட சம்பவங்களின் அடிப்படையில் சீனாவில் நிகழ்ந்த புரட்சிக் காலத்தை நான்கு கட்டங்களாக பிரிக்கலாம்.
  1. யுவாங் -ஷி - காயிகே கூட்டாட்சிக் காலம் (1912 - 1916)
  2. போர்த்தலைவர்களின் நிர்வாகமும் மத்திய அரசு பலவீனமடைதலும் (1916 - 1922)
  3. தேசிய வாதப் புரட்சி (1923-1949)
  4. கொமியூனிசப் புரட்சி (1949)

## 49. யுவான்-ஷி-காயிகேயின் ஆட்சி

i) மஞ்சூ வம்சத்தின் பதவியிறக்கத்தின் பின்னர் சீனக் கூட்டாட்சியின் முதலாவது ஜனாதிபதியாக யுவாங் - ஷி - காயிகே நியமிக்கப்பட்டார்.

ii) மஞ்சூ ஆட்களும், ஏகாதிபத்தய அரசுகளும் "இரும்பு மனிதன்" என்று யுவானை வர்ணித்தனர்.

iii) யுவானின் சர்வதிகாரம் 1912 முதல் 1916 வரையில் சீனாவில் நீடித்தது. சங் - யாங் - சென்னின் தலைமையிலான தேசியவாதிகள் வலுப்பெற்றால் தமக்கு


யுவான்

ஆபத்து நேரும் எனக் கருதிய ஏகாதிபத்திய அரசுகள் யுவானிற்கு பல உதவிகளைச் செய்தன.

iv) ஆயினும் யுவான்-ஷி- காயிகே மீண்டும் மன்னராட்சி முறையை உருவாக்கி யுவான் வம்சம் என்பது சீன அரசவம்சப் பட்டியலில் சேர்க்க எடுத்த முயற்சி வெற்றியளிக்கவில்லை.

v) 1916ல் யுவாங் -ஷி- காயி இறந்ததைத் தொடர்ந்து போர்த்தலைவர் களின் (போர்ப் பிரதானிகள் War Lords) அதிகாரம் மேலோங்கியது.

**50. போர்த் தலைவர்களின் பலம் அதிகரித்தல்**

i) பீகிங் நகரைச் சூழவுள்ள பிரதேசங்களில் கூட்டாட்சி முறை ஒன்று செயற்படுத்தப்பட்டபோதிலும் ஏனைய பிரதேசங்களில் (மாநிலங்கள்) படைத்தளபதிகளே அதிகாரம் பெற்றிருந்தனர்.

ii) போர்த் தளபதிகளின் கொடூரமான ஆட்சி சீனப் பொதுமக்களை மிகவும் வறுமை நிலைக்கு தள்ளியது.

iii) அந்நியர்களது உதவியோடு பல குழுக்களாக அவர்கள் திரண்டு உள்நாட்டு போர்களில் ஈடுபட்டனர்.
உ+ம்: ஜப்பானது ஆதரவு டுவான் -சி- ஜுயி என்ற போர்த் தலைவ னுக்கு கிடைத்தது. அமெரிக்கா, பிரிட்டன் ஆதரவு மத்திய சீனாவில் சிஹ்லி மாநிலப் போர்த் தலைவனுக்கு கிடைத்தது.

iv) 1917ல் அமெரிக்காவின் வற்புறுத்தலின் பேரில் சீனா ஜேர்மனிக்கு எதிராக யுத்தப் பிரகடனம் செய்தது. இதனை ஜப்பான் எதிர்த்தபோது அமெரிகா ஜப்பானுடன் ஓர் உடன்படிக்கையை (லான்சிங் - ஜஷியி உடன்படிக்கை) செய்து சீனாவில் ஜப்பானுக்கு மேலதிக்கம் உள்ளது என்பதை அங்கீகரித்து ஜப்பானை சமாதானமடையச் செய்தது.

v) இலட்சக்கணக்கான சீனர்களைப் போரில் ஈடுபடுத்தித் தங்களது வெற்றிக்கு வழிதேடிக்கொள்ள வேண்டமென்பதே மேற்கு அரசுகளின் நோக்கமாக இருந்தது. இதனை சங்-யாத்- சென்னின் கோமிடாங் தேசிய வாதிகள் கடுமையாக எதிர்த்தனர்.

vi) முதலாம் உலகப்போரின் முடிவில் பரிஸ் மாநாட்டில் சீனாமுன்வைத்த ஆலோசனைகள் முற்றாக புறக்கணிக்கப்பட்டது.

**51. பரிஸ் மாநாட்டில் சீனா முன்வைத்த ஆலோசனைகள் எவை?**

i) வல்லரசுகள் சீனாவில் பெற்றுள்ள செல்வாக்கு மாநிலங்களைக் கைவிட வேண்டும்.

ii) வல்லரசுகள் தங்களது துருப்புக்களை விலக்கிக் கொள்ளவேண்டும்.

iii) சீனச் சட்டங்களுக்கு ஏற்ப சுங்கவரி செலுத்த வேண்டும்.

iv) ஜப்பானால் சீனாவின்மீது திணிக்கப்பட்ட உடன்படிக்கைகளை ரத்து செய்ய வேண்டும்.

**52. கலாநிதி சாங்-யாத்-சென்னின் கோமிங்டாங் கட்சி**

i) சங் - யாத் - சென் கோமிங்டாங் கட்சியின் வேலைத்திட்டங்களை

1912 ல் ஆரம்பித்த போதே சீனப்புரட்சிச் செயற்பாடுகளின் மூன்றாவது கட்டமாக அமைந்தது.

ii) இக்கட்சி ஆதரவாளர்கள் பாராளுமன்ற ஆட்சி முறையொன்றை நோக்கிச் செல்வதையே நோக்கமாகக் கொண்டிருந்தனர். ஆயினும் சீனாவின் கூட்டாட்சி இந்நோக்கத்துக்கு முரணானதாக இருந்தது.

iii) 1917ல் ரஷ்யாவின் ஆட்சியைக் கைப்பற்றிய போல்சவிங் கட்சி சீனாவின் கென்டனில் அதிகாரத்தை நிலைநாட்டியிருந்த சங்-யாத்-சென்னின் உதவியை நாடியது. அதேபோல் சங்-யாத்-சென்னும் ரஷ்யாவின் உதவியை நாடினான்.

iv) தேசிய ரீதியாக ஐக்கியப்படுத்தலும், சர்வதேச வல்லரசுகளிடமிருந்து சீனாவை பாதுகாத்துக் கொள்வதுமே அப்போதைய (1923ல) தேவையாக இருந்தமையால் ரஷ்யாவின் உதவி அவசியமானதாக இருந்தது.

v) ரஷ்யாவின் உதவியானது கோமிங்டாங் கட்சியின் போக்கினை மாற்றியமைத்ததோடு மென்மையான ஆட்சிக் காலமொன்றும் உருவானது.

**53. கோமிங்டாங் கட்சி தேசிய இயக்கமாக வளர்ச்சிபெறல்**

i) சீனா தோற்றுவித்த தனிப்பெரும் தலைவர்களில் சங்-யாத்-சென்னும் ஒருவர். நாட்டை அந்நியர்கள் பிடியிலிருந்தும் போர்ப்பிரபுக்களின் கொடுமையிலிருந்தும் விடுவித்து ஒன்றுபடுத்தி மக்களது நல் வாழ்வுக்கு வழிசெய்ய வேண்டுமென்ற நோக்குடன் கோமிங்டாங் கட்சியை நிறுவினார்.

ii) 1922ல் கோமிங்டாங் கட்சியில் சீர்திருத்தங்கள் செய்வதற்கென சங் - யாத் - சென் மேற்கொண்ட முயற்சிகளின் விளைவாக 1923ல் கோமின்டாங் அறிக்கை (Kvomitang Mainfesto) வெளியிடப்பட்டது. இதில் **தேசியவாதம், ஜனநாயகம், உழைப்பு** (நல்வாழ்க்கை) ஆகிய மூன்று இலட்சியங்கள் வலியுறுத்தப்பட்டது.

iii) சென்னின் கட்சி 1924ல் முதலாவது தேசிய மாநாட்டை கூட்டியது. அதில் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளின் விளைவாக குறுகிய காலத்திலேயே விரிவானதொரு பொதுமக்கள் இயக்கமாக (தேசிய இயக்கமாக) கோமிங்டாங் வளர்ச்சியுற்றது. அத்துடன் கொமியூனிஸ்டு களும் அதில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர்.

iv) இதன் விளைவாக யாங்சிங் பள்ளத்தாக்கில் தொழிற்சாலைகளை மையமாகக் கொண்டு தொழிலாளர் அமைப்புக்கள், தெழிற்சங்க நடவடிக்கைகள், விவசாயிகள் இயக்கங்கள், இளைஞர் இயக்கங்கள், பெண்கள் விடுதலை அமைப்புக்கள் என்பனவும் வளர்ச்சியடைந்தன.

v) சன்-யாத்-சென் தலைமையிலான கென்டன் அரசு **ரஷ்யாவுடன் நட்பு, சீனக் கம்!னிஸ்ட் கட்சியுடன் ஒத்துழைப்பு, மக்களின் நலன்களைப் பெறுவதற்காக சோஷலிசம்** ஆகிய மூன்றையும் நோக்காக கொண்டிருந்தது.

vi) சோவியத் ரஷ்யாவில் நிர்வாகம், இராணுவம், கட்சி ஆகிய மூன்றின் அமைப்பைப் பற்றி அறிவதற்காக ஒரு குழுவை சன் அனுப்பினார்.

அக்குழுவின் ஆலோசனைக்கு அமைய "வாம்போவா" என்ற இடத்தில் இராணுவப்பயிற்சி நிலையத்தை (Whampoa Military Academy) கென்டன் அரசு நிறுவியது.

vii) ரஷ்ய ஆலோசகர்கள், போர்க்கருவிகள் ஆகிய உதவியும் இராணுவ பயிற்சி நிலையத்துக்கு கிடைத்தது. போரோடின் (Borodin) அரசியல் ஆலோசகராகவும், புளுச்சர் (Blucher) ராணுவ ஆலோசகராகவும் ரஷ்யாவிலிருந்து வந்து சன்னின் அரசுக்கு உதவினார்.

viii)ரஷ்ய உதவியோடு தேசிய புரட்சிப்படை (National Revolvtionars Army) உருவாக்கப்பட்டது. பேச்சுவார்த்தைகள் மூலம் நாட்டை ஒன்றுபடுத்த முடியாவிட்டால் வலிமை மிக்க இப்படையைக் கொண்டே நாட்டை ஒன்றுபடுத்த முடியும் என சன் கருதினார்.

ix) கோமிங்டாங் கட்சியைக் கட்டுப்பாடும் கொள்கைப்பிடிப்பும் உள்ள தாக மாற்றியமைப்பதற்குக் கட்சியின் அமைப்பில் பல மாறுதல்கள் செய்யப்பட்டன. அத்துடன் கொள்ளைப் பிரச்சாரம் செய்வதற்கென ஒரு குழுவும் அமைக்கப்பட்டது.

## 54. கோமிங்டான் கட்சியின் கொள்கைப்பிரச்சாரம்: முன்வைத்த விடயங்கள்

i) கட்சியை ரஷ்யாவின் கொமியூனிசக் கட்சியைப்போல கட்டியெழுப் பப்பட வேண்டும் என்று போரோடின் (Borodin) ஆலோசனை கூறினார்.

ii) கட்சியின் பிரச்சார நடவடிக்கைகளுக்கென "சூ-என்-லாயின்" தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டது.

iii) பிரச்சார நடவடிக்கைகளின்போது முன்வைத்த விடயங்கள் வருமாறு.
- இராணுவ ஆட்சியை இல்லாதொழித்தல்.
- ஜனநாயக வாத, நேர்மையான அரசியல் வாதிகளை நியமனஞ் செய்தல்.
- ஆயுத பாவனையைக் கைவிடல்.

## 55. கோமிங்டான் கட்சியின் அடிப்படைக் கொள்கைகள்

i) **தேசிய வாதம்:-** சீனாவை வெளிநாட்டு சக்திகளிடமிருந்து சுதந்திரம் பெறச் செய்தல், மக்கள் அரசாங்கத்துக்கு உறுதுணையாக இருத்தல் தேசிய வாதம் ஆகும்.

ii) **ஜனநாயகம்:-** பிரபலமான இம் முறையினால் பிரதி நிதித்துவ ஆட்சி முறையொன்றைத் தொடர்தல்.

iii) **உழைப்பு (நல்வாழ்க்கை):-** உற்பத்தி அதிகரிக்கும் போது சமூகம் துரித மாற்றங்களுக்கு உள்ளாகும்.

## 56. கலாநிதி சாங்-யாத்-சென் பற்றிய மதிப்பீடு

i) சீனா தோற்றுவித்த தனிப்பெரும் தலைவர்களில் ஒருவர்

ii) நாட்டை ஒன்றுபடுத்தி மக்களின் நல்வாழ்வுக்காக 1912ல் கோமின்டாங் கட்சியை ஆரம்பித்தார்.

iii) சீரிய தலைமையின் கீழ் கோமின்டாங் கட்சி வலிமைமிக்கதேசிய இயக்கமாக வளர்த்தமை.

iv) சென்னுடைய கருத்துப்படி புரட்சிகரமான சந்தர்ப்பங்கள் மூன்றாகும்.
   - **யுத்த சந்தர்ப்பம் :-** நாட்டின் சட்டத்தை நிலை நாட்டுவதற்காக அதிகாரத்தைப் பிரயோகித்தல்.
   - **பொறுப்பேற்கும் சந்தர்ப்பம்:-** மக்களுக்கு பயிற்சி அளித்தல், புரட்சித் தலைமைக்கு கௌரவமளித்தல்.
   - **யாப்பொன்றை உருவாக்கும் சந்தர்ப்பம்:-** பிரதிநிதித்துவ ஆட்சி முறைக்கான அரசியல் யாப்பினைத் தயாரித்தல்.



**சங்-யாத்- சென்**

v) புரட்சியின் தந்தை என அழைக்கப்பட்ட சங்-யாத்-சென் குறுகிய காலத்திலேயே மரணமானவை சீன தேசிய இயக்கத்துக்குப் பேரடியாக அமைந்தது.

**Note: சங்-யாத்- சென்னின் இறப்பு**

- அமெரிக்காவின் ஆதிக்கத்திலிருந்து சீஹ்லி குழு (ஊஃபூ தலைவர்) பீகிங் ஆட்சிப் பீடத்திலிருந்து விரட்டப்பட்டு ஜப்பானால் ஆதரிக்கப்பட்ட டுவான் - சி - ஜுயி, சங் - சோ - லின் ஆகியோரைக்கொண்ட அன்ஹ்வீக் குழுவினரால் அதிகாரம் கைப்பற்றப்பட்டிருந்தது.
- பீகிங்கின் புதிய ஆட்சியாளர்கள் தமது நிலையை வலுப்படுத்திக் கொள்ளும் நோக்குடன் சங் - யாத் - சென்னுடன் பேச்சு வார்த்தை நடத்த முன்வந்தனர்.
- அவர்களது அழைப்பை ஏற்று பீகிங் சென்ற சென் திடீரென்று நோய்வாய்ப்பட்டு பீகிங்கிலேயே மரணமானார்.

## 57. சியெங் - காய் - ஷெக் தலைமையில் கோமிங்டாங் கட்சி

i) கோமிங்டாங் அணியினருக்கு தலைமைத்துவம் வழங்குவதற்கு ஜெனரலாக நியமனம் பெற்ற சியெங்காய் ஷெக் முதன்முதலில் யங்ஸி பள்ளத்தாக்கில் இராணுவத் தலைவர்களைத் தோற்கடித்தார். பின்னர் "தண்டனை வழங்கும் செயற்பாடு" எனும் பெயரில் பல தொடர் தாக்குதல்களை மேற்கொண்டு அதிகாரங்களை மக்கள் மயப்படுத்தினார்.

ii) கோமிங்டாங் கட்சியின் மரபுவழிக் கொள்கை உடையவர்கள் கொமியூனிச விரோதிகளாகக் காணப்பட்டதுடன் கொம்யூனிசவாதி (குடியரசு வாதிகள்) கட்சியிலிருந்து நீக்கப்பட்டனர்.



**சியெங் - காய் - ஷெக்**

iii) கொமியூனிச வாதிகள் கட்சியிலிருந்து நீக்கப்பட்டதன் பின்னர் சியெங்-காய்- ஷெக் கோமிங்டாங் கட்சியின் தன்னிகரில்லாத தலைவராக விளங்கினார்.

vi) கொமியூனிச வாதிகள் விவசாயிகளையும் தொழிலாளர்களையும் இணைத்துக் கொண்டு கட்சியை பலமடையச்செய்யும் நோக்கில் செயற்பட்டனர்.

v) கொம்யூனிச வாதிகள் தலைமையிலான கொமிங்டாங் கட்சியினர் 1928ஆம் ஆண்டு பீகிங் நகரை கைப்பற்றிக் கொண்டனர். அதே வேளை சியெங் - காய் - ஷெக் தலைமையிலான படையினர் நென்கின் நகரை கைப்பற்றி அதனை தமது தலைநகராக்கிக் கொண்டனர்.

vi) கொமிங்டாங் அணியினரால் (சியெங்-காய்-ஷெக் தலைமையிலான) நாட்டின் பல பாகங்கள் கைப்பற்றப்பட்ட போதிலும் அதிகாரத்தை தொடந்து நிலை நாட்டுவதிலுள்ள சிரமங்களால் தேசியத்தைக் கட்டியெழுப்பவேண்டிய பாரியபொறுப்பு இவர்களிடத்தே காணப்பட்டது.

vii) 18ம் நூற்றாண்டின் பின்னர் சீனாவின் பெரும் பகுதியை ஐக்கியப்படுத்தி ஆட்சி அதிகாரத்தை கொண்டு நடத்துவதற்கு சியாங்காய் ஷெக்கினால் மாத்திரமே முடிந்தது.

viii) கொமிங்டாங் தேசியவாதிகளை சர்வதேசம் ஏற்றுக்கொண்டதுடன் வெளிநாட்டு தூதுவராலய உறவுகளையும் ஏற்படுத்திக் கொள்ள முடிந்தது.

**58. கொமிங்டாங் கட்சி வீழ்ச்சியடைந்ததற்கான காரணங்கள்**

i) சமூகப் பிரச்சனைகளை தீர்ப்பதற்கு முடியாமல் போனமை
ii) கொமியூனிச வாதிகளின் கடுமையான எதிர்ப்பு
iii) 1937இல் ஜப்பான், சீனாவை ஆக்கிரமித்தமை

## கொமியூனிசத்தின் எழுச்சி

**59. கொமியூனிசதத்தின் வளர்ச்சிக் கட்டங்கள்**

- வளர்ச்சிக்கட்டங்களை 3 வகைப்படுத்தலாம்

i) **முதற் கட்டம் :- 1921 - 1927**

- 1921ல் ஷாங்கை நகரில் சீனக்கொமியூனிச கட்சி ரகசியமாகத் தோற்று விக்கப்பட்டது. இதற்கு மா ஓ சேதுங் காரணமாக விளங்கினார்.
- போர்ப்பிரபுக்களையும், வல்லரசுக்களையும் எதிர்த்து சீனாவின் எழுச்சிக்கும் விடுதலைக்கும் இப்புதிய கட்சி பாடுபட்டதால் சங்யாத் சென்னின் கொமிங்டாங் கட்சியில் இதற்கும் இடமளிக்கப்பட்டது.
- ஆனால் சங்யாத் சென்னின் மரனத்தின் பின்னர் கோமிங்டாங் கட்சியினருக்கும் கொமியூனிச கட்சியினருக்கும் இடையில் முரண் பாடுகள் ஏற்பட்டன.
- 1927ல் ஷாங்கையை சியங்காய் ஷெக் தலைமையிலான படை யினர் கைப்பற்றிய பின்னர் கொமியூனிஸ்ருகள் கோமிங்டாங் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டனர்.

ii) **இரண்டாம் கட்டம் :-1927 - 1937**

- கொமியூனிச வாதிகள் விவசாயிகளையும் தொழிலாளிகளையும் இணைத்துக்கொண்டு கட்சியை பலமடையச்செய்யும் நோக்கில் செயற்பட்டனர். சீன, செஞ்சேனையின் தோற்றம் இதுவே.
- சியாங்காய் செக்கின் ஆட்சி தெற்குசீனா, மத்திய சீனாவில் ஒழிக்கப்பட்டதோடு கொமியூனிஸ்டுகளின் ஆட்சி நிறுவப்பட்டது இதற்கு மா ஓ சேதுங் தலைமை வகித்தார்.
- சியங்காய் செக்கினுடைய படை தொடர்ந்து வல்லரசுகளின் உதவியோடு கொமியூனிட் பகுதிகளை தாக்கி வந்தமையால் மா ஓ சேதுங் மிக நீண்ட நடைப்பயணம் ஒன்றை மேற்கொண்டமை. இதன் மூலம் மா ஓ சேதுங்கின் புகழ் ஓங்கியது.
- கொமியூனிஸ்டுக்களின் புதிய தலைமையகம் யெனன் நகருக்கு மாற்றப்பட்டது. இது சோவியத் ரஷ்யாவின் எல்லையில் உள்ளதால் அந்நாட்டின் உதவியும் கிடைத்தது.
- கொமியூனிஸ்ட் கட்சி விவசாயிகளின் நலனில் அக்கறை கொண்டு செயற்பட்டது. இதற்காக காணியற்ற விவசாயிகளுக்கு நிலங்களை பகிர்ந்தளித்தல், வரிச்சுமைகளை குறைத்தல், காணிகளை பிரித்து வழங்க காணி வங்கி ஒன்றை நிறுவுதல், நீர்ப்பாசனத்திட்டங்கள், கூட்டுறவு முறை, அபிவிருத்தி, நவீன பயிர்ச்செய்கை முறை, பயிர்களை பாதுகாக்கும் முறைகள் என்பவற்றை அறிமுகம் செய்தல் போன்ற நடவடிக்கைகளை மேற்கொள்ளல்.

iii) **மூன்றாம் கட்டம் : 1937 - 1949**

- 1937இல் இரண்டாவது சீன ஜப்பானியப் போர் ஆரம்பித்தது. ஜப்பானியப்படை பெரும் பகுதிகளை சியாங்காய் செக்கிடமிருந்து கைப்பற்றி கொண்டது.
- இரண்டாம் உலகப் போரின் காலத்தில் கொமியூனிஸ்டுகளும் சியாங்காய் செக்கும் ஒன்றிணைந்து ஜப்பானுக்கு எதிராக போரிடவேண்டுமென அமெரிக்கா வற்புறுத்திய போதும் பயன்கிடைக்கவில்லை.
- ஐக்கிய அமெரிக்கா ஜப்பானுக்கு எதிரான போரில் பங்கெடுத்ததால் சீனாவுக்கு யுத்த உதவிகள் கிடைத்தது. இதனால் ஜப்பானிய படைகளால் சீனா முழுவதையும் கைப்பற்றிகொள்ள முடியவில்லை.
- உலகமகா யுத்தத்தின் முடிவின் பின்னர் கொமியூனிஸ்ட் கட்சிக்கும் தேசியவாத கட்சிக்கும் (கோமிங்டாங் கட்சி) இடையில் நடைபெற்ற யுத்தத்தில் தேசியவாதக் கட்சி யினர் பெருந்தொகையில் கொல்லப் பட்டனர். இதனால் சியங்காய் செக் தாய்வானுக்கு தப்பி ஓடினான்.

## 60. மா - ஓ - சேதுங்

i) மா ஓ சேதுங் 1893ல் ஹுனான் மாநிலத்தில் விவசாய குடும்பம் ஒன்றில் பிறந்தார்.

ii) உள்ளூர் ஆரம்பப் பாடசாலையில் கல்வி கற்ற இவர் 13ம் வயதில் படிப்பை முடித்துக்கொண்டு தந்தைக்கு உதவி செய்தார்.

iii) பின்னர் சாங்ஷாவில் நடுநிலை பாடசாலையில் கல்வியைத் தொடர்ந்த இவர் பீகிங் நகர் சென்று பீகிங் பல்கலைக்கழகத்து நூல் நிலைய உதவியாளராகப் பணியாற்றினார்.

iv) இளம்பிராயம் தொட்டு போர்த்தலைவர்களுக்கும் அரச வம்சங்களின் மோசமான ஆட்சியாளர்களுக்கும் எதிராகச் செயற்பட்டார்.

v) 1921ல் "சீனா கொமியூனிஸ்ட் கட்சியை" ஆரம்பித்த தலைவர்களுள் மா ஓ சேதுக்கும் ஒருவராவார்.



மா ஓ சேதுங்

vi) 1927முதல் கொமியூனிஸ்டுகளுக்கு எதிராக சியாங்காய் செக் போரைத் தொடங்கியதும் கொமியூனிஸ்களுக்கு இழப்புக்கள் ஏற்பட்டதோடு விவசாயக் கிளர்ச்சிகளும் இடம்பெற்றன.

vii) தொடர்சியான விவசாயக் கிளர்சிகள் மா ஓ சேதுக்கின் எதிர்கால நடவடிக்கைகளுக்கான ஆரம்பமாக விளங்கியது.

**61. மா ஓ சேதுவின் செயற்திட்டத்தில் அடங்கியிருந்த விடயங்கள்**

i) கிராம மட்டத்தில் கூட்டுறவு முறையை ஆரம்பித்தல்

ii) வழிபாட்டு மையங்களை உடைத்து அவ்விடத்தில் எரிபொருளுக்கான மரங்களை சேகரித்து வைத்தல்.

iii) கொடூரமான பிரபுத்துவ வகுப்பினரை பயமுறுத்தலும் அவர்கள் மீது தாக்குதல் மேற்கொள்ளலும்.

**சீனப்புரட்சிக்கான பின்னணியில் மா ஓ சேதுங்கின் கருத்துக்கள்:**

- "புரட்சி என்பது மக்களை இரவு விருந்தொன்றிற்கு அழைக்கும் செயல் அல்ல"
- "கிராமியப் புரட்சி என்பது மானிய நிலங்களின் உரிமையாளர்களான பணம் படைத்த வகுப்பினரிடம் காணப்படும் ஆட்சியதிகாரத்தைக் கவிழ்த்துவிடும் செயற்பாடாகும்"
- "இலட்சக் கணக்கானோர் புரட்சியிலீடுபடும்போது அது ஒரு புயலாகவோ சூறாவளியாகவோ மாறலாம்"
- "சீனாவில் வெற்றிகரமான புரட்சியாளர்கள் விவசாயிகளே"

**62. மா ஓ சேதுங் தலைமையிலான நீண்ட நடைப்பயணம் பற்றிய முக்கிய குறிப்புக்கள்**

i) கொமியூனிஸ்ட் அரசை ஒழிக்கும் நோக்கில் சியங்காய் செக்கின் படை நான்கு முறை போர் தொடுத்து தோல்வியடைந்தபோதிலும் கொமியூனிஸ்ட் பகுதிகளை சுற்றி வளைத்துக் கொள்ளும் புதிய உத்தியை கையாண்டனர்.

ii) பகைவர்களால் சூழப்பட்டு ஓராண்டு காலம் கடும்போர் நடைபெற்ற பின்னர் பகைவரது இரும்பு வளையத்தை உடைத்துக்கொண்டு வெளியேறி 6000 மைல் தூரமுள்ள தனது நீண்ட பயணத்தை (Long March) மா ஓ சேதுங்கின் செம்படை தொடங்கியது.

iii) 1934ல் கியங்ஸி நகரில் ஆரம்பித்த இப்பாதயாத்திரை 1935இல் கொமியுனிஸ்ட கட்சியின் மத்திய நிலையம் அமைந்திருந்த யெனான் நகரில் முடிவுற்றது.

iv) பகைவரது விமானத் தாக்குதலில் இருந்து தப்பிப்பதற்காக இரவிலும், மழையிலும், மலை, காடு, பாலைவன் ஆகியவற்றின் வழியாக சென்ற இப்பாத யாத்திரை யினால் மா ஓ சேதுங்கின் புகழ் மேலும் ஓங்கியது.

v) பயணத்தின் ஆரம்பத்தில் 90,000பேர் கலந்து கொண்ட போதிலும் முடிவில் 20,000 பேரே எஞ்சியிருந்தனர். இதிலிருந்து பின்வருவன வற்றை குறிப்பிடலாம்.
- இவர்களே சிறந்த கொமியூனிசவாதிகள்
- மனத்தைரியம், அர்ப்பணிப்பு முதலிய குணஅம்சங்கள் சிறந்த கொமியூனிச வாதிகளுக்கு தேவை.

**63. சீனாவின் கொம்யூனிசத்தின் வெற்றி:- முக்கிய அம்சங்கள்**

i) தேசிய வாதிகள் படை தோல்வி அடைந்ததைத் தொடர்ந்து 1949 ஒக்ரோபர் மாதம் பீகிங் நகரை தலைநகராகக் கொண்டு "சீன மக்கள் கூட்டாச்சி" ஆரம்பமானது.

ii) 1954ல் மக்கள் சீனாவின் அரசியல் யாப்பு சோவியத் ரஷ்யாவை ஒத்ததாக வெளியிடப்பட்டது. அதில் முக்கியமான அம்சங்கள் வருமாறு:
- அகில சீன மக்கள் காங்கிரஸ் எனும் மத்திய நிருவாக அமைப்பிடம் அதிகாரங்கள் காணப்படும்.
- தனிநபர் சுதந்திரம் மதிப்பளிக்கப்படும்
- ஆண் - பெண் சமத்துவம் பேணப்படும்
- சொத்துரிமை வழங்கப்படும்
- 18 வயதுக்கு மேற்பட்டோருக்கு வாக்குரிமை உண்டு.

iii) கொமியூனிஸ்ட் கட்சி அதிகாரத்துக்கு வந்த பின்னர் பொருளாதார சமூக, கலாசார மாற்றங்கள் பலவும் செயற்படுத்தப்பட்டன. இதனால் சீனா வரலாற்றில் கொமியூனிசப் புரட்சி முக்கிய கட்டமாகும்.

iv) உலகில் விவசாயிகளின் உதவியுடன் பாரிய புரட்சியொன்றை மேற கொண்ட முதல் நபர் மா ஓ சேதுங் ஆவார். மேலும் இவர் கால்மாக்சின் மக்கள் கிளர்ச்சி பற்றிய கருத்தை ஏற்றுக் கொண்ட துடன் 19ம் நூற்றாண்டில் (1851-1864) தைப்பிங் விவசாயிகள் கிளர்ச்சி தோல்வியடைந்தது பற்றிய ஆய்வினையும் மேற்கொண்டார்.

v) கொமியூனிச ஆட்சியின் வெற்றிக்காக விவசாயிகள், தொழிலாளிகள் சிறு அளவில் பணம்படைத்தோர், மத்திய வகுப்பினர்கள் போன்றோர் களின் உதவியை மா ஓ சேதுங் பெற்றுக்கொண்டார். பணக்காரர் களினதும் மத்திய வகுப்பினரினதும் உதவியை பெறுவது மாக்ஸிச

வாதத்திற்கு முரணானது ஆயினும் அவர்களிடத்தே காணப்பட்ட பொருளாதார பலம், கைத்தொழில் அறிவு கொமியூனிசத்தின் வளர்ச்சிக்கு அவசியமானது என சேதுங் கருதினார்.

vi) உற்பத்தியாளர்களும், மத்திய வகுப்பினரும் தமது சொத்துக்களை அரசாங்கத்திடம் தற்காலிகமாக ஒப்படைத்து விட்டு கொமியூனிஸ்ட் அரசில் இணைந்து செயற்பட முடிந்தது.

vii) 1956ல் மத்திய வகுப்பினரின் உரிமை ஒழிக்கப்பட்டதைத் தொடர்ந்து அரச இயந்திரத்தை இயக்கும் திறவு கோல் மா ஓ சேதுங் வசமானது.

## 64. முன்னோக்கிய பெரும் பாய்ச்சல் வேலைத்திட்டம்

i) கொமியூனிஸ்ட் ஆட்சியில் சீனா கைத்தொழில் துறையிலும் விவசாயத் துறையிலும் துரித வளர்ச்சி கண்டது. 1950 - 1953இல் நிலப்பிரபுக் களின் (நிலச் சுவாந்தர்களின்) நில உரிமை பறிக்கப்பட்டது. ஏனெனில் உழுபவனுக்கே நிலம் சொந்தம் என்பதாலாகும்.

ii) நில உரிமையாளர்களான புதிய விவசாய சமூகம் கூட்டுறவு அடிப்படையில் உற்பத்தியை மேற்கொள்ள வேண்டுமென அரசாங்கம் கேட்டுக்கொண்டதிற்கு அமைய 1955-1957காலப்பகுதிகளில் துரித முன்னேற்றம் கண்டது.

iii) 1959இல் விவசாயத் துறையில் வளர்ச்சியை ஏற்படுத்துவதற்காக "முன்னோக்கிய பெரும்பாய்ச்சல்" எனும் வேலைத்திட்டம் அறிமுகப்படுத்தப் பட்டது. இதன் பயனால் கூட்டுறவு விவசாயப்பண்ணைகள் ஒன்றினைக் கப்பட்டு பாரிய கொமியூனிஸ்ட் அமைப்புக்கள் உருவாக்கப்பட்டது.

iv) இவ்வேலைத்திட்டத்தின் முக்கிய நோக்கம் விவசாய, கைத்தொழில் துறையில் உற்பத்தியை அதிகரித்து பொருளாதார வளர்ச்சி வேகத்தை அதிகரித்தல் ஆகும். ஆயினும் முன்னோக்கிய பெரும் பாய்ச்சல் வேலைத்திட்டம் தோல்வியிலேயே முடிவடைந்தது.

v) வேலைத்திட்டத்தின் தோல்வி மா ஓ சேதுங்கின் அரசியல் நிலையை தளர்வடையச் செய்தது. இதனால் 1959ல் ஆட்சித் தலைமைப் பதவியை கைவிட்டு கட்சித்தலைமை பதவியை வகிப்பதன் ஊடாக தனது செல்வாக்கை தக்கவைத்துக்கொள்ள முயற்சித்தார்.

## 65. கலாசாரப் புரட்சி: முக்கிய அம்சங்கள்

i) **லியோ ஷாப் சி** அவர்களை பிரதிநிதித்துவப்படுத்திய மிதவாதி களுக்கும், **மா ஓ சேதுங்கை** பிரதிநிதித்துவப்படுத்திய தேசியவாதி களுக்கும் இடையிலான அதிகாரப்படுத்திய தீவிரவாதிகளுக்கும் (லின் பியாங் தலைமையிலான) இடையில் நிகழ்ந்த அதிகாரப் போராட்டமே கலாசாரப் புரட்சி ஆகும்.

ii) கலாசாரப் புரட்சி ஆரம்பமாகும்போது அரசாங்க அதிகாரிகள் பல்வேறு குற்றச்சாட்டுக்களின் பேரில் பதவியிறக்கம் செய்யப்பட்ட தோடு சிலர் கைது செய்யப்பட்டனர். ஏனெனில்

- கொமியூனிசவாதிகள் முன்வைத்த மறுசீரமைப்பு வாதம்
- கட்சி விரோதச் செயற்பாடுகள்

- லியோ ஷாப் சியின் முதலாளித்துவப் பாதையிலான பயணம். என்பன காரணமாக அமைந்தன.

iii) கலாசாரப் புரட்சிக்கு கடுமையான எதிர்ப்பு ஏற்பட்ட போது மா ஓ சேதுங் இளைஞர்களை தன்வசப்படுத்தும் நோக்கில் 1966ல் பீகிங் நகரில் "செம்பாதுகாப்புப் படையை" (Red Guards) உருவாக்கினார்.

iv) புரட்சியின் எதிரிகளை அழித்தொழிக்குமாறு மா ஓ கேட்டுக்கொள்ள செம்பாதுகாப்புப் படையின் இளைஞர்கள் சீனா முழுவதும் கலாசாரப் புரட்சி எனும் பெயரில் கலகம் விளைத்தனர்.

v) கலாசார புரட்சி என்று பெயரிலான போராட்டத்தால் சீனாவில் ஏற்பட்ட விளைவுகள்
   - முக்கியமான தொழிற்சாலைகளில் வேலை நிறுத்தங்கள் இடம் பெற்றன.
   - போக்குவரத்துத்துறைகள் சிக்கல் நிலையை அடைந்தது.
   - அரசியல் ரீதியாக சீனா உலகில் தனிமைப்படுத்தப்பட்டது.
   - செம்பாதுகாப்பு படையும், புரட்சிகர கிளர்ச்சியாளர்களும் சிவில் யுத்தமொன்றில் ஈடுபட்டனர்.

vi) எனவே மக்கள் விடுதலை இராணுவம் மூலம் நாட்டில் அமைதியை ஏற்படுத்துவதற்கு மா-ஓ-சேதுங் மற்றும் சௌ-என்-லாய் இருவரும் நடவடிக்கை எடுத்தனர். இதன் மூலம் அதிதீவிரவாதக் கொள்கை யுடையவர்கள் கட்சியிலிருந்து நீக்கப்பட்டனர்.

**66. கலாசாரப் புரட்சியின் பின்னர் சீனச் சமூகத்தில் ஏற்பட்ட மாற்றங்கள்**

i) மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வடைந்தது

ii) பெண்களுக்கும் ஆண்களைப்போல சமவுரிமை கிடைத்தது.

iii) நவீன உலகிற்கு ஏற்ப கல்வித்துறையில் மாற்றம் ஏற்பட்டது. **உ+ம்:** இலகுவான சீன அரிச்சுவடி ஒன்று உருவாக்கப்பட்டது.

iv) சோவியத் ரஷ்யா, ஐக்கிய அமெரிக்கா, ஐக்கிய இராச்சியம் போன்ற பல நாடுகளுடன் உயர் ஸ்தானிகர் தொடர்புகள் ஏற்பட்டது.

# உலக மகாயுத்தங்களும் சமாதான முயற்சிகளும் 4

## 1. உலக மகா யுத்தம்: முக்கிய அம்சங்கள்

i) 20ம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் இரு முக்கிய போர்கள் இடம் பெற்றன. இதில் உலகம் முழுவதும் உள்ள வெவ்வேறு நாடுகள் பங்குபற்றியதால் உலகமகா யுத்தம் எனப்பெயர் பெறுகிறது.

ii) 1914-18 வரை முதலாம் உலகமகாயுத்தமும், 1939 - 1945 வரை இரண்டாம் உலக மகா யுத்தமும் நிகழ்ந்தன.

iii) இப்போர்களினால் ஏற்பட்ட உயிர்ச்சேதங்களும், பொருட்சேதங்களும் அளவிடமுடியாதவை ஆகும்.

iv) இத்தகைய பேரழிவுகள் மீண்டும் ஏற்படுவதை தடுப்பதற்காகவும் உலக சமாதானத்தை பாதுகாப்பதற்காகவும் 1919இல் சர்வதேச சங்கம் தோற்றுவிக்கப்பட்டது. எனினும் எதிர்பாக்கப்பட்ட நோக்கங்கள் நிறைவேற்றப்படாமையால் இரண்டாம் உலக மகாயுத்தம் ஏற்பட்டது.

v) மீண்டும் உலக சமாதானத்தை பாதுகாப்பதற்கும் நாடுகளின் முன்னேற்றத்தைத் திட்டமிடுவதற்காகவும் முக்கிய நாடுகள் ஒன்று கூடி ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தை தோற்றுவித்தன.

## 2. முதலாம் உலகமகா யுத்தத்திற்கான காரணங்கள்

### i) அல்சேஸ் - லொறைன் பிரச்சினை

- 1871இல் சிறு இராச்சியங்களாக பிளவுபட்டிருந்த பிரதேசங்களை இணைத்துக்கொண்டு ஜேர்மனியின் புதிய அரசு உருவானது.
- ஜேர்மனியை ஐக்கியப்படுத்தும் போது பிரான்சுடன் ஏற்பட்ட போரில் ஜேர்மனி வெற்றியடைந்தது. இதனால் பிரான்சிற்கு சொந்தமான அல்செஸ் லொறைன் என்னும் பிரதேசங்கள் ஜேர்மனிக்கு சொந்த மாயின.
- இப்பிரதேசங்கள் இரும்பு நிலக்கரி சுரங்களை கொண்டிருந்தமையால் பிரான்சிற்கு பாரிய இழப்பாக இது அமைந்தது.
- இழந்த பிரதேசங்களை மீட்பதற்கும், ஜேர்மனியை பழிவாங்கு வதற்குமான நடவடிக்கைகளை பிரான்ஸ் மேற்கொண்டமை.

### ii) பிஸ்மாக்கின் உடன்படிக்கை கொள்கை

- ஜேர்மனியின் ஐக்கியத்திற்கு காரணமாயிருந்த பிஸ்மார்க் ஐரோப்பாவில் பிரான்சை தனிமைப்படுத்தும் தந்திரத்தில் ஈடுபட்டார்.
- ஜேர்மனியை பலப்படுத்தும் நோக்கில் பல ஐரோப்பிய நாடுகளுடன் ராஜதந்திர தொடர்புகளை ஏற்படுத்தி அதன் மத்திய நிலையமாக ஜேர்மனியை திகழச் செய்தார்.
- தனது உபாயங்களை வெற்றிகரமாக செயற்படுத்துவதற்காக உடன்படிக்கைக் கொள்கை ஒன்றை கடைப்பிடித்தார். இதன்

முதற்கட்டமாக 1873ல் ரஷ்யா, ஆஸ்திரியா, ஜேர்மனி ஆகிய மூன்று நாடுகளையும் இணைத்து "மூன்று பேரரசுகளின் சங்கம்" என்பதை உரு வாக்கினார்.




- ரஷ்யா விலகிக் கொண்ட பின்னர் ஏனைய இரு நாடுகளுக்கிடையில் 1879ல் யுத்த உடன்படிக்கை ஒன்றை செய்து 1882ல் இத்தாலியையும் சேர்த்து "மத்திய ஐரோப்பிய வல்லரசுகளின் நட்புக்கூட்டு" என்னும் அமைப்பை உருவாக்கினார்.
- இச்சந்தர்ப்பத்தில் பெரிய பிரித்தானியா ஐரோப்பிய நாடுகளின் அரசியல் நடவடிக்கைகளிலிருந்து ஒதுங்கி கொண்டமை பிஸ்மார்க் கின் கொள்கை வெற்றியடைந்த ஒன்றாகவே காணப்பட்டது. இதன் மூலம் பிரான்சிற்கு நட்பு நாடுகள் இல்லாமல் செய்யப்பட்டது.
- ஆயினும் 1890ல் பிஸ்மார்க் ஆட்சியிலிருந்து நீங்கிய பின்னர் ஜேர்மனிய ஆட்சியாளர்கள் அவரது கொள்கைகளை கடைப் பிடித்த போதிலும் வெற்றியளிக்கவில்லை. இதனால் பிரான்ஸ் தனது நட்பு நாடுகளை இணைத்துக்கொண்டு ஒரு அணியை உருவாக்கி கொண்டது.
- 1ம் உலக மகா யுத்தம் ஒன்றை தோற்றிவிக்கக்கூடிய காரணிகள் உருவாகிய வேளை அந்நாடுகளை இரண்டு அணிகளாக பிரிப் பதில் பிஸ்மாக்கின் உடன்படிக்கை கொள்கை முக்கியத்துவப்பட்டது.

**iii) குடியேற்ற நாடுகளை பெற்றுக்கொள்வதற்கான போட்டி**

- ஐரோப்பிய நாடுகள் கைத்தொழில் மயமாகியதால் மூலப்பொருட் களை பெற்றுக்கொள்ளவும், முடிவுப்பொருட்களை சந்தைப் படுத்தவும் குடியேற்ற நாடுகளை பெற்றுக்கொள்ளும் போது நாடு களிடையே கடும்போட்டி ஏற்பட்டது. உதாரணம்

1) ஆசிய, ஆபிரிக்க நாடுகளை நோக்கி ஜேர்மனி நகர்ந்த போது பிரித்தானியாவுக்கு சவாலாக அமைந்தமை.
2) மொரோக்கோ தொடர்பாக பிரான்ஸ் மற்றும் ஸ்பானியாவிற்கு இடையில் ஏற்பட்ட கருத்து முரண்பாட்டின்போது ஜேர்மனி தலையிட்டது.
3) சீனாவில் வர்த்தக உரிமையை பெற்றுக்கொள்வதில் ரஷ்சியா விற்கும், ஜப்பானிற்கும் இடையில் கருத்து முரண்பாடு ஏற்பட்டது.
4) வடஆபிரிக்காவின் குடியேற்றங்கள் தொடர்பாக பிரான்ஸ் மற்றும் ஜேர்மனிக்கிடையில் கருத்து மோதல் காணப்பட்டமை.

- குடியேற்றங்களை பெற்றுக்கொள்வதற்கான இப்போட்டியானது எதிரிகளை வெல்லுவதற்கான ஆயுத படை பலத்தை அதிகரிக்கும் போட்டியாக மாற்றப்பட்டமை.

iv) கிழக்கு ஐரோப்பாவில் காணப்பட்ட நிலைமை

- பல்கேரியா, சேர்பியா, ருமேனியா முதலிய போல்கன் பிரதேச நாடுகளில் பல்வேறு இனமக்கள் வாழ்ந்தமையால் உள்நாட்டு குழப்பநிலை காணப்பட்டது. இதனால் போல்கன் பிரதேசத்தில் ஆதிக்கத்தை செலுத்துவதற்கு ரஷ்யா மேற்கொண்ட செயற்பாடுகளை ஆஸ்திரியா, பிரான்ஸ், ஜேர்மனி முதலிய நாடுகள் அவதானித்து கொண்டிருந்தமை.
- கிரேக்க, பல்கேரிய, ஸ்லேபிய இனத்தவர்கள் சுதந்திர மக்களாக வாழ்வதற்கு சேர்பியாவினால் சந்தர்ப்பம் வழங்கப்படாததால் அங்கு ஏற்பட்ட பதற்ற நிலமை.
  ஆஸ்திரிய முடிக்குரிய இளவரசர் சரஜிவோவில் வைத்து கொலை செய்யப்பட்டமை. இவ்வாறான அரசியல் குழப்பநிலை கிழக்கு ஐரோப்பா வில் நிலவியமை யுத்தத்திற்கான பின்னணியை தோற்றுவித்தது.

v) ஜேர்மனியின் பேரரசுக் கொள்கை


பேரரசன் வில்லியம்

- மொரோக்கோ பற்றிய பிரான்சிற்கும், ஸ்பானியாவிற்கும் இடையில் ஏற்பட்ட போட்டியில் தலையிட்ட பேரரசன் வில்லியம் பிரான்சை பாதிக்கும் வகையில்ஸ்பானியாவிற்கு உதவி செய்தான்.
- பிரித்தானியா, ஜேர்மனியின் கடற்படை ஆதிக்கப் போட்டியும் பகைமையும் பயமும் படைப்பல பெருக்கத்திற்கு காரணமாகியது. இதனால் பிரித்தானியா ஜேர்மனியின் எதிரியான பிரான்சுடன் இணைந்து கடற்பாதுகாப்பு முறை ஒன்றை செயற்படுத்தினர்.
- பேரரசன் வில்லியம் பேர்லின் முதல் பாக்தாத் வரை புகையிரதப பாதை அமைப்பதை பிரித்தானியா தனது கீழைத்தேய பேரசிற்கு ஆபத்தெனக் கருதியது.

vii) ஐரோப்பா இரண்டு அணிகளாகப் பிரிந்தமை

- பேரரசன் வில்லியத்தின் நடவடிக்கைகள் காரணமாக பிரித்தானியா தனது பாதுகாப்புக்கு ஜேர்மன் அச்சுறுத்தலாக அமைவதை கண்டு பிரான்சுடன் கூட்டுச்சேர்ந்தது.
- பிரான்சும், பிரித்தானியாவும், 1904ல் நட்புறவு உடன்படிக்கை மேற்கொண்டதோடு 1907ல் ரஷ்யாவும் இணைந்து "முக்கூட்டு நட்பு அணி" உருவானது. இதனால் ஐரோப்பாவில் நட்பு நாடுகள் எனவும் மத்திய ஐரோப்பிய வல்லரசு நாடுகள் "அச்சு நாடுகள் அணி" எனவும் இரு அணிகளாக ஐரோப்பா பிரிந்தது.

உடனடிக் காரணம்

viii) 1914 சரஜீவோ சம்பவம்

- சேர்பியாவில் சுற்றுப்பயணம் செய்து கொண்டிருந்த ஆஸ்திரியா வின் முடிக்குரிய இளவரசன் பிரான்சிஸ் பேர்டினந்தும் அவரது

மனைவியும் 1914 ஜூன் மாதம் 28ல் சேர்பியாவின் சரஜிவோ நகரில் வைத்து சேர்பியர் இருவரால் கொலை செய்யப்பட்டனர்.

- ஆஸ்திரியாவின் நட்டஈட்டுக் கோரிக்கையை சேர்பியா நிராகரித்து. 1914 ஜூலை 28ல் சேர்பியாவுக்கு எதிராக ஆஸ்திரியா போர்ப் பிரகடனஞ் செய்தது.
- ரஷ்யா சேர்பியாவுக்கு உதவியாக படை அனுப்பியது. 1914 ஆகஸ்ட் மாதம் 01ம் திகதி ரஷ்யாவுக்கு எதிராகவும் ஆகஸ்ட் 3ம் திகதி பிரான்சிற்கு எதிராகவும் ஜேர்மனி போர்ப்பிரகடனம் செய்தது.


பிரான்சிஸ் பேர்டினந்து


மன்னனும் மனைவியும் கொலை செய்யப்படல்

## 3. முதலாம் உலகப்போரின் பிரதான பங்காளிகள்

i) **நட்பு நாடு அணி ( நேசநாடுகள்)**
பிரித்தானியா, பிரான்ஸ், ரஷ்யா, ஐக்கிய அமெரிக்கா (பின்னர் இணைந்து கொண்டது)



1914இல் ஐரோப்பா

ii) **மத்திய ஐரோப்பிய வல்லரசு அணி**
ஜேர்மனி, ஆஸ்திரியா, இத்தாலி, துருக்கி, பல்கேரியா, ஹங்கேரி

**4. முதலாம் உலகப் போரில் நாடுகளின் பங்களிப்பு**

i) உலகப்போரின் முதற்கட்டம் சேர்பியாவுக்கும் ஆஸ்திரியாவிற்கும் இடையில் நடந்தது.

ii) ஆஸ்திரியாவுக்கு எதிராக ரஷ்யாவும், பிரான்சும் பிரதான பங்காளிகளாகப் போரில் பங்கேற்றன.

iii) ஆரம்பத்தில் போரில் பங்கேற்காத பிரித்தானியா, ஜேர்மனிப் படைகள் பெல்ஜியம்மீது படையெடுத்தபோது 1912ம்ஆண்டு பிரான்ஸ் - பிரித்தானிய ஒப்பந்தப்படி வடகடலை பாதுகாக்கும் பொருட்டு 1914ல் ஜேர்மனிக்கு எதிராக பிரித்தானியா போர்ப்பிரகடனம் செய்தது.

iv) பிரித்தானியா போர்களில் தனது குடியேற்ற நாடுகளின் இராணுவத்தை பங்கேற்க செய்ததால் ஐரோப்பாவினுள் இடம்பெற்ற போரானது உலகப் போராக மாறியது.

v) மத்திய ஐரோப்பிய வல்லரசு அணியிலிருந்த இத்தாலி 1915ல் பிரித்தானியாவின் இரகசிய ஒப்பந்தம் மூலம் நட்பு நாடுகள் அணியில் சேர்ந்து கொண்டது.

vi) போரில் ஈடுபட்ட இரு அணியினரும் தாம் எதிர்பார்த்தது போல் போரில் வெற்றி பெற முடியாததால் புதிய நட்பு நாடுகளை சேர்த்துக் கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டன.

vii) ஜேர்மனியானது துருக்கி, பல்கேரியா முதலிய நாடுகளைச் சேர்த்துக் கொண்டது. பிரித்தானியாவின் தலைமையிலான நட்பு அணி இத்தாலி, போர்த்துக்கல், ஜப்பான் முதலிய நாடுகளைச் சேர்த்துக் கொண்டது.

viii) பிரித்தானியா ஆயுதங்களையும், உணவுப்பொருட்களையும் பெறுவதை தடுக்கும் நோக்கில் ஜேர்மனி பிரித்தானிய கப்பல்களை எச்சரிக்கையின்றி தாக்கி அழித்துவந்தது. இவ்வாறான சூழ்நிலையில் தான் அமெரிக்காவின் பயணிகள் கப்பல் ஒன்று 1915ல் ஜேர்மனிய நீர்முழ்கிக் கப்பலினால் தாக்கப்பட்டது.


ஜேர்மனிய நீர்முழ்கிக் கப்பல்




## 5. முதலாம் உலக மகாயுத்தத்தில் அமெரிக்காவின் நிலைப்பாடு

i) உலக மகாயுத்த ஆரம்பத்தில் ஐக்கிய அமெரிக்கா
கொள்ளவில்லை. இதற்குரிய காரணங்கள்

- நடு நிலைமைப் போக்கை கடைப்பிடித்தமை
- போரில் ஈடுபட்ட நாடுகளுக்கு போராயுதங்கள், உணவு, உ
முதலியவற்றை விற்பனை செய்து இலாபமீட்டியமை.
- அமெரிக்காவில் பெரும்பான்மையினர் யுத்தத்தை விரும்பவில

ii) ஆயினும் 1917ல் ஐக்கிய அமெரிக்கா யுத்தத்தில் ஈடுபட
இதற்குரிய காரணங்கள்

- 1915ல் ஐக்கிய அமெரிக்கப் பயணிகளை ஏற்றிச்சென்ற "
தானிய கப்பல்' ஜேர்மனியின் நீர்மூழ்கிக் கப்பல் ஒன்றி
மூழ்கடிக்கப்பட்டபோது 1098 பேருடன் தென் அயர்லாந்து கட
மூழ்கியமை.

- பிரித்தானியர்களால் மேற்கொள்ளப்பட்ட பிரசாரமும் 1916ல் நடை பெற்ற தேர்தலில் யுத்தத்திற்கு ஆதரவாக குடியரசுவாதிகள் வெற்றி பெற்றுக்கொண்டமை.




iii) ஐக்கிய அமெரிக்கா யுத்தத்தில் பங்கேற்றமையானது யுத்தத்தின் போக்கை பல வழிகளில் மாற்றியமைத்தது. எடுத்துக்காட்டாக:

- நட்பு அணியின் பக்கமாக யுத்தம் சாதகமாக மாறியமை. ஐக்கிய அமெரிக்காவிடமிருந்த பணப்பலம், படைப்பலம், கையிருப்பிலிருந்த உணவு, மருந்து முதலியவற்றுடன் மக்களின் மனோபலமும் சேர்ந்து நட்பு அணியின் பலம் அதிகரித்தது.
- மத்திய ஐரோப்பிய வல்லரசுகளுக்கு எதிராக உலக அபிப் பிராயத்தை திரட்டும் நோக்கில் ஐக்கிய அமெரிக்கா செயற் பட்டமை. போரினால் ஒதுக்கப்பட்ட மக்கள் மத்தியில் தேசியம், சமாதானம் எனும் உத்வேகத்தை தோற்றிவித்தது.
- ஐக்கிய அமெரிக்கா போரில் பங்கெடுத்தமை நட்பு நாடுகளின் படைவீரர்களின் மனோபலத்தை மேலும் அதிகரித்தது.

6. **முதலாவது உலகப் போரில் ஜேர்மனி தோல்வியடைந்தமைக்குரிய காரணங்கள்**

i) **1915ல் இத்தாலி நட்பு நாடுகள் அணியின் சேர்ந்து கொண்டமை:** மத்திய ஐரோப்பிய வல்லரசு அணியைச் சார்ந்திருந்த இத்தாலி லண்டன் இரகசிய ஒப்பந்தம் மூலம் முக்கூட்டு அணியில் சேர்ந்தமையால் ஜேர்மனியின் போர் இரகசியங்கள் எதிரிகளுக்கு கிட்டியமை.

ii) **ஜேர்னியப்படைகள் பெல்ஜியம் மீது படையெடுத்தமை:** யுத்தத்தில் பங்கேற்காத பிரித்தானியா இச்சந்தர்ப்பத்தில் ஜேர்மனிக்கு எதிராக 1914ல் போர்ப்பிரகடனம் செய்தமை, அத்துடன் மேற்கு ஐரோப்பிய நாடுகள் ஜேர்மனிக்கு எதிராக ஒன்று திரண்டமை.

iii) **ஐக்கிய அமெரிக்கா நட்பு நாடுகள் அணியைச் சேர்ந்தமை:** 1915ல் ஐக்கிய அமெரிக்கப் பயணிகளை ஏற்றிச் சென்ற கப்பல் ஜேர்மனியின்

நீர்மூழ்கிக் கப்பலினால் மூழ்கடிக்கப்பட்டதால் இதுவரை நடுநிலைமை வகித்த ஐக்கிய அமெரிக்கா ஜேர்மனிக்கு எதிராக போர்ப்பிரகடனம் செய்தமை.

## 7. வர்சேல்ஸ் உடன்படிக்கை

i) உலக மகாயுத்த முடிவில் குற்றவாளியாகக் காணப்பட்ட ஜேர்மனிக்கு தண்டனை வழங்கும் செயற்பாடாக வர்சேல்ஸ் உடன்படிக்கை அமைந்தது.

ii) 1918ஜுன் 28ல் ஜேர்மனிமீது பலவந்தமாக திணிக்கப்பட்ட இவ் ஒப்பந்தம் மூலம் நட்பு நாடுகளால் ஜேர்மனி பழிவாங்கப்பட்டது.



வர்சேலஸ் உடன்படிக்கையின்போது

iii) வர்சேல்ஸ் உடன்படிக்கைபடி ஜேர்மனிக்கு ஏற்பட்ட இழப்புகள் வருமாறு

- அல்சாஸ், லொரேன் பிரதேசங்கள் பிரான்ஸிடம் மீண்டும் கையளிக்கப்பட்டது.
- யுபென், மல்டெட் பிரதேசங்கள் பெல்ஜியத்துக்கும் செல்லி பிரதேசத்தை டென்மார்க்குக்கும் கையளிக்கப்பட்டது.
- ஜேர்மனியின் குடியேற்றங்கள் பறிமுதல் செய்யப்பட்டன. அவை பிரித்தானியா, பிரான்ஸ், நியூசிலாந்து, அவுஸ்ரேலியா, பெல்ஜியம் போன்ற நாடுகளின் பொறுப்பாண்மையின் கீழ் விடப்பட்டன.
- ஜேர்மனி ஆயுதங்களை உற்பத்தி செய்ய, படைகளை வைத்திருப்பதற்குக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன.
- ஜேர்மனியின் படை எண்ணிக்கை ஒரு இலட்சமாக குறைக்கப்பட்டதோடு, கட்டாய இராணுவ சேவையும் தடுக்கப்பட்டது.
- கடற்படைப் பலம் குறைக்கப்பட்டது.

- யுத்தக் கப்பல்கள், மற்றும் நீர்மூழ்கிகள் தயாரிப்பதற்கு முற்றாகத் தடை செய்யப்பட்டன.
- டன்சிக் துறைமுகம் சுதந்திர துறைமுகமாக்கப்பட்டது. அதனை அடைவதற்கு அமைக்கப்பட்ட போலந்து இடைவழி மூலம் ஜேர்மனி இரு துண்டுகளாக்கப்பட்டது.
- யுத்த நஷ்ட ஈடாக 33மில்லியன் டொலரை பணத்தை செலுத்த வேண்டுமென நிர்ப்பந்திக்கப்பட்டது.

## 8. முதலாம் உலகப் போரின் விளைவுகள்

i) விஞ்ஞான தொழில்நுட்ப ரீதியிலான தாக்குதல்கள் மூன்று வழிகளிலும் (வான், தரை, கடல்) கடுமையாக மேற்கொள்ளப்பட்டது. இதனால் கிராமங்கள், பயிர்செய்கை நிலங்கள், கைத்தொழிற்சாலைகள், நகரங்கள், தொடர்பாடல்துறை என்பவற்றில் பாரிய அழிவுகள் ஏற்பட்டன.

ii) ஐக்கிய அமெரிக்கா சர்வதேச வல்லரசாக மாறுவதற்கான நிலைமை தோன்றியது. பெருந்தொகையான பணத்தை சம்பாதித்துக் கொண்டது.

iii) புதிய அரசுகள் தோன்றின. ஜேர்மனி, ஆஸ்திரியா, ஹங்கேரி, துருக்கி முதலிய வல்லரசுகள் பலவீனமடைய பின்லாந்து, போலந்து செக்கோசில்வாக்கியா, ருமேனியா, யூகோசிலவாக்கியா போன்ற புதிய சுதந்திர நாடுகள் தோன்றின.

iv) சோவியத் ரஷ்யா எனும் சமூகவுடைமை அரசு தோற்றம் பெற்றது. யுத்தத்தில் ரஷ்யா தோல்வியடைந்ததால் சார் மன்னனுக்கு எதிராக 1917ல் பொல்ஷ்விக் புரட்சி இடம்பெற்றது. இதனால் மன்னன் சிம்மாசனத்தை துறந்தார்.

v) பழைய நகரங்கள் சிலவற்றின் பெயர்கள் மாற்றமடைந்தன
உ-ம்: மொசபொத்தேமியா - ஈராக்
கொன்ஸ்தாந்துநோபின் - ஸ்தான்புல்



முதலாம் உலகப் போரின் பின் ஐரோப்பா

vi) சர்வதேச சங்கம் 1920ல் அமைக்கப்பட்டது. உலக சமாதானம், ஜனநாயகம் என்பவற்றைப் பாதுகாப்பதற்காக சர்வதேச சங்கம் உருவாக்கப்பட்டது.

## 9. சர்வதேச சங்கம்

i) ஐக்கிய அமெரிக்க ஜனாதிபதி வூட்றோவில்சனின் 14 அம்சத்திட்டத் தின்படி எதிர்காலத்தில் யுத்த அழிவுகளிலிருந்து உலக சமாதானத் தைப் பாதுகாப்பதற்காக 1920ல் சர்வதேச சங்கம் அமைக்கப்பட்டது.

ii) சர்வதேச சங்கத்தின் நோக்கங்கள்

- நாடுகளுக்கிடையில் தோன்றும் பிரச்சினைகளைப் பேச்சுவார்த்தை மூலம் தீர்த்துக்கொள்ளல்.
- பொருளாதாரத் தடைகளை விதிப்பதன் மூலம் ஆக்கிரமிப்புக் களைத் தடுப்பதற்கு நடவடிக்கை எடுத்தல்.
- மனித இனத்தின் சமாதான வாழ்க்கைக்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளல்
- சர்வதேச ஒத்துழைப்பையும், புரிந்துணர்வையும் மேம்படுத்தல்.
- சிறிய நாடுகளின் சுதந்திரம், சுயாதீனம் என்பவற்றைப் பாதுகாத்தல்
- படைப்பலக் குறைப்பபை அமுல் செய்தல், பாதுகாப்பிற்கு மட்டுமே படைகளை வைத்திருத்தல்.

## 10. சர்வதேச சங்கம் உலக சமாதானத்துக்காக மேற்கொண்ட முயற்சிகள்

i) **அரசியல் ரீதியில் மேற்கொண்ட முயற்சிகள் ஆரம்பத்தில் பல வெற்றிகளைக் கண்டது.**

- சங்கம் உருவாகி 20 வருட காலம் போர்நிகழாமல் சமாதானம் பேணப்பட்டது.
- 1921ல் சுவீடன், பின்லாந்து, அலன்ட்தீவு பிரச்சனையைத் தீர்த்தது.
- 1921ல் யூகோஸ்லாவியா அல்பேனியாவை ஆக்கிரமித்ததைத் தடுத்தது.
- 1921ல் ஜேர்மனிக்கும் போலந்துக்குமிடையில் ஏற்பட்ட முரண் பாட்டைத் தீர்த்தது.
- 1925ல் கிரீசுக்கும் பல்கேரியாவிற்கும் இடையிலான பிரச்சினை யைத் தீர்த்தது.
- 1926ல் மொசூல் எண்ணெய் வயலுக்காக ஈராக் - துருக்கியிடையே ஏற்பட்ட எல்லைப்பிரச்சினையைத் தீர்த்தது.
- கிரீசுக்கும் இத்தாலிக்குமிடையே தோன்றிய அபிப்பிராய பேதங் களை தீர்ப்பதில் இடைத்தரகராக செயற்பட்டமை.
- நம்பிக்கை பொறுப்பின் கீழிருந்த குடியேற்ற நாடுகளின் நிர்வாக நடவடிக்கைகளை திறமையாக செயற்படுத்தியது.
- சர்வதேச நீதிமன்றம் 60க்கும் மேலான தீர்வுகளையும் அபிப்பிரா யங்களை வழங்கியது.

ii) **சமூக பொருளாதார ரீதியில் பல உதவிகளை ஆற்றியுள்ளது.**

- ஆஸ்திரியா, ஹங்கேரி, கிரிஸ் முதலிய நாடுகளுக்குப் பொருளாதார உதவிகளை வழங்கியதுடன் அகதிகளுக்கும் புனர்வாழ்வளிக்கப்பட்டது.
- போரின் பின்னர் பரவிய தொற்று நோய்களை ஒழிக்க முயற்சித்தது.
- குழந்தைகளை வேலைக்கமர்த்தல், போதைவஸ்து வியாபாரம் ஆகியவற்றை தடைப்படுத்தியது.
- சர்வதேச தொடர்புகளை விருத்தி செய்தது.

**11. சர்வதேச சங்கம் தோல்வியடைந்தமைக்குரிய காரணிகள்**

i) சர்வதேச சங்கத்தின் உருவாக்கத்தில் முன்னின்று செயற்பட்டதும் முதலாம் உலகப்போரின் பின்னர் வல்லரசாகவும் உருவான ஐக்கிய அமெரிக்கா இச்சங்கத்தில் அங்கத்துவம் பெறாது ஆரம்பத்திலேயே விலகியது.

ii) உலகப்போரில் குற்றவாளியாக காணப்பட்ட ஜேர்மனிக்கும், புரட்சிக் கருத்துக்களைக் கொண்ட ரஷ்யாவுக்கும் சங்கத்தில் அனுமதி மறுக்கப்பட்டமை.

iii) அங்கத்துவ நாடுகள் ஆக்கிர மிப்பு நடவடிக்கைகளில் ஈடுபட்ட போது அதனை தடுப்பதற்கான படை இல்லாமை.
உ-ம்:
1) இத்தாலி அபிசீனியாவை (எத்தியோப்பியா) ஆக்கிரமித்தமை
2) ஜப்பான் மஞ்சூரியாவை ஆக்கிரமித்தமை
3)ஆஸ்திரியா செக்கேசிலாவாக்கியாவை ஆக்கிரமித்தமை.

iv) உலக வல்லரசுகளின் தலைவர்கள் மத்தியில் ஒற்றுமை காணப்படாமையும் சங்கத்தின் பாதுகாப்புக்கான அச்சுறுத்தலாக அமைந்தது.

v) உலக சமாதானத்தைப் பாதுகாபபதே நோக்கமாக இருந்தாலும் அடுத்த வரின் நலனுக்காக தவது நேரத்தையும் பணத்தையும் செலவிடுவதை அங்கத்துவ நாடுகள் விரும்பாமை.

vi) சங்கத்தின் நோக்கங்கள் நிறைவேற்றப்படாமை. பாதுகாப்புக்கு மட்டுமே படைகளை வைத்திருத்தல் என சத்தியப் பிரமாணம் செய்யப்பட்ட போதிலும் அது அவ்வாறு நடைமுறைப்படுத்தப்படவில்லை.


முசோலினியும் ஹிட்லரும்

## பாஸிச வாதம், நாஸிச வாதம் என்பவற்றின் எழுச்சி

**12. பாஸிசவாதம், நாஸிசவாதம்: அறிமுகம்**

i) கட்டளையிடும் நிர்வாக முறையான சர்வதிகார ஆட்சியின் இரு வடிவங்களே பாஸிச வாதம், நாஸிசவாதம் ஆகும்.

ii) இரு உலக மகா யுத்தங்களுக்கிடையில் ஐரோபிய நாடுகள் சிலவற்றில் பரவிய அரசியல் எண்ணக் கருக்களாக இவற்றைக் கருதலாம்.

iii) ஜனநாயகம், லிபரல்வாதம் (தாராண்மை வாதம்), கொமியூனிசம் (பொதுவுடைமை வாதம்) முதலிய அரசியல்கொள்கைகளுக்கு எதிராக எழுந்த வாதங்களாக பாஸிச, நாஸிச வாதங்கள் காணப் படுகின்றன.

iv) முதலாம் உலகப் போரின் பின்னர் இத்தாலியில் **''பெனிடோ முசோலினியால்''** பாஸிச வாதமும், ஜேர்மனியில் **"அடோல்ப் ஹிட்லரால்'** நாசிசவாதமும் அளவற்ற கட்டளைகளைப் பிறப்பிக்கும் சர்வாதி காரமாக வளர்ச்சியடைந்தது.

**13. இத்தாலியின் பாஸிச வாதம்: முக்கிய அம்சங்கள்**

i) இத்தாலியில் பாஸிச சிந்தனையை முன்வைத்தவர் முசோலினி ஆவர்.

ii) "கோட்பாடுகளோ, தத்துவங்களோ, பேச்சோ அல்லாமல் கட்டுப்பாடு களுடன் கூடிய செயற்பாடு மட்டுமே தேவை'' என்பதுதான் பாஸிச வாதம் என்ற சிந்தனையின் முக்கியத்துவமாகும்.

iii) முதலாம் உலக மகாயுத்தத்தின் பின்னர் இத்தாலி பொருளாதார நெருக்கடிக்குள் (தொழிலாளர் கிளர்ச்சி, வேலை நிறுத்தங்களால் உற்பத்தி தடைப்பட்டது) இருந்த வேளை முசோலினி இத்தாலியின் ஆட்சியாளன் ஆனான்.

iv) ஜனநாயகவாதிகளையும், தாராண்மை வாதிகளையும், சமவுடமை யாளர்களையும் கடுமையாக எதிர்த்த முசோலினி 1921ல் பாஸிஸ்ட் கட்சியை ஓர் இனவாத கட்சியாக ஆரம்பித்தான்.

v) பேச்சு வன்மையாலும் எழுத்தாற்றலாலும், கொமியுனிசத்தை விமர் சித்த முசோலினி தனது கட்சிக்கு நிலச் சொந்தக்காரர், தொழிலதிபர்கள், வேலையற்ற இளைஞர்கள் என ஆதரவாளர்களைத் திரட்டினான்.

vi) 1921ல் நடைபெற்ற தேர்தலில் பாஸிஸ்ட் கட்சி பல வாக்குறுதிகளை (வேலையில்லாப் பிரச்சனையை தீர்த்தல், சேவை நலனை மேம் படுத்தல், நிலமில்லா விவசாயிகளுக்கு நிலம் வழங்குதல், தனியார் சொத்துக்களை பாதுகாத்தல்) வழங்கி போட்டியிட்டபோதிலும் ஆட்சி யதிகாரத்தை கைப்பற்ற முடியவில்லை.

vii) 1922ல் முசோலினியின் "கறுப்புச் சட்டைப் படையினர்" இத்தாலியின் தலை நகரை பிடிக்க திரண்டு சென்ற போது வேறு வழியின்றி இத்தாலிய மன்னன் "3ம் விக்டர் இமானுவேல்'' அரசாங்கத்தை கலைத்துவிட்டு முசோலினியை முதலமைச்சராக பதவியேற்குமாறு அழைத்தான்.

viii) பாஸிச அடிப்படைக் கொள்கைகளை படிப்படியாக நிலைநாட்டிய முசோலினி 1929ல் நடைபெற்ற தேர்தலில் ஆட்சி அதிகாரத்தை

முழுமையாக வென்று தனக்கெதிரான அனைத்து சக்திகளையும் ஒழித்தான்.

ix) முசோலினி பாப்பரசருடன் 1929ல் செய்து கொண்ட "லாத்தரன் உடன்படிக்கை" மூலம் மக்களதும், பாப்பரசரதும் ஆதரவையும் நம்பிக்கையையும் பெற்றுக் கொண்டான்.

x) 1870ல் ரோம் நகரை பாப்பரசரிடமிருந்து பெற்றுக்கொண்டதுடன் வத்திக்கானின் நிர்வாகியாக பாப்பரசரும் அங்கீகரிக்கப்பட்டார்.

**14. இத்தாலியில் சர்வாதிகார ஆட்சியை ஏற்படுத்த முசோலினி மேற்கொண்ட நடவடிக்கைகள்**

i) பாஸிச அடிப்படைக் கொள்கைகளை படிப்படியாக நிலைநாட்டியமை.
- அரசையும், ஆட்சியாளனையும் ஆண்டவனாக மதித்தல்.
- அரசுக்குள்ள சர்வாதிகார பலம், அடிப்படை உரிமைகளை நிராகரித்தல்
- பிரஜைகளுக்குள்ள பொறுப்புக்களை கவனமாக நிறைவேற்றல்
- அரசுக்கும், ஆட்சியாளனுக்கும் சார்பாக நடந்து கொள்ளல்

ii) அரச பதவிகளை தனக்கு சார்பானவர்களுக்கு வழங்கி தன்னை எதிர்த்தவர்கள் மீது அடக்கு முறையைக் கையாண்டமை

iii) பத்திரிகை சுதந்திரத்தைப் பறித்தமை

iv) வாக்காளர்களை கறுப்புச் சட்டை படையினர் மூலம் பலவந்தப் படுத்தியமை.

**15. பொருளாதார ரீதியில் நாட்டை வலுப்படுத்த முசோலினி மேற்கொண்ட நடவடிக்கைகள்**

i) அரசாங்க செலவை குறைத்தல். மேலதிக உத்தியோகத்தரை நீக்குதல்

ii) செல்வந்தரிடம் அதிக வரி அறவிடுதல்

iii) வேலைநிறுத்தம், தொழிற்சங்க நடவடிக்கைகளுக்கு தடை விதித்தல்

iv) தொழிற்சாலைகளின் உற்பத்தியை அதிகரித்தல்

v) தொழிற்சாலை வேலை நேரத்தை 8 மணித்தியாலமாக மாற்றுதல்

vi) தொழிலாளர்களின் ஆயுள் காப்புறுதிக்காக நிதியமொன்றை ஆரம்பித்தல்

vii) வேலை வாய்ப்புக்களை உருவாக்குதல்

viii) உல்லாச பயணத்துறையை மேம்படுத்தல்

xi) விவசாய உற்பத்திகளை அதிகரித்தல். இதற்கு விவசாயிகளுக்கு இயந்திர கலப்பையை வழங்கினார்.
- பொருளாதார நிலை ஓரளவுக்கு முன்னேறியபோதிலும் 1929ல் ஏற்பட்ட உலகப் பொருளாதார பெருமந்தநிலை காரணமாக தோல்வியில் முடிவடைந்தது.

### 16. யுத்த ரீதியில் இத்தாலியை வலுப்படுத்த முசோலினி எடுத்த நடவடிக்கைகள்

i) பாஸிச வாதம், இனவாதம், போர் என்பன உயர்வாகக் கருதப்பட்டது.

ii) இளைஞர்களுக்கு யுத்த சேவை கட்டாயமாக்கப் பட்டது.

iii) எத்தியோப்பியாவைத் (அபிசீனியா) தாக்கி இத்தாலியுடன் இணைத்து கொள்ளப்பட்டது.

iv) ஜெனரல் பிரான்சிஸ்கோவின் அழைப்பின் பேரில் இத்தாலி யில் படையொன்றை ஸ்பானியா வுக்கு அனுப்பியமை

v) ஜேர்மனி (ஹிட்லரின் உதவி யுடன்), ஜப்பான் அணியுடன் சேர்ந்து இராண்டாம் உலக மகா யுத்தத்தில் ஈடுபட்டமை.

### 17. முசோலினி கொலை செய்யப்படல்

i) ஹிட்லரும், முசோலினியும் ஓரணியில் நின்று நேச நாடுகளை எதிர்த்து போரில் பல வெற்றிகளை பெற்றபோதிலும் பின்னைய காலங்களில் தோல்வியடைந்து கொண்டனர்.

ii) இத்தாலி போரில் தோல்வியடைந்தமையால் தனது குடியேற்ற நாடுகள் அனைத்தையும் சிசிலித் தீவையும் இழந்து கொண்டது.

iii) இதனால் பாஸிசவாதிகள் தமது தலைவன்மீது கோபம் கொண்டு பாஸிஸ்ட் கட்சியிலிருந்து முசோலினியை விலக்கியதுடன் வீட்டுக் காவலில் வைத்தனர்.

iv) ஹிட்லரின் உதவியுடன் வட இத்தாலியில் தனது அதிகாரத்தை மேற்கொண்டபோதிலும் "இத்தாலி விடுதலை இயக்கம்" என்ற புரட்சிகர இயக்கத்தின் செயற்பாட்டால் சுவிட்சர்லாந்துக்கு தப்பியோட முற்பட்டார்.

v) ஆனால் வழியிலேயே கைது செய்யப்பட்ட முசோலினி 1945ல் மிலான் நகரில் வைத்து கொலை செய்யப்பட்டான்.

## ஜேர்மனியில் நாசிச வாதம்

### 18. வைமர் கூட்டாட்சி : முக்கிய அம்சங்கள்

i) முதலாம் உலகப் போரில் ஜேர்மனி தோல்வியடைந்த பின்னர் (வர்சேல்ஸ் ஒப்பந்தத்தின் பின்னர்) வைமர் கூட்டாசி முறை அறிமுகப்படுத்தப்பட்டு 14 வருடங்கள் செயற்படுத்தப்பட்டது.

ii) வைமர் கூட்டாட்சி காலத்தில் ஜேர்மனி எதிர் நோக்கிய பிரச்சினைகள்

- பொருளாதார மந்த நிலை
- வேலையின்மை
- உணவுப் பற்றாக்குறை
- அரசியல் ரீதியில் நிரந்தர அரசை உருவாக்க முடியாதிருந்தமை.
- அரசியல் உறுதியற்ற தன்மை
- நட்பு நாடுகளுக்கு நஷ்டஈடு செலுத்த வேண்டிருந்தமை

**19. நாஸிச வாதம் - ஜேர்மனி**



i) ஜேர்மனியில் நாஸிச சிந்தனையை முன்வைத்தவர் ஹிட்லர் ஆவர்.

ii) முதலாம் உலகப்போரினால் மதிப் பிழந்த ஜேர்மனிக்கு நிவாரணமாக நாஸிசம் அமைந்தது.

iii) நாஸிசத்தின் குறிக்கோள் என்ன என் பதை ஹிட்லர் பின்வருமாறு கூறினார். "ஜேர்மனியர்கள் தங்களைக் காத்துக் கொள்ள வேண்டிய தேசிய உணர்வை மீட்பதும், ஜேர்மனி பேரரசை அமைப் பதற்கான வலுச் சண்டையை மீண்டும் துடங்குவது என்றும், இவற்றை அடைப்பதற்குரிய வழி என்னவெனில், மக்களை நாட்டின் உடைமை யாக்குதலே ஆகும்."

iv) தனது இயக்கத்தை "தேசிய சமவுடமைக் கட்சி" என அழைத்த ஹிட்லர் தேர்தலில் ஏற்பட்ட தோல்வியின் பின்னர் "நாஸிகட்சி" என்று மாற்றி நாடு முழுவதும் தீவிர வாதத்தில் ஈடுபட்டார்.

v) நாஸிச வாதத்தின் முக்கிய பண்புகள்

- கட்டளையிடும் நிர்வாகமாக இருந்தமை
- ஜனநாயகம், கொமியூனிசம், முதலாளித் துவம் முதலியனவற்றுக்கு எதிரான கொள்கையை கொண்டிருந்தமை.
- யூதர்களை எதிர்ப்பது விசேட பண்பாக இருந்தமை.
- எதிரிகளை அழித்தல், இரகசிய இராணுவம் மூலம் தரவு திரட்டல், சதிப்புரட்சி என்பன நாஸிசத்துள் அடங்கியிருந்தமை.
- ஆட்சித் தலைவன் தேசியத்தின் ஆன்மீகத்தின் அடையாளம், தலைவன் எல்லையற்ற அதிகாரமுடையவன், பொருளாதாரத்தை அரசின் கடுமையான நிர்வாகத்துள் கொண்டுவருதல் என்பன நாஸிசத்தின் அடிப்படைகளாகும்.
- ஜேர்மனியர்கள் உலகிலே உயர்ந்த மனித இனமாக கலப்பற்ற தூய ஆரியர்களின் வழித்தோன்றல்கள் என கருதியமை.

**20. ஹிட்லரின் இளமைப்பருவம் பற்றிய தகவல்கள்**

i) வட ஆஸ்திரியாவிலுள்ள பிரானவ் என்ற ஊரில் 1889.04.20இல் பிறந்தவர் ஹிட்லர்.

ii) தந்தையின் பெயர் **அலாய்ஸ் ஷிக்கின் கிரப்பர் ஹிட்லர்** என்பதாகும். இவரது மூன்றாவது மனைவியின் நான்காவது மகனாக பிறந்தவரே ஹிட்லர்.

iii) 1903ல் தந்தையும், 1907ல் தாயும் இறக்க அநாதையான ஹிட்லர் நாளடைவில் முரட்டுத்தன்மை மிக்கவராக மாறினான்.

iv) காதல் தோல்வி காரணமாக 1914ல் ஜேர்மனிய இராணுவத்தில் சேர்ந்து முதலாம் போரின்போது நேச நாடுகளுக்கு எதிரான யுத்தத்தில் பங்குகொண்டார்.

v) முதலாம் உலகப்போரில் ஜேர்மனி தோற்றது ஜனநாயகவாதிகளும், யூதர்களும் தான் காரணம் என்று ஹிட்லர் கருதினார்.


யுத்த காலத்தில் ஹிட்லர்

**21. ஹிட்லர் ஜேர்மனியின் ஆட்சியை கைப்பற்றல்**

i) பேச்சு வன்மை மிக்க ஹிட்லர் தேசிய சோசலிஸ்ற் தொழிலாளர் கட்சியில் ஒரு உறுப்பினராக சேர்ந்து பின்னர் கட்சி தலைவரானார்.

ii) வறுமை, வேலையின்மை, உணவுப்பற்றாக்குறை போன்றவற்றை காரணமாக கொண்டு மக்களை அரசுக்கெதிராக தூண்டி ஆட்சியை கைப்பற்ற முயற்சித்தார்.

iii) இதனால் அரசாங்கம் கைது செய்து சிறையில் அடைத்தது அப்போது தான் "எனது போராட்டம்" என்ற உலகப் பிரசித்தி பெற்ற நூலை எழுதினார். அதில் நாஸிசவாதம் பற்றி விபரிக்கப்பட்டிருந்தது

iv) 1928ல் நடந்த தேர்தலில் தோல்வியடையவே தனது கட்சியின் பெயரை "நாஸி" என மாற்றியமைத்தான். இக்கட்சி மூலம் கபில நிறத்தில் சட்டயணிந்த ஒரு படைப்பிரிவையும், S S எனப்படும் ஒரு இரகசிய இராணுவத்தையும் கெஸ்டபோ எனப்படும் இரகசிய பொலிஸ் பிரிவையும் ஆரம்பித்தான்.


ஜேர்மனிய தேசிய கொடி


கபி நிற சட்டை அணிந்த படைப்பிரிவு



ஜேர்மனியப் படை வீரர்கள்

v) கட்சிக்கென நிலையான அலுவலகமொன்றை அமைத்துக் கொண்ட துடன் "த நெஷனல் ஒப்சவர்" (The National Observer) எனும் பெயரில் பத்திரிகை ஒன்றையும் ஆரம்பித்தார்.

vi) இந்தோ, ஐரோப்பிய ஆரிய இனங்கள் பற்றிய அபிப் பிராயத்தை உருவாக்கி முழு ஐரோப்பாவிலும் வாழும் ஜேர்மனியர்களை ஒன்று படுத்தும் நோக்கில் "சுவெஷ்டிகா" இலட்சினையுடன் கூடிய ஜேர்மனிய தேசிய கொடியை உருவாக்கினான்.

vii) "ரயிக்ஸ்டாக்" எனப்படும் யாப்பு சபையின் (பாராளு மன்றம்) தேர்தலில் தோல்வியுற்றபோதிலும் ஹிட்லரின் இடைவிடாத உழைப்பும், பேச்சு வன்மையும் ராஜதந்திரமும் வெற்றிபெற்றன. வைமர் கூட்டாச்சிக்கு எதிராக மக்கள் கிளர்ந்தெழுந்து பெரும் போராட்டத்தில் ஈடுபட்டனர்.

viii) ஜனாதிபதியாக இருந்த "ஹிண்டன்பர்க்" மக்கள் போராட்டத்திற்கு அடிபணிந்து 1933ல் ஹிட்லருக்கு "சான்சலர்" (Chancellor) பதவி (பிரதமர்) வழங்கினார்.

ix) 1934ல் ஹிண்டன்பார்க் இறக்கவே ஜனாதிபதி பதவியையும் கைப்பற்றிக் கொண்டு ஜேர்மனியின் சர்வாதிகாரியாக ஹிட்லர் வந்தான்.

x) ரயிட்கக்ஸ்டாக் யாப்பு சபையை கலைத்தான். எதிரிகளை சிறையில் அடைத்தான். யூதர்களை அடியோடு அழிக்க வேண்டும் எனக் கருதி சுமார் 50 லட்சம் யூதர்களை கொலை செய்தான்.

xi) உலகத்தையே தன் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவர நேரம் நெருங்கி விட்டதாக ஹிட்லர் கருதினார். 1939ல் அல்பேனியா, செக்கோசுலோ வாக்கியா நாடுகளைக் கைப்பற்றிக்கொண்டு போலந்து நாட்டின்மீது படையெடுத்தான். இதனால் இரண்டாம் உலகமாக யுத்தம் மூண்டது.

## 22. ஜேர்மனியில் சர்வாதிகாரம் தோன்றுவதற்கு வழிவகுத்த காரணங்கள்

i) ஹிட்லர் அதிகாரம் பெற்றமை:- 1933ல் ஜேர்மனியின் சான்ஸலர் பதவியை பெற்றுக்கொண்ட ஹிட்லர் ஜனாதிபதியின் இறப்பின் பின்னர் அப்பதவியையும் பெற்றமை.

ii) பலம்வாய்ந்த ஜேர்மன் பேரரசைக் கட்டியெழுப்புவதே ஹிட்லரின் நோக்காக இருந்தது. இதற்காக விவசாயம், கைத்தொழில் என்பவற்றை அபிவிருத்தி செய்ததுடன் போக்குவரத்து நடவடிக்கைகளும் முன்னேறியமை.

iii) 1935ல் கட்டாய இராணுவ சேவையைப் பிறப்பித்து இராணுவத்தை வலிமையாக்கியமை. யுத்ததாங்கி, துப்பாக்கி, விமானம் முதலியவற்றை தயாரிப்பதில் ஈடுபட்டமை.

iv) நாட்டின் எல்லையை விஸ்தரிப்பதில் ஹிட்லர் ஆர்வம் கொண்டிருந்தமை.

உ+ம்: 1934ல் போலந்துடன் ஹிட்லர் உடன்படிக்கை மேற்கொள்ளல். வர்சேர்ல்ஸ் உடன்படிக்கையால் இழந்த ரயின்லாந்தை மீண்டும் கைப்பற்றிக் கொண்டமை.
வர்சேர்ல்ஸ் உடன்படிக்கையால் பிரிந்திருந்த ஆஸ்தியாவை மீண்டும் ஜேர்மனியுடன் இணைத்துக்கொண்டமை (1938)

## இரண்டாம் உலக மகா யுத்தம்

### 23. இரண்டாம் உலக மகாயுத்தம் : முக்கிய அம்சங்கள்

i) 1939 செப்ரெம்பர் தொடக்கம் 1945 ஆகஸ்ட் வரை உலகம் முழுவதும் இடம்பெற்ற யுத்தமே இரண்டாம் உலக மகாயுத்தம் ஆகும்.

ii) ஜப்பான் 1941ல் அமெரிக்க படையை தாக்கியதால் அமெரிக்காவும் யுத்தத்தில் ஈடுபட்டதோடு ஐரோப்பாவினுள் இடம்பெற்ற யுத்தம் உலகப் போராக மாறியது.

iii) போருக்கான காரணிகள்
- ஹிட்லரின் எழுச்சியும் ஆக்கிரமிப்பும்
- இத்தாலியில் முசோலினியின் எழுச்சி
- ஜப்பானின் ஆக்கிரமிப்புக்கொள்கை
- சர்வதேச சங்கத்தின் தோல்வி
- உடனடிக் காரணம் : ஹிட்லர் போலந்தை ஆக்கிரமித்தமை.

### 24. இரண்டாம் உலக மகாயுத்தத்திற்கான காரணங்கள்

i) **ஹிட்லர் ஆட்சியில் ஜேர்மனி வலிமை பெற்றிருந்தமை.**

- ஹிட்லர் தந்திரமுள்ள அரசியல்வாதியாகவும், நாவன்மை உள்ள பேச்சாளனாகவும் திகழ்ந்தமையால் ஜேர்மன் மக்களிடத்தே தேசப்பற்றை தூண்டி விட்டான்.
- வர்சேல்ஸ் உடன்படிக்கையினால் தாம் அவமானப்படுத்தப்பட்டதாகவும், அநீதிக்கு உட்படுத்தப்பட்டதாகவும் ஒவ்வொரு ஜேர்மனியினரையும் உணரச்செய்தான்.
- ஹிட்லரின் செயற்பாடுகள்
  1) 1933ல் சர்வதேச சங்கத்திலிருந்து ஜேர்மனியின் உறுப்புரிமையை நீக்கியமை
  2) 1936ல் ரயின்லாந்தைக் கைப்பற்றியமை
  3) 1939ல் செக்கோஸ்லேவேக்கியாவை ஆக்கிரமித்தமை.

- **உடனடிக்காரணம்**

  1939.09.01ல் போலந்து மீது ஹிட்லர் தாக்குதலை மேற்கொண்டமை. இதனால் போலந்தை பாதுகாப்பதற்கு ஒப்பந்தம் செய்திருந்த பிரித்தானியாவும், பிரான்சும் ஜேர்மனிக்கு எதிராக போர்ப் பிரகடனம் செய்தன.

ii) **இத்தாலியில் முசோலினியின் செயற்பாடு:**
முதலாம் உலகப்போரில் வெற்றியடைந்த அணியில் இத்தாலி இருந்த போதிலும் எதிர்பார்த்த பிரதேசங்களை பெற்றுக்கொள்ள முடியவில்லை. அரசியல், பொருளாதார, சமூக ஸ்திரமின்மையால் பாஸிசக் கொள்கைகளும் பேரரசாக இத்தாலியை எழுச்சியடையச் செய்ய வேண்டுமென்ற முசோலினியின் ஆசையும் யுத்தத்திற்கு வழிவகுத்தது.

iii) **ஜப்பானின் ஆக்கிரமிப்புக் கொள்கை:**
கைத்தொழில் வளர்ச்சியினால் சந்தைகளைப் பெறவும் ஆசியாவில் ஒரு பேரரசாக வளர வேண்டும் என்ற ஆசை ஜப்பானுக்கிருந்தது. இதனால் 1934ல் வட சீனாவின் மஞ்சூரியாவைக் கைப்பற்றிக் கொண்டதோடு சீனாவின் துறைமுகங்கள், நகரங்கள் சிலவற்றையும் கைப்பற்றிக் கொண்டது.

iv) **அச்சு கூட்டணி உருவாகியமை:**
உலகிலே பலம் வாய்ந்த நாடுகளாக உருவெடுத்த ஜேர்மன், இத்தாலி, ஜப்பான் 1937ல் கூட்டணியை உருவாக்கின. இது பேர்லின் -ரோம் - டோக்கியொ அச்சு எனப்பட்டது. இம்மூன்று நாடுகளும் தமது யுத்த சக்தியை அதிகரித்துக் கொண்டமை.

v) **சர்வதேச சங்கத்தின் தோல்வி:**
உலக வல்லரசுகள் சங்கத்திலிருந்து விலகியமை, தொடர்ந்த ஆக்கிரமிப்புகள், உலக அமைதிக்கான ஆபத்தை வெளிப்படுத்தின. 1940ல் பிரித்தானியாவும், பிரான்சும் மட்டுமே வல்லரசுகளில் அங்கத்துவம் பெற்றிருந்தது. ஐரோப்பிய நாடுகள் தமது பாதுகாப்புக் கருதி குழுக்களாக கூட்டணி சேர்ந்தமை.

## 25. மி!னிக் மாநாடு

i) ஜேர்மன் - சுடேட்டன் பிரச்சினைக்கு தீர்வு காணும் நோக்கில் 1938ல் கூட்டப்பட்ட மாநாடு "மியூனிக் மாநாடு" ஆகும்.

ii) பிரித்தானியா, இத்தாலி, பிரான்ஸ், ஜேர்மனி ஆகிய நாடுகள் பங்கேற்றன.

iii) மாநாட்டு முடிவின்படி சுடேட்டின்லாந்தின் ஒரு பகுதியை ஜேர்மனிக்குப் பெற்றுக் கொடுக்க இணக்கம் காணப்பட்டது.

iv) 1939ல் மியூனிக் உடன்படிக்கையை மீறி ஜேர்மனி செக்கோஸ்லேவேக்கியாவை ஆக்கிரமித்துக் கொண்டது.

## 26. இரண்டாம் உலகப்போரில் பங்குகொண்ட அணியினர்

i) **நேச நாடுகள் - தலைவர்கள்**
- பிரித்தானியா (வின்ரைன் சேர்ச்சில்)
- பிரான்ஸ் (ரார்ள்பி. கோல்ட்)

- ஐக்கிய அமெரிக்கா (பிராங்கிலின் டெலனோ ரூஸ்வெல்ட்),
- ரஷ்யா (ஜோசப் ஸ்ராலின்)

ii) **அச்சுநாடுகள் - தலைவர்கள்**
- ஜேர்மன் (ஹிட்லர்)
- இத்தாலி (முசோலினி)
- ஜப்பான் (ஹிதோஹித்தோ)
- பல்கேரியா, ருமேனியா (பின்னர் இணைந்து கொண்டது)



இரண்டாம் உலக மகாயுத்தத்திற்கு அண்மிய காலத்தில் ஐரோப்பா

## 27. இரண்டாம் உலகப்போரில் நாடுகளின் பங்களிப்பு

i) 1939ல் ஜேர்மனி போலந்தை கைப்பற்றிய போது பிரித்தானியாவும், பிரான்சும் ஜேர்மனிக்கு எதிராக போர்ப்பிரகடனம் செய்தது.

ii) ஜேர்மனி ரஷ்யாவுடன் மேற்கொண்ட உடன்படிக்கையின் கீழ் போலந்தின் கிழக்குப் பகுதியை ரஷ்யாவிடம் கையளித்தது.

iii) பின்னர் ரஷ்யா எஸ்தோனியா, லித்வியா, லித்துவேனியா போன்ற பால்டிக் நாடுகளையும் கைப்பற்றிக் கொண்டு பின்லாந்தையும் கைப்பற்றி தனது எல்லையை விரிவுபடுத்தியது.

iv) 1940ல் ஜேர்மனி பிரான்ஸ்மீது படையெடுத்தது. இதற்கு இத்தாலியும் ஜேர்மனிக்கு உதவியாக போருக்கு வந்தது. இதனால் பிரான்ஸ் ஜேர்மனியுடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டதோடு ஜேர்மனியின் குடியேற்ற நாடாகியது.




ஜேர்மனியப் படையினர் ஆக்கிரமிப்பு நடவடிக்கைகளில் ஈடுபடல்

v) பிரான்ஸ் ஜேர்மனியினர் வசமாகியமை பிரித்தானியாவுக்கு ஆபத்து எனக்கருதிய பிரித்தானிய பிரதமர் **"வின்சன்ட் சேர்ச்சில்"** மக்களை நாஸிசவாதத்துக்கு எதிராக அணிதிரட்டினார்.

vi) ஹிட்லரின் அடுத்த இலக்காக இருந்த பிரித்தானியாவின்மீது போர் தொடுத்தபோது அமெரிக்க ஜனாதிபதி ரூஸவெல்ட்டுடன் தொடர்பு கொண்ட பிரித்தானிய பிரதமர் ஆயுத உதவியைப் பெற்றதோடு தனது குடியேற்ற நாடுகளையும் (அவுஸ்ரேலியா, கனடா, தென் ஆபிரிக்கா, இந்தியா, இலங்கை) சேர்த்துக்கொண்டு போரில் ஈடுபட்டது. இதனால் ஹிட்லரின் படைகள் இறுதியில் வெற்றிபெற முடியாது என புரிந்து கொண்டு போரிலிருந்து விலகியது.



அமெரிக்கா இராணுவ உதவிகளை வழங்குதல்

vii) 1941ல் எவ்வித முன்னறிவிப்புமின்றி ஜேர்மனி, ரஷ்யாமீது படையெடுத்தது. ஆனால் இறுதியில் தோல்வியையே சந்தித்தது.

viii) 1945ல் ஜேர்மனிக்குள் பிரித்தானியா, பிரான்ஸ், ஐக்கிய அமெரிக்கா, ரஷ்யா படைகள் பிரவேசித்தது. இதனால் ஹிட்லர் உட்பட அதிகாரிகள் தற்கொலை செய்து கொண்டனர்.





ஜேர்மன் சரணாகதி ஒப்பந்தத்தில் கையொப்ப மிடுதலும் ஆயுதங்களை ஒப்படைத்தலும்

ix) ஜேர்மனியும், இத்தாலியும் ஐரோப்பிய நாடுகளை வெற்றிகொள்ளும் வேளை ஜப்பானும் ஆசியாவில் ஒரு பேரரசை உருவாக்க திட்ட மிட்டது. இதனால் உலகில் அதிக குடியேற்றங்களை கொண்டிருந்த பிரித்தானியா, பிரான்ஸ் நாடுகளுக்கு எதிராக ஜப்பான் செயற்பட்டது. இதேவேளை ஜப்பானின் குடியேற்ற நடவடிக்கைகளுக்கு பேர்ள் துறைமுகத்திலிருந்த அமெரிக்கக் கடற்படை தடையாக இருந்ததால் 1941ல் நவம்பர் 07ல் ஜப்பான் பேர்ள் துறைமுகத்தை தாக்கியது.



ஜப்பான் போர்ள் துறைமுகத்தைத் தாக்கியமை

x) 1941 டிசம்பர் 08ல் ஐக்கிய அமெரிக்க ஜனாதிபதி பிராங்லின் ரூஸ்வெலட் ஜப்பானுக்கு எதிராகப் போர்ப்பிரகடனம் செய்தபோது ஜேர்மனியும், இத்தாலியும் ஜப்பானுக்கு உதவியாக அமெரிக்காவுக்கு எதிராக போர்ப் பிரகடனம் செய்தது.

xi) 1942ல் பிரித்தானியாவின் கிழக்குப் பாதுகாப்பு மையமான சிங்கப்பூரையும் கைப்பற்றிக்கொண்ட ஜப்பான் ஏனைய தென்கிழக்கு ஆசிய நாடுகளையும் கைப்பற்றிக்கொண்டது. அதேவேளை 1942 ஏப்ரல் 05ல் கொழும்பும், 07ல் திருகோணமலையும் ஜப்பானின் தாக்குதலுக்கு உள்ளானது.

xii) ஜப்பானை சரணடையுமாறு நேச நாடுகள் வேண்டுகோள் விடுத்த போது ஜப்பான் அதனை மறுக்கவே 1945ஆகஸ்ட் 06ல் ஹிரோசிமா

மீதும், 09ல் நாகசாகியா மீது அணுகுண்டை அமெரிக்கா வீசி இரு நகரங்களையும் அழித்தது.

xiii) ஜப்பானின் பேரழிவைக்கண்டு திகைப்படைந்த மன்னர் ஹிதோஹித்தோ நிபந்தனையின்றி 1945ல் சரணடைந்தார். ஜப்பான் கடலில் தரித்து நின்ற மிசவுரி என்ற அமெரிக்க போர்க்கப்பலில் நேச நாடுகளின் முன்னிலையில் ஜப்பானிய மன்னன் சார்பாக ஜப்பானிய வெளிவிவகாரத்துறை அமைச்சர் **மாமோரு சிகெமிசுவும்,** பிரதான படைத்தலைமையகத் தலைவன் **யெசிட்ஸிரோ உமேட்ஸ"வும்** நிபந்தனையற்ற சரணாகதி ஒப்பந்தத்தில் 1945 செப்ரெம்பர் 2இல் கையொப்பமிட்டதன் மூலம் இரண்டாம் உலகப்போரும் முடிவுக்கு வந்தது.



நேச நாடுகள் முன்னிலையில் யப்பான் தலைவர்கள் கொண்டு வரப்பட்டு நிறுத்தப்படல்.



அமெரிக்க ஐக்கியநாட்டு ஜெனரல் மெக்ஆதர் மேற்கொண்ட சுருக்கமான உரை (இரவு 9மணி 04 நிமிடம்)



ஜப்பானிய வெளிவிவகாரத்துறை அமைச்சர் மமோரு சிகெமீட்சு கையொப்பமிடுதல்



டோக்கியோ குறுங் குடாவில் தரித்து நின்ற அமெரிக்கப் போர்க்கப்பலான மிசவுரி

சரணாகதி ஒப்பந்தத்தில் கையொப்பமிட்ட நேசநாட்டுத் தலைவர்கள்

- ஜெனரல் மெய்க் ஆதர் - எல்லா நேசநாடுகளின் சார்பாக
- அட்மிரல் நிமிட்ஸ் - அமெரிக்க ஐக்கிய நாடு
- ஜெனரல் சு யூவ் சான் - சீனா
- அட்மிரல் ∴ பிரேய்ஸர் - பிரிட்டன்
- ஜெனரல் தெரெவியான்கோ- சோவியத் யூனியன்
- ஜெனரல் பிலைமி - அவுஸ்திரேலியா
- ஜெனரல் லெக்லேர்க் - பிரான்ஸ்
- லெப்டினன்ட் ஜெனரல் வான் ஓயன் - போலந்து
- வைஸ்மார்சல் இசிட் - நியூசிலாந்து



ஜப்பான்மீது அணுகுண்டு வீசக் காரணமான அமெரிக்க ஜனாதிபதி ஹரிஸ்ட்ரூமன்


அமெரிக்காவை வலுச் சண்டைக்கு இழுத்த ஜப்பான் பிரதமர் டோஜோ


ஜப்பானிய மன்னன் ஹீரோஹித்தோ

**28. ரஷ்யாமீது ஜேர்மனி படையெடுத்தல்**

i) **காரணங்கள்**
- யுக்ரேனின் தானிய விளைநிலங்களை கைப்பற்றுதல்
- கொகேசஸ் எல்லையிலுள்ள எண்ணெய் வயல்களை ஜேர்மனிக்கு உரிமையாக்குதல்.
- கொமியூனிசக் கொள்கையை இல்லாதொழித்தல்.

ii) **ஜேர்மனியின் தோல்விக்கான காரணங்கள்**
- ரஷ்யப்படையின் தந்திரோபாயங்கள்: கடும்குளிர் காலநிலை வரை ஜேர்மனியப் படைகளை அங்கு நிலைகொள்ளச் செய்தல்.
- கடும் குளிரால் தகவல் பரிமாற்றம் செயலிழந்தமை.
- பனி வீழ்ச்சி காரணமாக யுத்த தாங்கிகள் செயலிழந்தமை.
- குளிரால் போர் வீரர்கள் இறந்தமை.

**29. இரண்டாம் உலகப் போரில் ஐக்கிய அமெரிக்கா தலையிட்டமைக்கான காரணங்கள்**

i) ஜேர்மனியின் வெற்றியைத்தடுத்தல்
ii) ஜப்பான் பேர்ள் துறைமுகத்தை தாக்கியமை
iii) உலக வல்லரசாக எழுச்சியடைந்தமை.



ஹிரோசிமா, நாகசாகி நகரங்கள் மீது அனுகுண்டு விசிய யுத்த விமானம் B 29






முதல் அனுகுண்டு "Little Boy" கிரோசிமா நகரம் மீது வீசப்பட்டபோது




இரண்டாவது அனுகுண்டு "Fat man" நாகசாகி நகரம் மீது வீசப்பட்டபோது

## 30. இரண்டாம் உலக மகாயுத்தத்தின் விளைவுகள்

i) **அதிகளவிலான உயிர்சேதம் ஏற்பட்டது:** போரின் முடிவில் நாலுகோடி 50 இலட்சம் பேர்வரை கொல்லப்பட்டனர்.

ii) **தலைநகரங்கள் அழிந்தன:** பிரான்ஸ், இத்தாலி, ஜேர்மன் நாடுகளின் தலைநகரங்கள் அழிந்தது.

iii) **பிரித்தானியாவும் பிரான்சும் உலக வல்லரசு நிலையை இழந்தது:** பிரித்தானியா போரில் வெற்றிபெற்றாலும் சர்வதேச ரீதியாக அதன் அந்தஸ்து குறைந்தது. அதேபோல் பிரான்ஸ் ஜேர்மனியால் கைப்பற்றப்பட்ட போது பேரழிவுக்குள்ளானது.

iv) **ஐக்கிய அமெரிக்காவும், சோவியத் ரஷ்யாவும் உலக வல்லரசுகளாக எழுச்சியடைந்தன:** முதலாளித்துவ பொருளாதார நாடுகள் ஜனநாயக கொள்கை அடிப்படையில் அமெரிக்காவின் தலைமையின் கீழும், கொமியூனிசவாத நாடுகள் சோவியத் ரஷ்யாவின் தலைமையின் கீழும் செயற்பட்டன.

v) **ஜப்பானிய நகரங்கள் அழிக்கப்பட்டது:** அமெரிக்கா ஜப்பானின் ஹிரோசிமா, நாகசாகி முதலிய நகரங்கள் மீது அணுகுண்டு வீசி பெரும் அழிவை ஏற்படுத்தியது. இதனால் ஏற்பட்ட விளைவுகளை பிற்கால சந்ததியினரும் பார்க்கக்கூடியதாகயிருந்தமை.

vi) **ஜேர்மனி இரண்டாகப் பிரிந்தது:** கிழக்கு ஜேர்மனி, மேற்குஜேர்மனி என இரு அணிகளாக பிரிந்தது.

vii) **பல ஆசிய நாடுகள் சுதந்திரம் பெற்றன:** பிரித்தானியாவும், பிரான்சும் தமது குடியேற்ற நாடுகளுக்கு சுதந்திரம் வழங்கின.

viii) **ஐக்கிய நாடுகள் சபை உருவாக்கப்பட்டது:** உலக சமாதானத்துக்கும் நாடுகளின் அபிவிருத்திக்காகவும் ஐக்கிய நாடுகள் சபை உருவானது.

ix) **மார்ஷலின் திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது:** போரில் தோல்வியடைந்த, அழிவுக்குள்ளான நாடுகளுக்கு ஐக்கிய அமெரிக்கா உதவிசெய்ய முன்வந்தது. இதற்கு ஜோன் மார்ஷல் காரணமாக விளங்கினார்.

## ஐக்கிய நாடுகள் சபை (United Nations Organization)

## 31. Iff;p ehLfs ;rigapd; cUthf;fk;

i) உலக சமாதானம், பாதுகாப்பு மற்றும் அரசியல் பொருளாதார சமூக நிலையில் ஒத்துழைப்பிற்காக உலக நாடுகள் தமக்குள் ஏற்படுத்திக் கொண்ட அமைப்பே ஐக்கிய நாடுகள் சபை ஆகும்.

ii) 1943ல் டெஹ்ரான் நகரில் ஒன்று கூடிய பிரித்தானியப் பிரதமர் வின்சட் சேர்ச்சில், அமெரிக்க ஜனாதிபதி பிராங்கிளின் ரூஸ்வெல்ட் சோவியத் தலைவர் ஜோசப் ஸ்டாலின் எடுத்த தீர்மானத்தின் விளைவாக 1945ல் நடைபெற்ற சான்பிரான்சிஸ்கோ
மாநாடு ஐக்கிய நாடுகள் சபையின் உருவாக்கத்துக்கு அடிப்படையாக அமைந்தது.

iii) 1945 அக்டோபர் 24ம் திகதி முதல் ஐக்கிய நாடுகள் சபை செயற்படத் தொடங்கியது.

iv) இதில் 192 நாடுகள் அங்கத்துவம் வகிக்கின்றது. 2002ல் கிழக்குத் தீமோரும், 2006ல் மொண்டி நீக்ரோவும் இணைந்து கொண்டது.

v) இதன் தலைமையகம் நியூயோக்கில் உள்ளது.

32.



UNO வின் தலைமை அலுவலகம்



வின்சட் சேர்ச்சில், பிராங்லின் ருஸ்வெல்ட், ஜோசப் ஸ்ராலின்

i) உலக நாடுகளுக்கிடையே சமாதானத்தையும் அபிவிருத்தியையும் முன்னெடுத்தல்.
ii) நாடுகளிடையே நட்புறவை வளர்த்தல்
iii) பொருளாதார, சமூக, கலாசார பிணக்குகளுக்குத் தீர்வு காணுதல்
iv) அடிப்படை மனித உரிமைகளையும் சுதந்திரத்தையும் உறுதிப் படுத்துவதற்கு சர்வதேச ஒத்துழைப்பை பெற்றுக் கொள்ளல்.
v) வறுமையை உலகத்திலிருந்து அகற்றுதல்.

**33. ஐக்கிய நாடுகள் சபையின் கூறுகள்**

i) பொதுச்சபை
ii) பாதுகாப்புச்சபை
iii) பொருளாதார சமூக சபை
iv) நம்பிக்கை பொறுப்புச்சபை
v) சர்வதேச நீதிமன்றம்
vi) செயலகம்

**34. பொதுச்சபை (General Assembly)**

i) ஐக்கிய நாடுகள் சபையின் அனைத்து நாடுகளையும் இது பிரதி நிதித்துவப்படுத்தும். உறுப்பு நாடுகள் ஒவ்வொன்றும் தலா 05 பிரதிநிதிகளை இச்சபைக்கு அனுப்பும்.
ii) பொதுச்சபைக் கூட்டமானது ஒவ்வொரு வருடமும் செப்ரெம்பர் மாதம் ஆரம்பித்து டிசம்பர் மாதம் நடுப்பகுதிவரை நடைபெறும். இதில் சர்வதேச அடிப்படையில் இடம்பெறும் முக்கியமான விவாதத்திற்குரிய விடயங்களைக் கலந்துரையாடி முடிவுகளை சிபார்சு செய்வது வழக்கமாகும்.
iii) இச்சபையின் செயற்பாடுகளும் அதிகாரங்களும் வருமாறு:
- சமாதானத்தை பாதுகாத்தல்
- கல்வி, கலாசாரம், சமூகம், பொருளாதார பிரச்சினைக்கான ஆலோசனையை முன்வைத்தல்.
- ஐக்கிய நாடுகள் சபையின் ஆண்டு வரவு செலவுத்திட்டத்தினை கணக்கிடல்.
- பாதுகாப்புச்சபையின் சிபார்சின்படி செயலாளர் நாயகத்தை தெரிந் தெடுத்தல்.
- பாதுகாப்புச்சபையின் நிரந்தரமல்லா உறுப்பினர்களையும் பொருளா தார, சமூகசபை மற்றும் தர்மகர்த்தா குழு உறுப்பினர்களையும் தெரிவு செய்தல்.
- சர்வதேச நீதிமன்றத்தின் நீதிபதிகளைத் தெரிவுசெய்தல்.
- புதிய அங்கத்துவ நாடுகளைச் சேர்த்துக்கொள்ளுதல்


பொதுச்சபை


பாதுகாப்புச்சபை

## 35. பாதுகாப்புச்சபை (Security Council)

i) சர்வதேச சமாதானத்தையும் பாதுகாப்பையும்பேணும் முக்கிய பொறுப்பு பாதுகாப்புச் சபையிடம் உள்ளது.

ii) இதில் 15 நாடுகள் அங்கத்துவம் பெறும். சீனா, பிரான்ஸ், ரஷ்யா, ஐக்கிய இராச்சியம், ஐக்கிய அமெரிக்கா போன்றவை நிரந்தர உறுப்புரிமை கொண்ட நாடுகளாவதுடன் ஏனைய 10 நாடுகளும் இரண்டு வருடகால அங்கத்துவத்தைப் பெற்று தற்காலிக உறுப்புரிமை நாடுகளாயிருக்கும்.

iii) அங்கத்துவ நாடுகளுக்கு ஒரு வாக்குகளே உள்ளது. பொதுச்சபை போன்று கிரமமான கூட்டங்கள் நடைபெறுவதில்லை. தேவை ஏற்படும் போது மாத்திரம் சபை கூடும்.

iv) இச்சபையில் தீர்மானம் மேற்கொள்வதற்கு நிரந்தர உறுப்புரிமை நாடுகளும் ஏனைய நான்கு நாடுகளுமாக 09 நாடுகள் ஆதரவளித்து வாக்களிக்க வேண்டும்.

v) எவ்வாறாயினும் நிரந்தர உறுப்பு நாடுகளில் ஒன்று எதிர்த்து வாக்களித்தால் வீட்டோ VETO (இரத்துச் செய்யும் அதிகாரம்) செய்யப்பட்டதாகக்கருதி அத்தீர்மானம் நிராகரிக்கப்படும்.

vi) இச்சபையின் செயற்பாடுகளும் அதிகாரங்களும் வருமாறு:

- சர்வதேச சமாதானத்திற்கும், பாதுகாப்பிற்கும் பங்கம் விளைவிக் கக் கூடிய பிரச்சினைகளை ஆராய்ந்து தீர்ப்பதற்குரிய வழிவகை களை சிபார்சு செய்தல்.
- ஆக்கிரமிப்பு நாட்டிற்கு எதிராக ஆயுத பலத்தை பிரயோகித்தல்.
- ஆயுதங்களை நிர்வகித்தல் தொடர்பான ஒழுங்குமுறையினை திட்டமிடல்.)
- சர்வதேச அமைதிக்கும், பாதுகாப்பிற்குமான நடவடிக்கைகளை எடுத்தல் (பொருளாதார தடைகளை மேற்கொள்ளல், அமைதி காக்கும் படைகளை அனுப்பி சமாதானத்தை ஏற்படுத்தல், இறுதி யாக படைகளை அனுப்பி தீர்க்கமான முடிவுக்கு வருதல்

## 36. பொருளாதார சமூகசபை (Economic and Social Council)

i) "இக்கோசொக்" (Ecosoc) என அழைக்கப்படும் இச்சபை 54 நாடுகளை உறுப்பு நாடுகளாகக் கொண்டுள்ளது.

ii) இதில் 1/3 பகுதியினர் (18 நாடுகள்) பதவி விலக அதே தொகை யினர் பொதுக்சபையினால் நியமிக்கப்படுவர்.

iii) ஒவ்வொரு வருடமும் இரண்டு மாதக் கூடத்தொடர் நியூயோக்கிலும், ஜெனிவாவிலும் இடம்பெறும்.

iv) சர்வதேச ஒத்துழைப்பின் மூலம் மனித இனத்தின் பொருளாதார சமூக வளர்ச்சியை செய்தல் இச்சபையின் முக்கியமான குறிக் கோளாகவுள்ளன.

v) இச்சபையின் செயற்பாடுகளும் அதிகாரங்களும் வருமாறு:

- சர்வதேச ஒத்துழைப்புடன் நாடுகளின் மிக முக்கியமான பொருளா தார சமூக விடயங்கள் தொடர்பாக கலந்துரையாடலை மேற் கொள்ளல்.
- மனித உரிமையைப் பாதுகாப்பதற்கான முக்கிய செயற்பாடுகளில் ஈடுபடுதல்.
- ஐக்கிய நாடுகள் சபையின் உறுப்பு நாடுகளுக்கும், ஸ்தாபனங் களுக்கும் வேண்டிய ஆலோசனைகளை வழங்குதல். (15 ஸ்தா பனங்கள் இச்சபையின் கீழ் செயற்படுகின்றது)

## 37. நம்பிக்கைப் பொறுப்புச்சபை (Trustee Ship Council)

i) ஐக்கிய நாடுகள் சபை ஆரம்பிக்கப்பட்ட போது அவற்றின் விசேட பாதுகாப்பின் கீழ் கொண்டுவரப்பட்ட பிரதேசங்கள் நம்பிக்கை பொறுப்பு பிரதேசம் ஆகும்.

ii) இவ்வாறு சர்வதேச பொறுப்பாண்மை முறையின் கீழ் கொண்டு வரப்பட்டுள்ள பிரதேசங்களை நிர்வகித்தல் இச்சபையின் பிரதான கடமையாகும்.

iii) ஆரம்பத்தில் 11 பிரதேசங்கள் நம்பிக்கை பொறுப்பு சபையின் கீழ் இருந்தது. இறுதியாக 1994ம் ஆண்டு ஐக்கிய இராச்சியத்தின் கீழிருந்த பாலுத்தீவு சுதந்திரம் பெற்று ஐக்கிய நாடுகள் சபையின் 185வது அங்கத்துவ நாடாக இணைந்து கொண்டது.

iv) பொறுப்பேற்கப்பட்ட எல்லா நாடுகளும் சுதந்திரமடைந்ததால் இச்சபையின் பணிகள் தற்போது நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது.

v) இச்சபையின் செயற்பாடுகளும் அதிகாரங்களும் வருமாறு,

- பொறுப்பாக்கப்பட்ட பிரதேச மக்களின் அரசியல், பொருளாதார, சமூக, கல்வி, அபிவிருத்தியினை ஏற்படுத்தல்.
- பொறுப்பாக்கப்பட்ட பிரதேசங்களிலிருந்து கிடைக்கும் முறைப்பாடுகளை விசாரித்தல்.

## 38. சர்வதேச நீதிமன்றம் (International Court of Justice)

i) நீதிமன்றச் சட்டம் எனும் ஐக்கிய நாடுகள் சபை சாசனத்தின் முக்கியமான ஒரு சர்வதேச உடன் படிக்கையின்படி சர்வதேச நீதிமன்றம் நிறுவப்பட்டது.




ii) எல்லா ஐக்கிய நாடுகள் சபையின் உறுப்பு நாடுகளும் இந் நீதிமன்றத்தின் அதிகாரத்திற்குட்பட்டது. அங்கத்துவ நாடுகள் விரும்பினால் தமது உள்நாட்டு பிரச்சினையையோ அல்லது நாடுகளிடையே ஏற்படும் பிரச்சினைகளை தீர்ப்பதற்கோ இந்நீதி மன்றத்தின் உதவியை நாடலாம்.

iii) சர்வதேச நீதிமன்றம் **நெதர்லாந்திலுள்ள ஹேக்** நகரில் அமைந் துள்ளது.

iv) இந் நீதிமன்றில் 15 நீதிபதிகள் உள்ளனர். ஒரு நாட்டிலிருந்து ஒரு நீதிபதி மட்டுமே தெரிவு செய்யப்படுவர். நீதிபதிகளின் பதவிக்காலம் 09 வருடமாகும்.

v) இதன் அதிகாரங்கள் வருமாறு,

- பாதுகாப்புச் சபையினை சர்வதேச பிரச்சினைகள் தொடர்பான அறிக்கை களை தயாரித்து சமர்ப்பிக்கும்படி கோருதல்.
- பாதுகாப்புச்சபைக்கும் பொதுச்சபைக்கும் நீதி தொடர்பான ஆலோ சனைகளை வழங்குதல்.

## 39. செயலகம் (Secretariat)

i) ஐக்கிய நாடுகள் சபை யின் பிரதான நிர்வாக அலுவலகமே செயலக மாகும். இதன் முக்கிய நிர்வாக அதிகாரி செயலாளர் நாயகம் ஆவர்.

ii) பாதுகாப்பு சபையின் விதந்துரையின்படி பொதுச்சபையால் செய லாளர் நாயகம் நியமிக்கப்படுவர். பதவிக்காலம் 05 வருடமாகும். தற்போது செயலாளர்நாயகமாக **பான் கீ மூன்** கடமையாற்றுகிறார்.

iii) இதன் தலைமையகம் நியூயோர்க்கில் அமைந்துள்ளது. ஒவ்வொரு அங்கத்துவ நாடுகளின் பிரதிநிதிகளும் இங்கு கடமைபுரிவர்.

iv) செயலாளர் நாயகத்தின் பணிகள் வருமாறு,

- சர்வதேச சமாதானத்திற்கு அச்சுறுத்தலாக அமைக்கூடிய எந்த வொரு பிரச்சினைகளையும் பாதுகாப்புச் சபைக்கு உடனடியாக கொண்டு வருதல், அத்துடன் தேவையான ஆலோசனைகளை வழங்குதல்.
- சர்வதேச சமூகத்தில் அங்கத்துவ நாடுகளுக்காக அரச மட்டத்தில் செயற்படும் சேவையாளராகவும் தொழிற்படுதல்.

- அதி பொறுப்புள்ள அதிகாரியாகவும் இராஜதந்திரியாகவும், செயற் பாட்டாளராகவும், ஆலோசகராகவும், புதிய கருத்துக்களின் ஊற்றாள ராகவும் விளங்குதல்.

**செயலாளர் நாயகங்களின் வரிசையில்...**


01


02


03


04


05


06


07


08

| | | | |
|---|---|---|---|
| 1) | ட்ரிக்வலி | நோர்வே | - 1946-1952 |
| 2) | டெக்ஹெமர்சல் | சுவீடன் | - 1953-1961 |
| 3) | யூதான்ற் | பர்மா | - 1961-1971 |
| 4) | குர்ட் வால்ட்ஹைம் | ஒஸ்திரியா | - 1972-1981 |
| 5) | ஜாவியர் பெரஸ்டி குவெல்யா | பேரு | - 1982-1991 |
| 6) | பூத்ரோஸ் பூத்ரோஸ்காலி | எகிப்து | - 1992-1996 |
| 7) | கோபி அனான் | கானா | - 1997-2007 |
| 8) | பான் கீ மூன் | தென்கொரியா | - 2007- இன்றுவரை |

**40. ஐக்கிய நாடுகள் சபையின் இணை நிறுவனங்கள்**

i) சர்வதேச தொழிலாளர் அமைப்பு (ILO)

ii) உணவு விவசாயத் தாபனம் (FAO)

iii) வர்த்தகம், அபிவிருத்தி தொடர்பான ஐக்கிய நாடுகளின் மாநாடு (UNCTAD)

iv) சர்வதேச நாணய நிதியம் (IMF)

v) ஐக்கிய நாடுகளின் அபிவிருத்தித் திட்டம் (UNDP)

vi) ஐக்கிய நாடுகளின் சனத்தொகை நிதியம் (UNPFA)

vii) ஐக்கிய நாடுகளின் கைத்தொழில் அபிவிருத்தி அமையம் (UNIDO)

viii) உலக உணவுத்திட்டம் (WFP)

xi) ஐக்கிய நாடுகளின் கல்வி, விஞ்ஞான, கலாசார நிறுவனம் (UNESCO)

x) ஐக்கிய நாடுகளின் சர்வதேச சிறுவர் நிதியம் (UNICEF)

xi) உலக சுகாதார தாபனம் (WHO)

xii) புனரமைப்புக்கும் அபிவிருத்திக்குமான சர்வதேச வங்கி (IBRD)

xiii) வர்த்தகம், தீர்வை பற்றி ஐக்கிய நாடுகளின் மாநாடு (GATT)

xvi) ஐக்கிய நாடுகளின் அகதிகளுக்கான உயர் ஆணையாளர் அலுவலகம் (UNHCR)

**41. ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் உலக சமாதானத்தினை நிலைநாட்டுவதற்காக மேற்கொண்ட முயற்சிகள்**

i) ஈரான், ஈராக் நாடுகளிடையே நடைபெற்ற எட்டு ஆண்டு யுத்தத்தினை முடிவுக்கு கொண்டு வந்தமை (1988)

ii) அணுவாயுத ஆணைக்குழுவை அமைத்து உலக அணுப் பாவனையை நிர்வகித்து வருகின்றது.

iii) சுயெஸ் பிணக்குகளுக்கு தீர்வு ஏற்பட்டமை. பிரித்தானியாவுக்கும் பிரான்சுக்கும் சொந்தமான சுயெஸ் கால்வாயை எகிப்திய ஜனாதிபதி கமால் அல்துல் நாசர் மக்கள் மயப்படுத்தியபோது ஏற்பட்ட பிணக்கு சுமூகமாக தீர்த்து வைக்கப்பட்டது.

iv) தென்னாபிரிக்காவில் நிலவிய நிறபேதக் கொள்கையால் பிரச்சினைகள் ஏற்படுவதைத் தடுத்தது.

v) 1960-1970 தசாப்தத்தில் குடியேற்றவாதத்திற்கு எதிராக ஆபிரிக்க நாடுகள் மேற்கொண்ட முயற்சிகளுக்கு ஐக்கிய நாடுகள் சபை உதவியது

vi) இணை நிறுவனங்கள் மூலம் உணவுப்பற்றாக்குறை நிலவும் நாடுகளுக்கான நிவாரண உதவிகள் வழங்கப்படுகின்றமை.

vi) இஸ்ரேலிய - பலஸ்தீனப் பிரச்சினையிலும், ஆப்கானிஸ்தான், ஈராக்கில் ஐக்கிய அமெரிக்காவினால் ஏற்பட்ட பிரச்சினையிலும் தலையிட்டுள்ளது.

**42. ஐக்கிய நாடுகள் சபையின் செயற்பாடுகளின் போது எதிர்கொண்ட பிரச்சினைகள்**

i) உலக நாடுகள் இரு அணிகளாகப் பிரிந்து நின்றமை. (ஐக்கிய அமெரிக்கா, ரஷ்யா)

ii) பாதுகாப்பு சபையின் நிரந்தர உறுப்பு நாடுகள் தமது வீட்டோ அதிகாரத்தைப் பயன்படுத்தி சமாதான முயற்சிகளை தடை செய்தல்.

iii) அதிக பலம் உள்ள நாடுகள் அணு ஆயுதங்களை உற்பத்தி செய்து கொண்டு ஏனைய நாடுகள் கட்டுப்படுத்துகின்றமை.
உ-ம்: வடகொரியா, ஈரான்

## 43. ஐக்கிய நாடுகள் சபையின் பலவீனங்கள்

i) அண்மையில் நாடுகளுக்கிடையே நடைபெறுகின்ற போர்ப் பிணக்குகளை தவிர்ப்பதற்கு இயலாமல் காணப்படுகின்றது.

உ-ம்:

- ஐக்கிய அமெரிக்கா ஆப்கானிஸ்தான் மீது மேற்கொண்ட யுத்தம். இதனால் அங்கு பெரும் அழிவுகள் ஏற்பட்டமை.
- ஐக்கிய அமெரிக்கா, பிரிட்டிஷ் கூட்டுப்படைகள் ஈராக் மீது ஐக்கிய நாடுகள் சபையின் அனுமதியின்றியே போர் தொடுத்தமை. இப் பேரழிவுகள் ஈராக்கில் இன்றும் தொடர்கின்றது.
- ஸ்ரேலுக்கும் பலஸ்தீனத்திற்கும் இடையே நடைபெற்றுவரும் பிரச்சினைகள்

ii) பாதுகாப்புச் சபைக்கென தனியான நிரந்தர படைப்பிரிவு இல்லாமை. இதனால் ஐக்கிய அமெரிக்கா, பிரிட்டிஷ் போன்ற வல்லரசுகளை ஆதிக்கத்தின் கீழ் ஐக்கிய நாடுகள் சபை செயற்படுகின்றது.

iii) பாதுகாப்புச்சபையில் உள்ள 05 நாடுகளுக்கு வீட்டோ அதிகாரம் வழங்கப்பட்டமை. இதனால் ஐக்கிய நாடுகள் சபை மறுசீரமைக்கப்பட வேண்டும் என்ற வாதம் வலுப்பெற்று வருகின்றது.



சோவியத் யூனியன் படையினர் ஜேர்மனியைக் கைப்பற்றி தமது கொடியை ஏற்றுதல்

# உலக அதிகாரச் சமநிலை 5

1. **உலக அதிகார சமநிலை என்றால் என்ன?**

   i) இரண்டாம் உலக மகாயுத்தத்தின் பின்னர் உலகினை இரண்டாகக் கூறுபோட்டு சகல இராணுவ, பொருளாதார, விஞ்ஞானம், தொழில்நுட்பவல்லமைகள் உலக வல்லரசுகள் இரண்டிடமும் குவிந்திருந்தமையே **உலக அதிகார சமனிலை** ஆகும்.

   ii) இரண்டாம் உலக மகாயுத்தம் வரை ஐரோப்பாவின் (இங்கிலாந்து, பிரான்ஸ், ஜேர்மனி) கையிலிருந்த உலகத் தலைமைத்துவம் போரின் பின்னர் ஐக்கிய அமெரிக்காவிடம் சென்றபோது அதற்கு எதிராக சோவியத் ரஷ்யா தன்னை வலுப்படுத்திக்கொண்டது.

   iii) இதனால் உலகம் ஐக்கிய அமெரிக்கா தலைமையிலும், சோவியத் ரஷ்யா தலைமையிலும் இரு துருவங்களாக பிளவுபட்டது.

## ஐக்கிய அமெரிக்கா உலக வல்லரசாக எழுச்சியடைதல்

2. **ஐக்கிய அமெரிக்கா கடைப்பிடித்த உள்நாட்டுக் கொள்கை: முக்கிய அம்சங்கள்**

   i) அமெரிக்கா 50 மாநிலங்களைக் கொண்ட ஒரு கூட்டாட்சி நாடாகும். (தற்போது 52 மாநிலங்கள்) இது வடஅமெரிக்காவின் மத்திய பகுதியில் அமைந்துள்ளது. அலாஸ்காவையும், ஹாவாய் தீவுகளையும் கொண்டவை. மொத்த நிலப்பரப்பு 9,372,614 சதுர கிலோமீற்றர் ஆகும்.

   i) 1776 இல் பிரித்தானியாவிடம் இருந்து சுதந்திரம் பெற்ற ஐக்கிய அமெரிக்கா பலம் வாய்ந்த தேசியக் கொள்கை ஒன்றை உருவாக்குவதில் அக்கறை செலுத்தியது.

   iii) சுதந்திரம் பெற்ற 13 குடியேற்றங்களும் ஐரோப்பாவில் நிலவிய சிறந்த ஆட்சி முறை எதனையும் பின்பற்றாமல் நிறைவேற்று அதிகாரத்தைக் கொண்ட கூட்டாட்சி முறையை உருவாக்கி கொண்டமையே அவர்கள் கையாண்ட முதல் நடவடிக்கை ஆகும்.

   iv) 19ஆம் நூற்றாண்டு முழுவதும் தமது தேசத்தை எதிர்கால வல்லரசொன்றாக உருவாக்குவதற்காக நாட்டுத் தலைவர்களும், பொதுமக்களும் தேசிய உணர்வுடனும், அர்ப்பணிப்புடனும் செயற்பட்டதனாலேயே 1ஆம் உலகப் போரின் பின்னர் உலக வல்லரசாக எழுச்சியடையத் தொடங்கியது.

   v) அலெக்ஸாண்டா ஹெமில்டன் (ஜனாதிபதி வோஷிங்டன் நியமித்த அரசசெயலர்) தனியார் முயற்சியாண்மையுடனான சுதந்திர முதலாளித்துவப் பொருளாதார முறையே புதிய அரசைப் பலப்படுத்தும் எனக் கருதினார்.

   vi) இதனால் 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் பேரளவு கைத்தொழில்களைக் கொண்ட முதலாளித்துவ பொருளாதார முறையை அமெரிக்கா உருவாக்கிக் கொண்டது.

vii) கைத்தொழில் அபிவிருத்தியுடன் பெருந்தெருக்கள், புகையிரதப் பாதைகள், மின்னுற்பத்தி போன்ற வசதிகளும் விருத்தியடையவே 20ஆம் நூற்றாண்டில் உலக வல்லரசாக தோற்றம் பெறுவதற்கான பொருளாதாரப்பலத்தை முதலாளித்துவ பொருளாதாரத்தினூடாக அமெரிக்கா பெற்றிருந்தது.

ஐக்கிய அமெரிக்கக் குடியரசு

## 3. ஐக்கிய அமெரிக்கா கடைப்பிடித்த வெளிநாட்டுக் கொள்கை

i) மெகன்ஸி ஜனாதிபதி ஆட்சிக் காலத்தில் முதன் முறையாக அமெரிக்கா பரந்த வெளிநாட்டு வியாபார நடவடிக்கைகளில் ஈடுபட்டது.

ii) **ஜோ லோ** என்ற அரச செயலரின் "திறந்த வாயில் கொள்கை" எனப்பட்ட ஆலோசனைக்கு அமைவாக சீன, ஜப்பானிய வர்த்தக நடவடிக்கைகளில் ஐரோப்பாவுக்கு சமனாக ஈடுபட்டது.

iii) ஸ்பானிய போரின் மூலம் தமது பலத்தை முதன் முதலில் அமெரிக்கா வெளிப்படுத்தியது. 1898இல் கியூபா சுதந்திரப் போராட்டத்தில் (ஸ்பானியாவிடமிருந்து) ஈடுபட்டது. அதேவேளை கியூபாவுடன் வியாபார தொடர்பை பேணிய அமெரிக்காவின் வியாபார கப்பல் (லூசிடேன்) ஹவானா துறைமுகத்தில் தாக்குதலுக்கு உட்பட்டதே அமெரிக்கா - ஸ்பானிய போருக்கு காரணமாகும்.



வெள்ளை மாளிகை

iv) 1ஆம் உலக மகாயுத்தத்தில் ஆயுத வியாபாரத்தில் ஈடுபட்டதன் மூலம் பெருந்தொகை பணத்தை உழைத்து பொருளாதாரத்தில் மிகவும் சக்தி வாய்ந்ததாக விளங்கியது. அதேவேளை ஜேர்மனிக்கு எதிராக நேச நாடுகளுடன் இணைந்து அதன் வெற்றிக்கு வழிவகுத்ததன் மூலம் ஐக்கிய அமெரிக்காவின் சர்வதேச தோற்றம் மேலும் வெளிப்பட்டது.

v) சர்வதேச சங்கத்தை உருவாக்கியமை. 1ஆம் உலகப் போரின் பின்னர் சர்வதேசத்தில் தமது செல்வாக்கை மேம்படுத்தும் நோக்கில் ஜனாதிபதி வூட்றோவில்சன் உலக சமாதானத்தை ஏற்படுத்துவதற்காக சர்வதேச சங்கத்தை நிறுவ முன்நின்று செயற்பட்டமை.

vi) ஜப்பானுக்கு எதிராக போரில் ஈடுபட்டதன் மூலம் 2ஆம் உலகப் போருக்குள் பிரவேசித்துக் கொண்ட ஐக்கிய அமெரிக்கா ஹிரோஷிமா, நாகசாகியா மீது அணுகுண்டுகளைப் வீசியதன் மூலம் உலகப்போருக்கு முடிவு ஏற்பட்டதோடு உலகப் பெரும் வல்லரசாகவும் அமெரிக்கா எழுச்சியுற்றது.

## 4. ஐக்கிய அமெரிக்கா உலக அதிகாரத்தை நிலைநிறுத்த மேற்கொண்ட முயற்சிகள்

- இரண்டாம் உலகப் போரின் பின்னர் முன்னைய வெளியுறவுக் கொள்கையை மாற்றியமைத்து ஜனநாயக ஆட்சி முறையையும், முதலாளித்துவ பொருளாதார முறையையும் நிலைநிறுத்துவதன் மூலம் உலக அதிகாரத்தை தன்கையில் எடுக்க கடும் பிரயத்தனங்களை மேற்கொண்டது.

i) **ஜனநாயகத்தை வளர்ப்பதற்காக பல நடவடிக்கைகளை மேற் கொண்டமை.**

1) பிரித்தானியா, பிரான்ஸிய நாடுகளின் ஆதிக்கத்துக்குட்பட்ட ஆசிய, ஆபிரிக்க நாடுகளின் சுதந்திரத்தை வலியுறுத்தியமை.

2) பிலிப்பைன்ஸீக்கு அமெரிக்கா ஜனாதிபதி ஹெரி எஸ் ட்ருமன் சுதந்திரம் வழங்க முன்வந்தமை.

3) இந்தோனேஷியா ஒல்லாந்திடமிருந்து சுதந்திரம் பெற மத்தியஸ்தர் போன்று செயற்பட்டமை.

ii) **சுதந்திரமடையும் நாடுகளை முதலாளித்துவ அணியில் சேர்த்துக் கொள்ளும் தந்திரோபாயத்தை கையாண்டது.** ஜனநாயகத்தின் பேரால் ஐரோப்பிய நாடுகளின் கீழுள்ள நாடுகளுக்கு சுதந்திரத்தைப் பெற்றுக் கொடுத்து அந்நாடுகளை தமது அணியில் சேர்த்துக் கொள்வதன் மூலம் ஐரோப்பிய அரசுகளின் பலத்தை குறைப்பதற்கு முனைந்தமை.

iii) **முதலாளித்துவ நாடுகளின் தலைமையை ஏற்றமை:-** இரண்டாம் உலகப் போரின் பின்னர் உலக அரசியலிருந்து ஒதுங்கியிருக்கலாம் எனக் கருதிய அமெரிக்கா ரஷ்யா கம்யூனிஸ் ஆட்சிமுறையை பரவச் செய்தபோது அதற்கு எதிராக ஐக்கிய அமெரிக்கா முதலாளித்துவ பொருளாதார நாடுகளுக்கு தலைமை தாங்கிச் செயற்பட்டது.

iv) **மார்ஷல் திட்டத்தினை நடைமுறைப்படுத்தியமை**

1) ஐரோப்பாவின் சில வறிய நாடுகள் ஐரோப்பிய பொதுவுடமைக் கட்சியில் சென்றுவிடாமல் பாதுகாக்க அமெரிக்கா மார்ஷல் திட்டத்தினை முன்வைத்தது. போர்த்துக்கல், மேற்கு ஜேர்மனி, நெதர்லாந்து, நோர்வே, பெல்ஜியம், கிரேக்கம், துருக்கி போன்ற மேற்கு ஐரோப்பிய நாடுகளுக்கு 12 மில்லியன் டொலர்கள் உதவியை வழங்கி பல நாடுகளின் பொருண்மிய வளர்ச்சிக்கு வழிவகுத்தமை.

2) முதலாளித்துவ, ஜனநாயக கோட்பாடுகளை புதிதாக சுதந்திரம் பெறும் நாடுகளில் ஏற்படுத்திக் கொள்ளுதலும் இத்திட்டத்தின் நோக்கமாக இருந்தது.

v) **வட அட்லாண்டிக் ஒப்பந்தம்- நேட்டோ (North Atlantic Treaty Organization - NATO) கைச்சாத்தானமை:** 1949ல் முதலாளித்துவ அணி நாடுகள் ஒன்று சேர்த்து கைச்சாத்திட்ட இவ் ஒப்பந்தம் சோவியத் நாட்டினைச் சுற்றி அமெரிக்க இராணுவ தளங்களை நிறுவ உதவியது.

vi) **அமெரிக்க அரசுகளின் ஒன்றியம் ஆரம்பிக்கப்பட்டமை:** லத்தீன் அமெரிக்க நாடுகளும் ஐக்கிய அமெரிக்காவும் இணைந்து அமெரிக்க அரசுகளின் ஒன்றியத்தை ஆரம்பித்தது. கியூபாவின் ஊடாக பொதுவுடமை வாதம் பரவுவதை தடுப்பதே அமெரிக்காவின் நோக்காக இருந்தது.

vii) **இஸ்ரேல் தோற்றுவிக்கப்பட்டமை:** 1948ல் பெல்பர் அறிக்கையின் படி அரபு நாடுகளின் எதிர்ப்பின் மத்தியில் பிரித்தானியாவும் ஐக்கிய அமெரிக்காவும் சேர்ந்து இஸ்ரேல் என்ற புதிய நாட்டை உருவாக்கிய தோடு தமது செல்வாக்கை மத்திய கிழக்கில் முன்னெடுக்க பயன் படுத்துகின்றது.

**viii) மத்திய இரகசிய உளவுச்சேவை (Central Intelligence Agency)**
ஐக்கிய அமெரிக்காவின் கொள்கைகளுக்கு எதிரான நடவடிக்கைகளை தடுப்பதே CIAயின் நோக்கமாகும். சோவியத் ரஷ்யாவின் வீழ்ச்சியிலும் CIAயின் பங்கு குறிப்பிடத்தக்கதாக இருந்துள்ளது. இதேபோல் இஸ்ரேலும் மொஸாட் எனப்பட்ட உளவுச்சேவையை அமெரிக்காவுக்கு சார்பாக செயற்படுத்துகிறது.

xi) **பொது உடைமை வாதத்திற்கு எதிரான நாடுகளுக்கு உதவிகள் வழங்கியமை:** பொதுவுடமை நாடுகள் அணியில் நாடுகள் சேரும்போது அதற்கு எதிரான நாடுகளுக்கு உதவி வழங்கி முதலாளித்துவத்தை நிலை நிறுத்த ஐக்கிய அமெரிக்கா முயற்சித்தது.

**உ+ம்:**
1) சீனா முழுமையாக பொதுவுடமையாளரான மா ஓ சேதுங்கிடம் சென்றபோது அமெரிக்கா, ஜப்பான், கொரியா, பிலிப்பைன்ஸ் ஆகியவற்றுடன் பொருளாதார இராணுவ ஒப்பந்தங்களைச் செய்து கொண்டது.
2) வடகொரியா பொதுவுடமை அணியில் சேர்ந்தபோது தென்கொரியாவுக்கு பொருளாதார இராணுவ உதவிகளை வழங்கியது.


லெனின்


ஸ்டாலின்

**சோவியத் ரஸ்யா உலக வல்லரசாக எழுச்சியுறல்**

**5. ரஸ்யாவின் சமூக உடைமைப் புரட்சியின் வெற்றிக்கு பங்களித்த காரணிகள்**

- 1917ல் புரட்சி மூலம் வெற்றி பெற்ற லெனின் உலகின் முதல் சமூக உடைமை அரசாக ரஷ்யாவை உருவாக்கினார்.
- நிலம், வங்கி, தனியார் ஸ்தாபனங்கள் அனைத்தும் பொதுவுடமையாக்கப்பட்டன.

i) ரஷ்யாவில் காணப்பட்ட பொருளாதார அழுத்தங்கள்
ii) விவசாயிகள் தொழிலாளர்கள் மற்றும் படையினர் எதிர் நோக்கிய பிரச்சனைகள்.
iii) நிலப்பிரபுக்களின் கொடுமையான அதிகாரம்.
iv) நிலப்பிரபுக்களும் சமய குருமார்களும் கூடிய சுகபோகத்தை அனுபவித்தமை.

6. **சோவியத் ரஷ்யா உலக அதிகாரச் சமனிலையைப் பேண மேற்கொண்ட நடவடிக்கைகள்**

i) **ஐந்தாண்டு திட்டத்தின் கீழ் திட்டமிடப்பட்ட பொருளாதாரத்தை ஏற்படுத்தியமை:** லெனினை அடுத்து பதவிக்கு வந்த ஸ்டாலின் பொருளாதாரத்தை முன்னேற்று வதற்காக 1928இல் முதலாவது ஐந்தாண்டு திட்டத்தினை அமுல்படுத்தினார். இதனால் விவசாய, கைத்தொழில், கனிய எண்ணெய் உற்பத்தி போன்றவ விரைவாக அதிகரித்தன. ஆதலால் ஸ்டாலினை தொடர்ந்து பதவிக்குவந்த நிகடாகுருஷே, குரோமிக்கோ போன்றவர் களும் ஐந்தாண்டு திட்டங்களை தொடர்ந்து முன்னெடுத்தனர். மேலும் பிராந்திய பொருளாதார அமைப்புக்களை நிறுவி வினைத்திறன் மிக்க பொருளாதாரத்தை கட்டியெழுப்பியமை.

ii) **விஞ்ஞான தொழில்நுட்ப துறையை விருத்திசெய்ய நடவடிக்கை எடுத்தமை:** பொருளாதார ரீதியாக பலமடைந்தமையால் கல்வி, விஞ்ஞானத் துறையில் முன்னேற்றம் ஏற்பட்டது இதனால் விண்வெளி ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன (விண்வெளியில் முதலில் பணித்த ரஸ்யராக யூரிககாரினும், முதல் பெண்ணாக வெலன்டினா தெரஸ்கோவாவும் விளங்கினர்.

iii) **சமூக உடைமை அணியின் தலைமையை ரஷ்யா ஏற்றுக் கொண்டமை:** சமூக உடைமைக் கொள்கையைப் பரப்புவதில் கவனம் செலுத்திய ரஷ்யத் தலைமை சீனா, வடகொரியா போன்றவற்றில் சமூக உடைமை அரசை தோற்றுவித்தன. 1959ல் பிடெல் கஸ்டரோவினால் கியூபாவில் சர்வாதிகாரியான பெடிஸ்டாவின் ஆட்சியை கைப்பற்ற முடிந்தமை, அத்துடன் போலந்து, ருமேனியா, ஹங்கேரி, கிழக்கு ஜேர்மனி, செக்கோஸ்லொவாக்கியா போன்ற நாடுகளுடன் நேசத்தை வளர்த்துக் கொண்டனர்.

iv) **வோர்ஸோ அமைப்பைத் தோற்றுவித்தமை:** கம்யூனிச மேலாதிக்கத்துக்கு எதிராக ஐக்கிய அமெரிக்காவின் தலைமையில் ஏற்படுத்தப்பட்ட "நேட்டோ" அமைப்புக்கு பதிலடியாக போலந்து, கிழக்குஜேர்மனி, ஹங்கேரி, ருமேனியா, பல்கேரியா, செக்கோஸ்லோவாகியா போன்ற நாடுகளை இணைத்துக்கொண்டு ரஷ்யா 1955ல் வோர்ஸோ ஒப்பந்தம் ஒன்றை ஏற்படுத்தியது.

v) **சமூக உடைமைக் கொள்கைகள் பரவியமை:** 1949இல் சீனாவிலும் 1959ல் கியூபாவிலும் ஏற்பட்ட புரட்சியின் பின்னர் ஆசியா, ஆபிரிக்க நாடு களிலும் கம்யூனிசக் கொள்கை பரவத்தொடங்கியது எடுத்துக் காட்டாக வியட்னாவில் ஹோசிமின் தலைமையில் கம்யூனிச அரசு உருவாகியமை.

vi) **KGB உளவுச்சேவை Komitet Gosudarstvennoy Bezopasnosti (State Security Committee):** அமெரிக்கா உள்ளிட்ட முதலாளித்துவ நாடுகளின் யுத்த இரகசியங்களை பெற்றுகொள்வதிலும் பொதுவுடமை வாதத்தைப் பரப்புவதிலும் KGB கவனம் செலுத்தியது சில சமயங்களில் CIA உத்தியோகத்தர்களிடமிருந்து பணம் செலுத்தி தகவல்களைப் பெற்றுக்கொண்டது.

## 7. கெடுபிடிப் (பனிப்) போர் (Cold War)

i) அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமையை ஏற்ற முதலாளித்துவ நாடுகளின் முகாம் எனவும், சோவியத் ரஸ்யாவின் தலைமையை ஏற்ற சோசலிச நாடுகளின் முகாம் எனவும் உலகம் இரு கூட்ட மைப்புக்களாக பிரிந்தன.

ii) **இரு முகாங்களிடைக்கிடையே நிலவிய அரசியல், பொருளாதார, சமுதாய அமைப்பு முறைகள் முற்றிலும் வேறுபட்டவையாகவும் நேர்மாறான தன்மையைக் கொண்டதாகவும் அமைந்ததால் ஆட்சி இயந்திரத்தை இயக்கிய அரசியல் தலைவர்கள் படைக்கலங்களைப் பயன்படுத்துவதைப் போலக் கருத்துக்களை மோதவிட்டனர் இத்னையே கெடுபிடி (பனிப்)போர் என்பர்.**

iii) சுருங்கக்கூறின் "ஆயுத மோதலற்ற கொள்கைப்போர் ஒன்றில் இரு முகாம்களும் ஈடுபட்டமையே கெடுபிடிப் (பனிப்) போர்" எனலாம்.

iv) 1945ன் பின்னர் நான்கு தசாப்தங்களாக இரு முகாம்களுக்கிடையில் பலப்பரீட்சையும் ஒன்றுக்கொன்று கொள்கைப்போரும், அச்சுறுத்தலும் மற்றும் இரகசிய உளவுத்தாபனங்களின் இயக்கமும் இப்போரின் இலட்சணங்களாக இருந்தன.

v) இக் கெடுபிடிப்போர் ஒரு மிரட்டல் போர் என்ற அளவில் நில்லாமல் மற்றுமொரு பெரும் போரை உருவாக்கிடக்கூடுமோ என்ற அச்ச உணர்வினையே தோற்று வித்திருந்தது.

## 8. கெடுபிடிப்போரின் போது ஐ.நாவின் செயற்பாடுகள்

- கெடுபிடிப்போர்க் காலத்தில் இரு முகாம்களுக்கிடையே ஏற்பட்ட இருந்த ஆயுத மோதல்கள் தடுக்கப்பட்டன.

i) **பெர்லின் பிரச்சனை:** இரண்டாம் உலகப் போரின் பின்னர் பேர்லின் நகரம் கிழக்கு மேற்கு என பிரிக்கப்பட்டது. மேற்கு பேர்லினுக்கு நாணய சீர்திருத்தத்தை மேற்கு உலக நாடுகள் அறிமுகப்படுத்திய போது மேற்கு பெர்லினுக்கான பாதைகளை ரஸ்ய அதிபர் ஸ்டாலின் மூடிவிட்டார் இதன் பின்னர் ஜேர்மனி மேற்கு கிழக்காக பிரிக்கப்பட்ட போது பெர்லின் கிழக்கு ஜேர்மனிக்குள் சென்றதால் ஏற்பட்ட பிரச்சனையை 1949ல் ஐ.நா.சபை பேச்சுக்கள் மூலம் தீர்த்துவைத்தது.

ii) **கொரியப் பிரச்சனை:** 1948 கொரியக் குடாநாடு வடக்கு - தெற்காகப் பிளவுபட்டது (வடஅகலாங்கு $38^{0}$ எல்லையாக) 1950ல் ரஸ்யாவுக்கு சார்பாக இருந்த வடகொரியா அமெரிக்காவுக்கு சார்பாக இருந்த தென்கொரியாவை ஆக்கிரமித்தது. 1953ல் ஆரம்பித்த சமாதானப் பேச்சுவார்த்தை தோல்வியுற்று மீண்டும் 1991ல் ஆரம்பிக்கப்படும் வரை தேச எல்லையை ஐ.நா. சபையின் பொதுச்சபை கண்காணித்து வந்தது.

iii) **சுயெஸ் நெருக்கடி:** 1956ல் எகிப்திய ஜனாதிபதி அப்துல் கமால் நசார் பொதுவுடமைக் கோட்பாட்டின்படி சுயெஸ் கால்வாயை தேசிய உடமையாக்கியபோது எழுந்த நெருக்கடி நிலையை ஐ.நா. சபையின் பாதுகாப்பு படையினர் அப்பகுதியிலிருந்த படையினரை (பிரித் தானியா பிரான்ஸ் இஸ்ரேல்) அகற்றி சமாதானத்தை ஏற்படுத்தியமை.

iv) **கி!பா நெருக்கடி:** கியூபாவில் புரட்சி மூலம் பிடெல் காஸ்ரோ சமூக வுடமை அரசை நிறுவியபோது அதற்கு எதிராக அமெரிக்கா செயற் பட்டது. இதனால் 1962ல் ரஸ்யாவினால் ஐக்கிய அமெரிக்கா வுக்கு எதிராக கியூபாவில் எறிகணைகள் நிலைப்படுத்தப்பட்டன. அதற்குப் பதிலடியாக ஐக்கிய அமெரிக்கா ரஷ்யாவுக்கு எதிராக எறிகணை களை துருக்கியில் நிலைநிறுத்தியது. இதன்போது ஐ.நா.வின் செயலாளர்நாயகம் அமெரிக்க ஜனாதிபதி ஜோன் எப்.கெனடியுடனும் ரஸ்ய அதிபர் குருசேவுடனும் கலந்துரையாடிப் நெருக்கடி நிலையை தீர்த்தமை.


கெனடி, ஐ.நா. செயலர் !தான்ற் மற்றும் குருசேவ்


ஏவு ஆயுதம்

## 9. கெடுபிடிப் போரின் பின்னர் ஐ.நாவின் சமாதான நடவடிக்கைகள்

- சோபியத் ரஸ்யா வீழ்ச்சியடைந்ததைத் தொடர்ந்து இரு முகாம்களுக்கு மிடையிலான அதிகாரப்போட்டி முற்றுப்பெற்ற போதிலும் உலகில் யுத்த நடவடிக்கைகள் நாட்டுக்கு நாடு நடைபெற்றது. அவற்றைத் தீர்ப்பதற்கு ஐ.நா. சபை நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது.

i) **வளைகுடா நெருக்கடியைத் தீர்க்கத் தலையிட்டமை:** ஈராக்கின் எல்லையில் காணப்பட்ட ருபெயிலா கனிய எண்ணைவயலிலிருந்து குவைத் எண்ணையை உறிஞ்சுவதாக குற்றம் சாட்டி குவைத்தை ஈராக் ஆக்கிரமித்தபோது ஐ.நா.சபை படைகளை அனுப்பித் தடுத்தது.

ii) **சோமாலியப் பிரச்சினையில் தலையிட்டமை:** 1991ல் சோமாவலியா வில் ஏற்பட்ட யுத்தத்தினால் அந்நாட்டு மக்களுக்கு பெரும் பாதிப்புக்கள் ஏற்பட்டது. அம்மக்களை பாதுகாக்கவும் யுத்தத்தினை முடிவுக்கு கொண்டுவரவும் ஐ.நா.சபை முயற்சி செய்தமை.

iii) **ருவண்டா இன ஒழிப்பினை முடிவுக்கு கொண்டு வந்தமை**: 1994ல் ருவண்டாவில் ஏற்பட்ட இனக்கலவரத்தினால் 5 லட்சம் பேர் கொல்லப்பட்டும் 30 லட்சம் பேர் அகதிகளாகவும் மாறியுள்ளனர் இவ் வரலாறு காணாத மனித அவலத்தை ஐ.நா.சபை தலையிட்டே கட்டுப்பாட்டில் கொண்டு வந்தது.

iv) **கம்புச்சிய பிரச்சனையை தீர்த்துக் கொண்டமை**: கம்புச்சியாவில் சிஹநுக் மன்னர் பெயரளவு அதிகாரியாக இருக்க, பொல்பொட் எனும் பாஸிச

சர்வாதிகாரி நாட்டை ஆட்சி செய்து வந்தார். இதனை எதிர்த்து வியட்நாம் படையெடுத்து இதன்போது ஐ. நா. சபை தலையிட்டு வியட்னாம் படையை வெளியேற்றியதோடு 1993ல் தேர்தல் நடாத்தப்பட்டு சுதந்திர அரசு ஸ்தாபிப்பதற்கு காரணமாக இருந்தமை.

v) 1992ல் யூகோஸ்லாவியாவிலும் 1994ல் ஹைட்டியிலும் ஏற்பட்ட அமைதியின்மையை முடிவுக்கு கொண்டுவந்து அங்கு சமாதானம் ஏற்பட வழிவகுத்தமை.

## 10. உலகில் ஆயுதப் போட்டிகளுக்கு முற்றுப்புள்ளி வைத்து சமாதானத்தை ஏற்படுத்த ஐ.நா.சபை மேற்கொண்ட ஒப்பந்தங்கள்

i) அணுசக்தி ஆயுதங்களை வளிமண்டலத்திலும் அதற்குமேலும் நீருக்க கீழும் பரீட்சிப்பதை தடைசெய்யும் ஒப்பந்தம் (1963)

ii) லத்தீன் அமெரிக்க பகுதியிலும் கரிபியன் பிரதேசத்திலும் அணு ஆயுதங்களைப் பரீட்சித்தலை தடைசெய்யும் ஒப்பந்தம் (1967)

iii) தென்பசுபிக் பிரதேசம் அணு ஆயுதமற்ற சுதந்திரவலய ஒப்பந்தம்(1967)

iv) அணு ஆயுதங்களை இல்லாத பிரதேசங்களுக்கு கொண்டு செல்வதற் கான தடை ஒப்பந்தம் (1968)

v) இராசயன ஆயுதங்களை உற்பத்தி செய்தல், விருத்தி செய்தல், பாதுகாத்தல், பாவித்தல் தடை செய்வதற்கான ஒப்பந்தம் (1972)

vi) 1974ல் ஸோல்ட் I, II ஒப்பந்தங்கள் மூலம் ஆயுதப்பரிகரணம் மட்டுப்படுத்தப் பட்டது.

## 11. உலகப் பொருளாதார நிர்வாகம் : முக்கிய அம்சங்கள்

- இரண்டாம் உலகப் போரின் பின்னர் இரண்டு உலக வல்லரசுகளும் அரசியல், பொருளியல் தத்துவங்களை முன்னெடுத்து செல்வதற்கு முயற்சிகளை மேற்கொண்டிருந்தன.

i) ஐக்கிய அமெரிக்கா முதலாளித்துவ பொருளாதாரத்தை பரப்புவதில் ஈடுபட்டிருந்தது எடுத்துக்காட்டாக,

1. 1949ல் அமெரிக்க ஜனாதிபதி ட்ருமன் நான்முக வேலைத்திட்டத்தை செயல்படுத்தி அபிவிருத்தி அடைந்துவரும் நாடுகளை தன்பக்கம் ஈர்க்க முயற்சித்தமை.
2. மார்ஷல் திட்டத்தினை முன்டவைத்து நாடுகளை தன்பக்கம் ஈர்க்க முயற்சித்தமை
3. நேட்டோ தாபனத்தை ஏற்படுத்திக் கொண்டமை.
4. ஏழை நாடுகளுக்கு உணவுப் பொருட்களை உதவியாக வழங்கியமை.

   **உ+ம்:** P.L - 480 ஒப்பந்தத்தின் கீழ் இலங்கைக்கு கோதுமை மா வழங்கி வருகின்றமை.
5. வறிய நாடுகளில் தமது கைத்தொழில்களை கொண்டு செல்கின்றமை.

   **உ+ம்:** பிறிமா மா ஆலை நீண்டகால தனியுரிமையைக் கொண் டுள்ளது.

ii) சோவியத் ரஸ்யா சமவுடமைப் பொருளாதாரத்தை பரப்புவதில் ஈடுபட்டிருந்தது எடுத்துக்காட்டாக,

1. சீனா, வடகொரியா, கியூபா, வியட்னாம், கிழக்கு ஐரோப்பிய நாடுகளுக்கு உதவிகளை வழங்கியமை.
2. ஆசிய, ஆபிரிக்க நாடுகளுக்கு தொழிலுட்ப, கல்வி, கலாசார உதவிகளை வழங்கியமை. உ-ம்:

- ரஸ்யாவினால் இலங்கைக்கு களனி ரயர் தொழிற்சாலை, முகத்துவார மா அரைக்கும் ஆலை, ஒட்டுப்பலகை கூட்டுத் தாபனம், ஒருவல உருக்குக் கூட்டுத்தாபனம் போன்றன அமைக்கப் பட்டு வழங்கப்பட்டது.
- சீனா வேயாங்கொட நெசவாலையும், கிழக்கு ஜேர்மனி துல்ஹிரிய நெசவாலையும் இலங்கைக்கு அமைத்து வழங்கியது.
- விஞ்ஞானிகளுக்கு (இலங்கை உட்பட) பெட்றிஸ் லுமும்பா நட்புறவுப் பல்கலைக்கழகத்தில் பயிற்சிபெற ரஸ்யா உதவியது.

iii) இதனால் உலக நாடுகள் சமூக உடைமை கோட்பாட்டைப் பின்பற்றி தனியாருக்குச் சொந்தமான உடைமைகளைத் தேசிய மயமாக்கும் செயற்பாடுகளை மேற்கொண்டமை. உ-ம்:

- பிரித்தானிய, பிரான்சிய கம்பனிகள் வசமிருந்த சுயஸ் கால்வாய் 1956ல் எகிப்திய அதிபர் நாசரினால் தேசிய மயமாக்கப்பட்டது.
- இலங்கையில் கனிய எண்ணெய், எரிவாயு, துறைமுகம், பேருந்து போன்றவற்றை தேசிய மயமாக்கும் நடவடிக்கைகள் ஆரம்பித்தன.

## 12. அணிசாரா நாடுகளின் மாநாடு Nonaigned Movement (NAM)

i) இரண்டாம் உலக மகாயுத்தத்தின் பின் உலகில் தோன்றிய வல்லரசு முகாம்கள் இரண்டில் ஒன்றிலேனும் சாராது இருந்த அரசுகள் பின் பற்றிய கொள்கைகள் அணிசேராக் கொள்கைகள் என அழைக்கப் பட்டது.

ii) அணிசேராக்கொள்கை என்பது வல்லரசு அணிகள் இரண்டினையும் விட்டு விலகி தனியாக இருக்காது சுதந்திரம், பாதுகாப்பு, சமாதானம், ஒத்துழைப்பு என்பவற்றை அடிப்படை யாகக் கொண்டதாகும்.


ஜவகர்லால் நேரு

iii) மேற்குலக ஆதிக்கத்திலிருந்து சுதந்திரமடைந்த மூன்றாம் உலக நாடுகளாகக் கருதப்படும் ஆசிய, ஆபிரிக்க நாடுகள் அணிசேரா இயக்கத்தின் உறுப்பினர்களாக காணப்பட்டனர்.

iv) 1955ல் இந்தோனேசியாவின் பாண்டுங் நகரில் நடத்தப்பட்ட மாநாட்டில் அணிசேரா இயக்கத்தின் அங்குராப்பணம் நடந்தது இதில் இந்திய பிரதமர் நேருவினால் முன்வைக்கப்பட்ட பஞ்சசீலக்

கொள்கையை ஆசிய, ஆபிரிக்க நாடுகளும் தமது நடுநிலையான வெளிநாட்டுக் கொள்கையாக பிரகடனம் செய்தன.

v) பஞ்சசீலக் கொள்கையின்படி அணிசேரா முதலாவது மாநாடு 1961ல் யூகோஸ்லோவியாவின் தலைநகரான **பெல்கிரேட்டில்** மார்ஸல் டிட்டோ தலைமையில் நடைபெற்றது.

vi) தொடர்ந்து 1964ல் கெய்ரேலாவிலும் 1970ல் லுஸாக்காவிலும் 1973ல் அல்ஜியஸ்லும் 1976ல் கொழும்பிலும் மாநாடுகள் நடைபெற்றன. (சீனாவின் நன்கொடையாக பண்டார நாயக்கா ஞாபகார்த்த மாநாட்டு மண்டபம் வழங்கப்பட்டு அதில் அணிசேரா மாநாடு நடைபெற்றது.)

## 13. பஞ்சசீலக் கொள்கை: பிரதான அம்சங்கள்

- அணிசேரா அமைப்பின் நோக்கங்கள் வருமாறு:

ii) எல்லா நாடுகளினதும் சுதந்திரத்திற்கும் ஐக்கியத்திற்கும் மதிப்பளித்தல்

ii) எந்தவொரு நாட்டினதும் உள்நாட்டு விடயங்களில் தலையிடாமை.

iii) எந்தவொரு இனமும் இன்னொரு இனத்தை ஆக்கிரமிக்காதிருத்தல்.

vi) சமத்துவமும் சமூக நலனும் பேணப்படும் விதத்தில் செயற்படல்.

v) சமாதான சகவாழ்வை மேற்கொள்ளல்.

## 14. சோவியத் ரஸ்யாவின் வீழ்ச்சி: முக்கிய அம்சங்கள்

i) 1980ன் இறுதிப்பகுதியில் ரஸ்யாவின் அப்போதைய ஜனாதிபதி ''மிஹயில் கொர்பச்ஷேவ்''னால் அறிமுகம் செய்யப்பட்ட "பெரஸ்ரொய்கா", "கிளாஸ்நொட்ஸ்" எனும் பொருளாதார மறுசீரமைப்புக்கள் **பொரிஸ் யெல்ட்சின்** என்ற ஜனாதிபதி காலத்திலும் தொடர்ந்து முன்னெடுக்கப்பட்டது.

ii) இதனால் ரஸ்யா சமூக உடைமைக் கொள்கையில் இருந்து விடுபட்டு சுதந்திரப் பொருளாதாரக் கொள்கையைப் பின்பற்றும் நாடாக மாறியது.

iii) அச்சீர்திருத்தங்கள் ஏற்படுவதில் செல்வாக்குச் செலுத்திய காரணங்கள் வருமாறு.

1) அதிகார வாதத்தில் காணப்பட்ட குறைபாடுகள்
2) சமூக உடைமைப் பொருளாதார முறையால் போட்டி அடிப்படையிலான உற்பத்தி நடைபெறாமை.
3) திட்டமிட்ட பொருளாதாரமானதால் புதிய உற்பத்தி முறைகள் தோன்றாமையும் போட்டி முறையிலான விலை காணப்படாமையும்.
4) சந்தையின் தேவைகளைத் தெரிந்து கொள்ளாமல் உற்பத்தியை மேற்கொண்டமை.
5) தேவைக்கு மேலதிகமாக உற்பத்தி செய்து களஞ்சியப்படுத்தி வைத்துக் கொண்டமை.
6) உற்பத்தி செயற்பாட்டினால் எழும் நட்டத்தை அரசே தாங்கிக் கொள்ள வேண்டியிருந்தமை.

7) சமூக உடைமை கொள்கையைப் பரப்புவதற்கு மேற்கொள்ளப் பட்ட அதிக செலவு

8) சுதந்திர பொருளாதாரத்தைப் பற்றி புதிய தலைமுறையினர் சிந்தித்தமை.

9) ஐக்கிய அமெரிக்காவின் இரகசிய உளவுச் சேவையின் செயற் பாடுகள்.

10) உயர்ந்த பாதுகாப்புச் செலவுகள் காணப்பட்டமை.

## 15. சோவியத் ரஸ்யாவின் வீழ்ச்சியினால் ஏற்பட்ட விளைவுகள்

### i) தேசிய ரீதியிலான விளைவுகள்

- சோவியத் ரஸ்யா பல நாடுகளாகப் பிரிந்து போனமை.
- ஒரே கட்சி ஆட்சிக்குப் பதிலாக பல கட்சி ஜனநாயக ஆட்சிமுறை ஏற்பட்டமை.
- முதலாளித்துவ பொருளாதார முறை ஏற்பட்டமை.
- ஏற்றுமதிகளுக்கு கட்டுப்பாடுகள் இல்லாமற் போனமை.
- இறக்குமதிகளில் ஏற்பட்ட அதிகரிப்பு அதிகரித்த பணவீக்க நிலைமையை தோற்றுவித்தமை.
- வெளிநாடுகளிடம் கடன்பெற நேர்ந்தமை.

### ii) சர்வதேச ரீதியிலான விளைவுகள்

- சமூக உடைமை முறையை பரப்புவதற்கு இருந்த சூழ்நிலை குறைந்துபோனமை.
- சமூக உடைமைப் பொருளாதாரம் வீழ்ச்சியுற்றமை.
- ஐக்கிய அமெரிக்க அரசு போட்டியில்லாது உலகத் தலைமைக்கு வந்தமை.
- யூகோஸ்லோவியா, செக்கோஸ்லேவாக்கியா நாடுகள் பிளவு பட்டமை.
- அணுவாயுத தொழில்நுட்பம் இந்தியா, வடகொரியா, ஈரான் போன்ற நாடுகளுக்கும் பரவியமை.
- கெடுபிடிப்போர் முற்றுப் பெற்றமை.
- ஆயுத உற்பத்தியில் போட்டி இல்லாது போனமை.
- வோர்ஸே அணி செயலிழந்தமை.

**சோவியத் ரஷ்யா வீழ்ச்சியின் பின்னர் 15 நாடுகளாகப் பிரிந்தது.**

| | | |
|---|---|---|
| 1) ரஷ்யா | 6) உக்ரைன் | 11) கஸகஸ்தான் |
| 2) பெலோ ரஷ்யா | 7) மோலிடேலியா | 12) உஸ்பெகிஸ்தான் |
| 3) எஸ்தோனியா | 8) ஜோர்ஜியா | 13) கிர்கிர்ஸ்தான் |
| 4) லத்வியா | 9) ஆர்மீனியா | 14) தஜிகிஸ்தான் |
| 5) லிதுவேனியா | 10) அசர்பைஜான் | 15) டுர்க்மெனிஸ்தான் |

**ஜப்பானின் எழுச்சி**

**16. ஐக்கிய அமெரிக்கப் படைகள் ஜப்பானுக்குள் பிரவேசித்தல்: முக்கிய நோக்கங்கள்**

i) இரண்டாம் உலகப்போரில் ஹிரோசிமா, நாகசாகியா அழிவுடன் ஜப்பான் யுத்தத்தில் தோல்வி கண்டது.

ii) இதனைத் தொடர்ந்து **டக்ளஸ் மெக் ஆக்தர்** என்ற தளபதியின் தலைமையில் அமெரிக்க படை ஜப்பானுக்குள் பிரவேசித்து நிலை கொண்டது.

iii) இதற்கான வலுவான காரணங்கள் வருமாறு:
1. ஜப்பானின் யுத்த வலுவைக் குறைத்தல்.
2. ஜனநாயக ஆட்சி முறையை ஜப்பானில் அறிமுகம் செய்தல்.

iv) இந்த வகையில் 1946ல் டக்ளஸ் மெக் ஆக்தர் தளபதியின் மேற்பார்வையின் கீழ் ஜனநாயக ஆட்சிமுறை ஒன்று உருவாக்கப்பட்டு 1947முதல் செயற்படுத்தப்பட்டது.

**17. 1947ல் ஜப்பானிய அரசியல் யாப்பிலுள்ள விடயங்கள்**

i) **மக்கள் இறைமை:** ஜப்பானிய பேரசிடம் ஒப்படைக்கப்பட்ட மக்கள் இறைமை புதிய அரசியல் யாப்பின்படி நாட்டின் தலைவராக அரசனும் மக்கள் இறைமை பாராளுமன்றத்திடமும் ஒப்படைக்கப்பட்டது.

ii) **பேரரசர் பெயரளவு அதிகாரியாக விளங்குதல்:** நாட்டு நிர்வாகத்தில் எந்த அதிகாரமும் பேரரசருக்கு வழங்கப்படவில்லை ஆயினும் பிரதமரை, நியமித்தல் நீதியரசர்களை நியமித்தல் போன்ற பெயரளவிலான கடமைகள் பேரரசிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது.

iii) **பிரதமர் நியமனம்:** டயட் எனப்படும் மக்கள் பிரதிநிதிகள் சபையால் பெயர் குறிப்பிடப்பட்டு நீதியரசர்கள், அமைச்சரவையால் அங்கீகரிக்கப்பட்ட ஒருவரை பேரரசர் பிரதமராக நியமனம் செய்வார்.

iv) **பேரரசரின் பொறுப்புக்கள்:** பெயரளவிலான அதிகாரியாக விளங்கிய போதிலும் சில பொறுப்புக்கள் அவரிடத்தே காணப்பட்டது.
1) அமைச்சரவையின் வேண்டுகோளின்படி டயட் எனப்படும் மக்கள் பிரதிநிதிகள் சபையை கூட்டுதல்.
2) கௌரவப் பட்டங்களை வழங்குதல்
3) மக்களின் பெயரால் சட்டத்தைப் பிறப்பித்தல்
4) ஒப்பந்தங்களில் கையெழுத்திடல்

v) **பாராளுமன்றம்:** டயட் எனப்பட்ட மக்கள் பிரதிநிதிகள் சபையே பாராளுமன்றம் ஆகும். இதில் இரு சபைகள் காணப்பட்டது உறுப்பினர்கள் தேர்தல் மூலம் (20 வயதுக்கு மேல்) தெரிவு செய்யப்படுவர்.

1) **மக்கள் பிரதிநிதிகள் சபை**
- 486 பேரை உறுப்பினராக கொண்டிருத்தல்.
- பதவிக்காலம் 4 ஆண்டுகளாகும்

2) **ஆலோசனைச் (மேல்) சபை**
- 250 பேரை உறுப்பினராக கொண்டிருத்தல்
- பதவிக்காலம் 6 ஆண்டுகளாகும்.

vi) **அமைச்சரவை:** பிரதமர் உள்ளிட்ட அமைச்சர்கள் குழுவே அமைச்ச ரவை ஆகும். அமைச்சரவையிடம் நிறைவேற்று அதிகாரங்கள் காணப்பட்டபோதிலும் டயட் சபைக்கு கூட்டாக பதில் கூறவேண்டும் அமைச்சர்களை நியமிப்பது, நீக்குதல் சார்ந்த அதிகாரம் பிரதமரிடமே காணப்பட்டது.

vii) **உள்ளூராட்சி:** ஜப்பான் முழுவதும் 46 உள்ளூராட்சி பிரிவுகளாக பிரிக்கப்பட்டது. பிரதேசசபை, நகரசபை, கிராமசபை இவற்றுள் அடங்கும்.

viii) **நீதித்துறை:** சுதந்திரமான அமைப்பாக பிரதம நீதியரசருடன் 14 நீதியரசர்களை கொண்டு உயர்நீதிமன்றம் செயற்பட்டது.

**18. ஜப்பானின் வெளிநாட்டு தொடர்பு: முக்கிய அம்சங்கள்**

i) ஜப்பானின் வெளிநாட்டுத் தொடர்புகளின் அடிப்படை நோக்கங்கள் வருமாறு:
   - சமாதானம்
   - தனிமனித சுதந்திரம்
   - மனித வர்க்கத்தின் நலன்களில் பங்கு பெறுதல்

ii) 1951ல் அமெரிக்காவின் **சான் பிரான்சிஸ்கோ** நகரில் ஜப்பானும் அமெரிக்காவின் சொற்படி நடக்கும் 48 நாடுகளும் கையெழுத்திட்ட ஒப்பந்தத்தின் மூலம் ஜப்பான் சுதந்திரநாடாக ஏற்றுக்கொள்ளப்பட்டது.

iii) 1952ல் இவ் ஒப்பந்தம் அமுலுக்கு வந்ததைத் தொடர்ந்து அமெரிக்கா வின் ஆட்சி ஜப்பானில் முடிவுக்கு வந்தது.

iv) 1951ல் ஜப்பானும் அமெரிக்காவும் பாதுகாப்பு ஒப்பந்தம் ஒன்றினை எழுதியது. ஆயினும் 1960ல் புதிய "பரஸ்பரப் பாதுகாப்பு கூட்டுறவு ஒப்பந்தம்" கையெழுத்திடப்பட்டது. இதன்படி அமெரிக்க படையினர் ஜப்பானில் தங்கியிருக்க அனுமதியளிக்கப்பட்டது.

v) 1952ல் ஜப்பான் சீனாவுடன் சமாதான ஒப்பந்தத்தை ஏற்படுத்தி நட்புறவை பேணுவதற்கு முயற்சித்தது.

vi) 1956ல் ஜப்பான் ரஷ்யாவுடன் தூதரகத் தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டது. இவ்வாறாக ஜப்பான் ஆசிய, ஆபிரிக்க, லத்தீன் அமெரிக்க நாடுகளுடன் பொருளாதார ஒத்துழைப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டது.

vii) 1955ல் ஜப்பான் கற் (GATT) தாபனம், 1956ல் ஐ.நா.சபை, 1964ல் சர்வதேச நாணய நிதியம் (IMF) ஆகியவற்றில் அங்கத்துவத்தைப் பெற்றுக்கொண்டது.

**19. ஜப்பானின் பொருளாதார வளர்ச்சி**

i) விவசாயத்தில் உயர்ந்த தொழில்நுட்பம், செறிவான பயிர்ச்செய்கை முறை பின்பற்றப்படுகின்றது.

ii) மீன்பிடித் தொழிலில் பாரிய கப்பல்களைப் பயன்படுத்தி (மீன்களை ரின்னில் அடைக்கும் வசதிகொண்ட) அதிக வருமானத்தினை பெறுகின்றது.

iii) மின்சக்தி உற்பத்தியில் ஆதிக்கம் செலுத்தியது 70% மின்சக்தியை நீராலேயே பெறுகின்றது. 1962ல் அனல் மின்னையும், 1965ல் அணுமின்னையும் உற்பத்தி செய்ய ஆரம்பித்தது.

iv) உயர்தர தொழில்நுட்பத்துடனான போக்குவரத்து முறைகள் நிலவு கின்றன சுரங்க ரயில் பாதைகள், அதிவேக வான், கடல் வழிப்போக்குவரத்து முறைகள் காணப்படுகின்றன.

v) ஜப்பானின் முழுப் பொருளாதாரமும் சர்வதேச வர்த்தகத்தின் மீது தங்கியுள்ளது குறிப்பாக 90% மூலப்பொருட்களை இறக்குமதி செய்கின்றபோதிலும் உலக சந்தையில் உயர் தொழில்நுட்பம் மூலம் நிலைத்து நிற்கின்றது.

**ஜப்பானியப் பொருளாதார வளர்ச்சி நிலைகள்**



நவீன விவசாய முறை



மீன்பிடிக் கைத்தொழில்

**20. ஜப்பானின் கைத்தொழில் விருத்தி பற்றிய குறிப்புக்கள்**

i) **இரண்டாம் உலகப் போரில் பின்னர் மூன்று கட்டங்கள் ஊடாக கைத்தொழில் முன்னேற்றம் ஏற்பட்டது.**

- 1ம் கட்டம் - கைத்தொழில் புனரமைக்கும் காலம் (1945-1952)
- 2ம் கட்டம் - தொடர்புகளை ஏற்படுத்தி ஒன்றிணைக்கும் காலம் (1952 - 1959)
- 3ம் கட்டம் - பல்வேறு கைத்தொழில்களில் கவனம் செலுத்தி எழுச்சிபெறும் காலம் (1960 - 1967

ii) **கைத்தொழில் வெற்றியளித்தமைக்கான காரணங்கள்**

- முதலீட்டாளர்கள்இருந்தமை
- ஜப்பானியர்களின் அர்ப்பணிப்பும் ஒழுங்கு முறையும்
- புதிய தொழில்நுட்பத்தை பயன்படுத்தியமை
- வர்த்தக கண்காட்சிகளை நடத்தியமை
- பொருட்களின் விலை குறைவாக இருந்தமை (ஜேர்மனி, அமெரிக்காவை விட)

iii) வளர்ச்சி பெற்ற முக்கிய கைத்தொழில்கள்

- கப்பல் கட்டும் தொழில்
- புகையிரத உற்பத்திக் கைத்தொழில்
- இலத்திரனியல் உற்பத்திக் கைத்தொழில்

உ+ம்: தொலைக்காட்சி, வானொலி, மின் உபகரணங்கள்

- மோட்டார் வாகன உற்பத்திக் கைத்தொழில்
- இரும்பு உருக்குக் கைத்தொழில் (இரும்புத்தாது, நிலக்கரி போன்றன இல்லாதபோதும் இரும்பு உருக்கில் முன்னணி பெறு கின்றது.)



நவீன புகையிரதம்



அணுமின் உற்பத்தி



சுரங்கவழி மின்சார புகையிரத நிலையம்



இலத்திரனியல் உற்பத்திக் கைத்தொழில்

## 21. ஜப்பானின் சமூக நிலைமை

i) தந்தை வழிச் சமுதாய முறையே நிலவியது. புதிய யாப்பின்படி குழந்தையை வளர்ப்பது கல்வியை பெற்றுக்கொடுப்பது தந்தையின் பொறுப்பாக காணப்பட்டது.

ii) பெண்களுக்கு போதிய சுதந்திரம் காணப்பட்டது. ஏனெனில் வீட்டுப் பாவனைப் பொருட்கள் நவீன தொழில்நுட்ப வசதி கொண்டிருந்தமை யாகும்.

iii) சமூக நலன்புரிச் சேவைகள் முன்னெடுக்கப்பட்டன.
- தொழிலாளரின் உரிமைகளை பாதுகாக்க தொழிற்சங்கங்கள் அமைக்கப்பட்டன.
- சூழல் மாசடைதலை தடுப்பதற்கு பெருந்தொகை செலவு மேற் கொள்ளப்பட்டன.
- நலன் காப்புச் சட்டங்கள் அறிமுகமாகியது
  உ+ம்: 1) காப்புறுதிச் சட்டங்கள்
  2) வலது குறைந்தோர், குழந்தைகள் நலன்புரிச் சட்டம்
- வீடமைப்புத் திட்டங்கள் அறிமுகம் செய்யப்பட்டமை.
  உ+ம்: 1) 1955ல் அரசு வீடமைப்பில் ஈடுபட்டமை.
  2) தனியாருக்கு வீடமைப்பு கடன் வழங்கப்பட்டமை.

iv) கல்வியில் முன்னேற்றம் காணப்பட்டது. 15வயது வரை கட்டாய கல்விமுறை காணப்பட்டது. நூலகங்கள், நூதனசாலைகள், கல்வி வளர்ச்சியில் பங்கு கொண்டன. பல்கலைக்கழக கல்விவரை முன்னேற்றம் காணப்பட்டது.

v) அணுச்சக்தி உற்பத்தி, விண்வெளி ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப் பட்டன. 1955இல் முதன்முதலாக விண்வெளி ஆய்வில் ஜப்பான் ஈடுபட்டதோடு, 1968இல் முதலாவது செயற்கைக்கோள் விண்ணுக்கு செலுத்தப்பட்டது.

vi) பொதுஜன ஊடகங்கள் முன்னெற்றமடைந்திருந்தன. ஒரு நாளில் 42 மில்லியன் பத்திரிகைகள் விநியோகம் செய்யப்பட்டமை குறிப்பிடத் தக்கது.

vii) ஜப்பானிய பாடசாலை வகைகள்
- ஆரம்பப்பாடசாலைகள் (6 வருடம்)
- இடைநிலைப் பாடசாலைகள் (3 வருடம்)
- உயர்நிலைப் பாடசாலைகள் (3 வருடம்)
- பல்கலைக்கழகங்களும், கல்விக் கலாசாலைகளும் (4 வருடம்)

**22. ஜப்பானின் சமய, கலாசார நிலைமை.**

i) மகாயான பௌத்தமும், ஷின்டோவும் பிரதான சமயமாக உள்ளன. திருமண, மரணச்சடங்குகளின்போது கூடியளவு சமயக் கிரியைகளை மேற்கொண்டனர்.

ii) கலாசாரத்தில் மேலைநாட்டின் கலாசாரமும் செல்வாக்கு செலுத்தி வருகின்றது.
**உ+ம்:** கபுகி, நோ என்பன இன்றும் ஜப்பான் நாட்டின் சம்பிரதாயமாக நடைபெறும் நாடகம் ஆகும்.

iii) பல்வேறு கொண்டாட்டங்கள், தேசிய விழாக்கள் இடம்பெறுகின்றன.
உ-ம்: புதுவருடக் கொண்டாட்டம், இறந்தவர்களுக்கான விழாக்கள் முக்கியமானவை.

iv) ஜப்பானிய இலக்கியங்கள் சீன இலக்கியத்தின் செல்வாக்கிற்கு உட்பட்டிருந்ததோடு பிற்காலத்தில் மேற்கத்தைய அரசியல் தத்துவங் களை உள்ளடக்கியிருந்தன.
**உ+ம்:** ஷேக்ஸ் பியர்,டோல்டஸ்டோய் போன்றோரின் படைப்புக்கள் முக்கியத்துவம் பெற்றுள்ளது.

v) சித்திர, சிற்பக் கலைகளிலும் பிற்காலத்தில் மேற்கத்தய செல்வாக்கு காணப்பட்டது.
**உ+ம்:** ஜப்பானின் உகியோவ் எனும் சித்திரக்கலை ஐரோப்பாவிலும் பரவியுள்ளது.

vi) சம்பிரதாய பூர்வமான சுமோ, ஜீடோ, கெந்தோ (வாள்போர்) போன்ற விளையாட்டுக்கள் முக்கியமானவை. பிற்காலத்தில் குத்துச்சண்டை, மல்யுத்தம், கரப்பந்து, நீச்சல் போன்றனவும் பிரபல்யம் பெற்றுள்ளது.



**சித்திரக் கலை**







1. புத்தர் சிலை
2. ஷின்டோ வழிபாட்டு முறை
3. பௌத்த விகாரை
4. கபுகி நாடகக் காட்சி
5. நோ நாடகக் காட்சி






சுமோ


கராத்தே


ஜூடோ


வாள்ப்போர்


நீச்சல்


கூடைப்பந்து

# சுதந்திரத்தின் பின்னர் இலங்கை 6

**1. இலங்கை சுதந்திரமடைந்ததைத் தொடர்ந்து செயற்படுத்தப்பட்டஆட்சி எது?**

i) பாராளுமன்ற ஜனநாயக முறையிலான ஆட்சி முறை செயற்படுத்தப் பட்டது.

**2. ஜனநாயகம் என்ற பதத்தின் கருத்து**

i) ஜனநாயகம் என்பது "மக்கள் ஆட்சியைக்" குறிக்கிறது.

ii) இதில் ஜன என்பது மக்களையும் நாயகம் என்பது ஆட்சி (தலைமை) என்பதையும் குறிக்கிறது.

**3. ஜனநாயகம் என்பதற்கு அறிஞர்களின் கருத்துக்கள்**

i) **ஆபிரகாம் லிங்கனின் கருத்து:** மக்களால் மக்களுக்காக அமைந்த மக்களின் ஆட்சியே ஜனநாயகம் ஆகும்.

ii) **சீலர் என்பவரது கருத்து:** அனைவருக்கும் உரிமைகள் கிடைக்கும் ஓர் ஆட்சிமுறை ஜனநாயகம் ஆகும்.

iii) **ரூஸோ என்பவரது கருத்து:** சுதந்திரமாக பிறந்த மனிதர் சுதந்திரமாக வாழவேண்டும் என்பதே ஜனநாயகம் ஆகும்.

iv) **ஜோன் லொக் என்பவரது கருத்து:** சகல சட்டப்படியான அரசுகளினதும் ஆட்சியதிகாரம் ஆளப்படும் மக்களினது விருப்பத்திலேயே தங்கி யுள்ளது என்றார்.

**4. ஜனநாயகத்தின் பிரிவுகள்**

i) நேரடி ஜனநாயகம்

ii) பிரதிநிதித்துவ (பாராளுமன்ற) ஜனநாயகம்

**5. நேரடி ஜனநாயகம் என்றால் என்ன?**

i) சகல பிரஜைகளும் பொதுவான இடத்தில் கூடி கலந்துரையாடி முடிவெடுக்கும் ஜனநாயகம் நேரடி ஜனநாயகம் எனப்படும்.

ii) புராதன கிரேக்கத்தில் எதென்ஸ், ஸ்பாட்டா முதலிய நகர அரசுகளில் நேரடி ஜனநாயகம் நிலவியது.

iii) சனத்தொகை அதிகரித்தல், மனிததேவைகள் அதிகரித்தல், அரசியல் கட்சிமுறை சார்ந்த நிர்வாகமுறை போன்றவற்றால் தற்கால உலகிற்கு நேரடி ஜனநாயகம் பொருத்தமற்றுள்ளது.

**6. பிரதிநிதித்துவ ஜனநாயகம் என்றால் என்ன?**

i) வாக்குரிமை உள்ள பிரஜைகள் ஆட்சி நடவடிக்லககளுக்கு தமது பிரதிநிதிகளைத் தேர்தல் மூலம் பாராளுமன்றத்துக்குத் தெரிவு செய்தல் பிரதிநிதித்துவ ஜனநாயகம் ஆகும்.

ii) தற்போது உலகின் பெரும்பாலான நாடுகளில் பிரதிநிதித்துவ ஜனநாயக ஆட்சியே மேற்கொள்ளப்படுகின்றது.

7. **ஜனநாயகம் வெற்றியளிப்பதற்கான அடிப்படைக் காரணிகள்**

i) **சுதந்திரம் :** அனைவரும் சமூகத்தில் கௌரவமாக வாழ்வதற்கான உரிமையை பெற்றிருத்தல் சுதந்திரமாகும்.

ii) **சமத்துவம்:** பிரஜைகள் அனைத்து அடிப்படை உரிமைகளையும் அனுபவிப்பதற்கு சமூகத்திலுள்ள சுதந்திரம் சமத்துவம் ஆகும்.

8. **ஜனநாயகத்தின் வெற்றிக்கான காரணிகள்**

i) சர்வசன வாக்குரிமை
ii) காலத்துக்காலம் தேர்தல் நடைபெறல்
iii) அரசியல் அறிவடைந்த மக்கள் காணப்படல்
iv) அரசியல் கட்சிகள் காணப்படல்.
v) அர்ப்பணிப்புடன் செயற்படும் தலைமைத்துவம் இருத்தல்
vi) சுதந்திரமான ஊடகத்துறை காணப்படல்
vii) சிறுபான்மை, பெரும்பான்மை இனங்களுக்கிடையே புரிந்துணர்வு காணப்படல்.

9. **அரசியல் கட்சிமுறை: பிரதான விடயங்கள்**

i) பிரதிநிதித்துவ ஜனநாயகத்தின் பிரதான ஆயுதம் அரசியல் கட்சியாகும்.

ii) பிரித்தானியாவிலே பாராளுமன்றத்தை நடைமுறைப்படுத்துவதற்காக அரசியல் கட்சிகள் 17ம் நூற்றாண்டிலே தோற்றம் பெற்றன.

iii) அரசியல் கட்சிமுறை இரு வகைப்படும்.
   1. இரு கட்சிமுறை
      - ஒரு நாட்டில் இரண்டு கட்சிகள் மட்டும் காணப்படுதல்
      - பிரித்தானியா, ஐக்கிய அமெரிக்கா போன்றவற்றைக் குறிப்பிடலாம்.
   2. பல கட்சி முறை
      - ஒரு நாட்டில் இரண்டுக்கும் அதிகமான கட்சிகள் காணப்படுதல்
      - ஜேர்மனி, இத்தாலி, இந்தியா, இலங்கை போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

iv) அரசியல் கட்சிமுறையான முக்கியத்துவங்கள்

- பொதுசன அபிப்பிராயம் ஒன்றை ஏற்படுத்த முடிதல்.
- ஓர் அரசாங்கமோ அல்லது ஓர் அரசியல் கட்சியோ தவறு செய்யும்போது அத்தவறுகளை சுட்டிக்காட்டுதல்.
- சமூகத்திற்குத் தேவையான பயன்பாடுள்ள விடயங்களை விமர் சனம் செய்தல்.
- ஆட்சியிலிருப்போரை விழிப்புடன் செயலாற்றுவதற்கு காரணமாக அமைகின்றமை.
- நாட்டில் அமைதி ஏற்படவேண்டுமாயின் அரசியல் கட்சி முறை மூலமே அது சாத்தியமானதாக இருத்தல்.

## 10. இலங்கையில் அரசியல் கட்சிமுறை வளர்ச்சி

i) சுதந்திரத்தை பெறுவதற்காக தேசிய இயக்கங்கள் பல தோன்றிய போதிலும் அவை அரசியல் கட்சிகளாக ஒழுங்கமைக்கப்படவில்லை.

உ+ ம்:-

- 1914ல் தேசிய சீர்திருத்தச் சங்கம் (1912ல் மது ஒழிப்பு இயக்கம்)
- 1919ல் இலங்கை தேசிய சங்கம்
- 1921ல் அகில இலங்கை தமிழ் மக்கள் சபை
- 1927ல் மலைநாட்டு தேசிய சபை

ii) பின்னர் பல்வேறு அரசியல் கட்சிகள் ஆரம்பமானது.

1) 1932ல் A.E.குணசிங்காவின் தலைமையில் இலங்கை தொழிலாளர் இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது. போராட்டங்கள் மூலம் தொழிலாள ரின் உரிமைகளைப் பெற்றுக் கொள்வதே இதன் நோக்கமாகும்.

2) இடதுசாரி இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது. ஆங்கிலம் கற்ற மத்தியதர வர்க்க இளைஞர்கள் பிரித்தானியாவுக்குச் சென்று கல்வி கற்று, தாய்நாடு திரும்பிய பின்னர் இடதுசாரி இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது.

3) 1935ல் இடதுசாரி இயக்க நடவடிக்கையை முன்னெடுக்க கலாநிதி என்.எம்.பெரேரா தலைமையில் லங்கா சமசமாஜக் கட்சி ஆரம் பிக்கப்பட்டது. ஆயினும் கட்சியினுள் ஏற்பட்ட கருத்து வேறுபாடு காரணமாக கட்சி இரண்டாக பிளவுற்றது.

   - 1943ல் S.A. விக்ரமசிங்க தலைமையில் இலங்கை கொமியூனிசக் கட்சி உருவானது.
   - 1943ல் கலாநிதி கொல்வின் ஆர். டி. சில்வா தலைமையில் போல்சபிக் லெனின் கட்சி உருவானது.

4) 1919இல் ஆரம்பிக்கப்பட்ட இலங்கைத் தேசிய காங்கிரஸ் அதன் தலைவரான D.S. சேனநாயக்காவினால் முஸ்லீம் சங்கம், சிங்கள மகாசபை, லங்கா சேவா சங்கம் என்பவற்றை இணைத்து 1946இல் ஐக்கிய தேசியக் கட்சி உருவாக்கப்பட்டது.

iii) பிற்காலத்தில் அபிப்பிராய பேதம் காரணமாக பல்வேறு அரசியல் கட்சிகள் தோன்றின.

1) 1947ல் பொதுத்தேர்தலின் பின்னர் லங்கா சமசமாஜக் கட்சியி லிருந்து விலகிய பிலிப் குணவர்த்தன "புரட்சிகர சமசமாஜக் கட்சி"யை ஆரம்பித்தார்.

2) அகில இலங்கை தமிழ் காங்கிரஸில் இருந்து பிரிந்து சென்ற S.J.V. செல்வநாயகம் 1949ல் "தமிழரசுக் கட்சி"யை ஆரம்பித்தார்.

3) 1951ல் ஐ.தே. கட்சியிலிருந்து விலகிய S.W.R.D. பண்டாரநாயக்க 1952ல் ஸ்ரீலங்கா சுதந்திரக்கட்சியை ஆரம்பித்தார்.



A.E. குணசிங்க



N. M. பெரேரா



S. A. விக்ரமசிங்க



கொல்வின் R.D. சில்வா



பிலிப் குணவர்த்தன



S. J. V. செல்வநாயகம்

**1947ல் பொதுத்தேர்தலில் போட்டியிட்ட அரசியல் கட்சிகள்**

| கட்சிகள் | தலைவர்கள் | கிடைத்த ஆசனங்கள் |
|---|---|---|
| ஐக்கிய தேசிய கட்சி | D.S. சேனநயக்கா | 42 |
| இலங்கை சமசமாஜ கட்சி | கலாநிதி என்.எம்.பெரேரா | 10 |
| போல்ஷேவிக் லெனின் கட்சி | கலாநிதி கொல்வின் ஆர்.டி.சில்வா | 05 |
| இலங்கை கம்யூனிஸ்ட் கட்சி | கலாநிதி எஸ்.ஏ. விக்கிரசிங்க | 03 |
| இலங்கை தொழிலாளர் கட்சி | A.E. குணசிங்க | 01 |
| அகில இலங்கை தமிழ் காங்கிரஸ் கட்சி | G. G.. பொன்னம்பலம் | 07 |
| இலங்கை - இந்திய காங்கிரஸ் கட்சி | தொண்டமான் | 06 |

## இலங்கையின் பிரதமர்கள் (1947- 1977)



D. S. சேனநாயக்கா



டட்லி சேனநாயக்கா



ஜோன் கொத்தலாவை



S.W.R.D. பண்டாரநாயக்கா



W. தகநாயக்க



ஸ்ரீமாவோ பண்டாரநாயக்கா

## 11. இலங்கையின் சுதந்திரத்திற்குப் பணியாற்றிய தலைவர்கள்

### i) சேர். பொன்னம்பலம் அருணாசலம் (14-09-1853 - 09-01-1924)

- தோன்றும் பொழுதே புகழுடன் தோன்றிய பொன்னம்பலம் சகோதரர் மூவருள் அருணாசலம் இளையவர். மூவருமே இலங்கைச் சட்டசபையை அலங்கரித்த அறிவாளிகள்.



சேர்.பொன். அருணாசலம்

- அருணாசலம் தமது காலத்தில் தலை சிறந்த அறிவாளியாகவும், அரசாங்க உத்தியோகத்தராகவும், அரசியல் பண்டித ராயும், அறிவுநூல் புலவராயும், தத்துவ அறிஞராயும், மொழிப்பற்று, நாட்டுப்பற்று, சமயப் பற்று நிறைந்த உத்தமராயும் இருந்து அளப்பரிய சேவை செய்தார் என்றால் அது மிகையாகாது.

- இங்கிலாந்தில் உயர்கல்வி பெற்று நாடுதிரும்பிய இவர் இலங்கைச சிவில் சேவிஸ் என்னும் C.C.S. பரீட்சையில் சித்திபெற்று இலங்கைச் சரித்திரத்தில் C.C.S. பதவியில் அமர்ந்த முதலாவது இலங்கையர் என்ற பெருமையை 1875ல் பெற்றுக் கொண்டார்.
- 1917ல் "எமது அரசியல் தேவை என்னும் தலைப்பில் விக்டோரியா நினைவு மண்டபத்திலே ஆற்றிய உரை இலங்கைத் தலைவர் களைத் தட்டி எழுப்பியது.
- பொதுமக்களின் கல்வித் தரத்தை உயர்த்தப் பாடுபட்ட அருணாசலம் இலங்கை பல்கலைக்கழகத்தின் தந்தை எனப் போற்றப்படுவர். பேராதனைப் பல்கலைக்கழக அவருடைய நினைவு விடுதி அதற்குச் சான்று பகிர்கின்றது.
- 1919ல் இலங்கைத் தொழிலாளரின் நலன்கருதி "இலங்கைத் தொழிலாளர் சேமாபிவிருத்திச் சங்கம்" என்ற பெயரில் முதலாவது தொழிற் சங்கத்தை ஸ்தாபித்தார்.
- இலங்கையர் என்னும் பத்திரிகையை ஆரம்பித்து தேசிய ஒருமைப் பாட்டை உண்டாக்க வழிவகுத்தார்.
- அருணாசலம் அவர்களுடைய அரும்பெரும் சேவைகளை சிங்கள மக்களும் மறக்கவில்லை. பழைய பாராளுமன்ற முகப்பில் அருணாசலத்தின் உருவச் சிலை ஸ்தாபிக்கப்பட்டுள்ளது.

### ii) D.P. ஜயதிலக (1868 - 1944)


D.P. ஜயதிலக

- பிரித்தானியாவில் உயர்கல்வியைக் கற்று பௌத்த கல்வி வளர்ச்சிக்குப் பாடுபட்டார்.
- பௌத்த இளைஞர் சங்கத்தை ஆரம்பிப்பதன் மூலம் ஞாயிற்றுக் கிழமைகளில் அறநெறிப் பாடசாலை நடைபெறுவதற்கு வழிவகுத்தார்.
- 1915 ல் சிங்கள - முஸ்லீம் கலவரத்தின்போது கைது செய்யப்பட்டு மரண தண்டனை விதிக்கப் பட்டிருந்தபோதிலும் அதிலிருந்து விடுபட்டார்.
- "என்னுடைய நோக்கம் தாய்நாட்டிற்குச் சேவை செய்வதே தவிர புகழ் தேடுவதல்ல" எனக் குறிப்பிட்டார்.

### iii) சேர். பொன்னம்பலம் இராமநாதன் (1851 - 1930)


சேர்.பொன்.இராமநாதன்

- றோயல் கல்லூரியில் கல்வி கற்ற இராமநாதன் புகழ்பெற்ற வழக்கறிஞர் றிச்சாட் மோகனிடம் சட்டநூற் பயிற்சி பெற்று 1873ல் வழக்கறிஞராக நியமனம் பெற்றார்.
- 1879ல் சட்டவாக்கக் கழக உறுப்பினராக நியமிக்கப்பட்ட தமிழ் - முஸ்லீம் பிரதி நிதியான இராமநாதன் இலங்கையர் எல்லோருக்குமே சேவை செய்தார்.

- 1919ஆம் ஆண்டு மக்கலம் சீர்திருத்தத்தில் படித்த இலங்கையரா... நியமனம் பெற்றார். இரண்டாவது முறை இராமநாதனுடன் T.S. ஜயவர்த்தனா என்ற சிங்களப் பெரியார் போட்டியிட்டுத் தோல்வி கண்டார்.
- 1915ல் சிங்கள - முஸ்லீம் இனக்கலவரத்திலே விசாரணையின்றிக் கைது செய்யப்பட்ட சிங்களத் தலைவர்களை இங்கிலாந்து சென்று வாதாடி விடுதலையடையச் செய்தார்.

### iv) E.W. பெரேரா (1875 - 1953)



E.W. பெரேரா

- பிறப்பில் கிறிஸ்தவராக இருந்தபோதும் 1915ல் ஏற்பட்ட கலவரத்தில் பிரித்தானியர் பௌத்த, சிங்களத் தலைவர்களை நடாத்திய விதம் கண்டு வேதனையடைந்து அவர் களுடன் சேர்ந்து நியாயத்திற்காகப் பாடு பட்டார்.
- இராமநாதன், ஜேம்ஸ் பீரிஸ், ஹென்றி டி. மெல் ஆகியோருடன் இணைந்து குடியேற்ற நாட்டுச் செயலாளருக்கு மனு ஒன்றைச் சமர்ப்பிக்கும் பொருட்டு இராமநாதன், ஜயதிலக ஆகியோருடன் சிரமமான கடற் பயணத்தை (முதலாம் உலகப் போர் நடை பெற்ற காலத்தில்) மேற்கொண்டார்.
- குடியேற்ற நாட்டுச் செயலாளருக்கு சமர்ப்பிக்க வேண்டிய மனுவை தனது பாதணிக்குள் வைத்து பயமின்றிப் பாதுகாப்பாக எடுத்துச் சென்றார். இவரது துணிச்சல் மிக்க செயற்பாட்டால் மக்கள் "கோட்டைச் சிங்கம்" என அழைத்தனர்.

### v) F.R. சேனநாயக்க (1882 - 1926)



F.R. சேனநாயக்க

- 1912ல் மதுவரிச் சட்டத்தை எதிர்த்தார். மது ஒழிப்புக்காக ஒவ்வொரு கிராமங் களிலும் மது ஒழிப்புச் சங்கங்களை ஆரம்பித்தார்.
- 1915 இனக் கலவரத்தில் கைது செய்யப் பட்டு சிறையில் அடைக்கப்பட்ட இவர் சிறிது காலத்தில் விடுதலையாகிய போதும் ஏனையவர்களின் விடுதலைக் காகப் பாடுபட்டார்.
- 1919ல் இலங்கைத் தேசிய காங்கிரசின் உருவாக்கத்தில் முன்னோடியாகச் செயற் பட்டார்.
- இவரது சேவைகளை நினைவு கூரும் முகமாக பழைய பாராளு மன்றத்தின் முன்னால் நினைவுச் சின்னம் அமைக்கப்பட்டுள்ளது.

## vi) A.E. குணசிங்க (1891 - 1967)

- 1915ல் இளைஞர் இலங்கை மன்றத்தை ஆரம்பித்து தொழிலாளர் களின் பிரச்சனைகளுக்குத் தீர்வு காண முனைந்தார்.
- இலங்கைத் தேசிய காங்கிரசின் உறுப்பினர்களுள் தீவிரவாதக் குழுவின் தலைவராகச் செயற்பட்டார்.
- தொழிலாளர்களின் உரிமைகளை வென்றெடுப்பதற்காக வேலை நிறுத்தப் போராட்டங்களில் ஈடுபட்டார்.

  உ+ம்:- 1923ல் புகையிரத சேவை வேலை நிறுத்தம்
- ஆங்கில ஆட்சியாளர்களின் தலைவரிக்கு எதிர்ப்புத் தெரிவித்து பாதையில் கல்லுடைக்கும் போராட்டத்தை ஆரம்பித்தார்.
- கொழும்பு மாநகர சபையின் முதலாவது சிங்கள மேயர் என்ற பெருமை இவரையே சாரும்.
- புத்தகாயாவை மீட்பதற்காக அநகாரிக தர்மபாலவுடன் சேர்ந்து போராட்டங்களை மேற்கொண்டார்.

## vii) C.W.W. கன்னங்கரா (1884 - 1969)

- வறுமையான குடும்பத்தில் பிறந்தபோதும் கல்வியில் ஆர்வம் உடையவராக விளங் கினார்.
- 1915ல் இனக்கலவரத்தில் சிறையில் அடைக்கப்பட்ட தலைவர்களை மீட்கும் போராட்டத்தில் பங்குகொண்டு அரசியலில் ஈடுபாடு காட்டினார்.
- 1931ல் அரசு கழகத்திற்குத் தெரிவாகி கல்வி அமைச்சராகப் பதவி பெற்று 1947வரை சேவை புரிந்தார்.



C.W.W. கன்னங்கரா

- பாலர் வகுப்பு முதல் பல்கலைக்கழகம் வரை இலவசக் கல்வியைப் பெறும் வாய்ப்பைப் பெற்றுத் தந்ததால் இலவசக் கல்வியின் தந்தை எனப் போற்றப்படுகிறார்.

## viii) S.A. விக்கிரமசிங்ஹ (1901 - 1981

- பிரித்தானியா சென்று வைத்தியக் கல்வியைப் பெற்று நாடு திரும்பினார்.
- லண்டன் இலங்கையர் சங்கத்தின் இணைச் செயலாளராக R.D.சில்வாவுடன் இணைந்து செயற்பட்டார்.
- 1943ல் கொம்மியூனிஸ்ட் கட்சியை ஸ்தாபித்து அதன் தலைவராகச் செயற்பட்டார். "வெற்றி, சுதந்திரம், சமூக வளர்ச்சி என்பவற்றிற் காக ஒன்றிணைவோம்" என்பதே இக்கட்சியின் வாசகமாகும்.
- "எதிர்கால வழி" என்னும் நூலை எழுதி இலங்கையின் எதிர்காலப் பொருளாதாரத்திற்கு வழிகாட்டினார்.

ix) **D.P. ஜாயா (1890 - 1981)**



டி.பி. ஜாயா

- 20ம் நூற்றாண்டின் ஆரம்ப தசாப்தங்களில் இலங்கைத் தேசிய இயக்கத்தினதும் இஸ்லாமிய மக்கள் பிரிவினதும் திட்டமிடற் பணிகளில் ஈடுபட்டனர்.
- தர்மராஜா வித்தியாலயம், ஆனந்தாக் கல்லூரி ஆகிய பாடசாலைகளில் ஆசிரியராகக் கடமை யாற்றி முஸ்லீம் மக்களின் கல்வித் தரத்தை உயர்த்துவதில் ஆர்வம் காட்டினார்.
- முஸ்லீம் சங்கத்தின் உறுப்பினராக இருந்த இவர் 1919ல் தேசிய சங்கத்தில் உறுப்பினராகி சமகால சிங்கள, தமிழ் தலைவர்களுடன் இணைந்து பிரித்தானிய ஏகாதிபத்திய எதிர்ப்பியக்கத்தின் முன்னோடியாகச் செயற்பட்டார்.
- 1921ல் சாஹிராக் கல்லூரியின் அதிபராகப் பதவியேற்று வீழ்ச்சி யுற்றிருந்த கல்லூரியை வளர்ச்சிப் பாதைக்கு இட்டுச் சென்றார்.
- D.S. சேனநாயக்க தலைமையிலான கெபினட் அமைச்சரவையில் தொழிலாளர் மற்றும் சமூக சேவை அமைச்சராகப் பதவி வகித்தார்.

x) **தேசபிதா D.S. சேனநாயக்கா (1884 - 1952)**

- தமது பெருந்தோட்டங்களை நிர்வாகம் செய்து கொண்டிருந்த இவர் சகோதரர் F.R. சேனநாயக்கா ஆரம்பித்த மது ஒழிப்பு இயக்கத்தின் நடவடிக்கைகளுடன் தொடர்புபட்டிருந்தார்.
- இலங்கைத் தேசிய காங்கிரஸின் உறுப்பினராகச் செயற்பட்ட இவர் அரசியல் யாப்பு சீர்திருத்த இயக்கத்தின் செயற்திறன் மிக்க உறுப்பினராகவும் செயற்பட்டார்.
- 1931ல் அரச கழகத்திற்குத் தெரிவாகி விவசாயக் காணி நிர்வாக குழுவின் தலைவராகப் பதவி வகித்தார். அப்போது இராஜ ரட்டைப் பகுதியில் மேற்கொண்ட விவசாய அபிவிருத்திச் செயற் பாடுகள் முக்கியமானதாகும்.
- 1935ல் "விவசாயமும் தேசத்தின் நீர்வளமும்" என்னும் பெயரில் நூலினை எழுதி விவசாயத்தின் முக்கியத்துவத்தை விளக்கினார்.
- சோல்பரி யாப்பின் கீழ் பிரதமரான இவர் இலங்கையின் முதற் பிரதமர் என்ற சிறப்பைப் பெற்றார்.
- முதலாவது பலநோக்கு அபிவிருத்தித் திட்டமாக கல்லோயாத் திட்டத்தினை ஆரம்பித்து வெற்றி கொண்டார்.

## 12. அமைச்சரவை (கெபினட்) முறை

i) 1947 சோல்பரி அரசியல் திட்டத்தின் மூலமே கெபினட் எனப்படும் அமைச்சரவை அறிமுகப்படுத்தப்பட்டது.

ii) அமைச்சரவைக்கு பிரதமரே தலைவராவர்.

iii) அமைச்சரவையின் பொறுப்புக்கள்

- நிர்வாக அதிகாரம் பற்றிய முழுப்பொறுப்பும் அமைச்சரவை சார்ந்த தாகும்.
- பொதுநிதியை கையாளுதல் தொடர்பான முழுப்பொறுப்பு
- அபிவிருத்தி திட்டங்கள் தயாரித்துச் சமர்ப்பித்தல்.

iv) அமைச்சரவையின் கூட்டுப்பொறுப்பு

- அரசாங்கம் செயற்படுத்த உத்தேசித்துள்ள சட்டங்களைப் பற்றி அமைச்சர்கள் அமைச்சரவையில் கருத்து தெரிவிக்க முடியும்.
- ஆயினும் அமைச்சரவைக் கலந்துரையாடலின் பின்னர் அமைச்சரவை மேற்கொள்ளும் முடிவுகளில் அனைத்து அமைச்சர்களுக்கும் கூட்டுப்பொறுப்பு இருந்தது.
- அமைச்சரவை மேற்கொள்ளும் முடிவுகளுக்குக் கூட்டுப்பொறுப்பு வகிக்கமுடியாத அமைச்சர் ஒருவர் இருந்தால் அவர் தனது அமைச்சர் பதவியிலிருந்து விலகிக் கொள்ள முடியும்.
- அமைச்சர் ஒருவர் பகிரங்கமாக அமைச்சரவைச் செயற்பாடுகளை விமர்சித்தால் அவரை நீக்கும் உரிமை பிரதமரிடம் காணப்பட்டது.
- எவ்வாறாயினும் அமைச்சரவை பாராளுமன்றத்திற்கு பொறுப்பு கூற கடமைப்பட்டிருந்தது.



இலங்கையின் முதலாவது அமைச்சரவை (சோல்பரி யாப்பு)

## 13. அரசியல் யாப்புச் சீர்திருத்தங்கள்

i) 1972ல் முதலாம் குடியரசு அரசியல் யாப்பு
i) 1978ல் இரண்டாம் குடியரசு அரசியல் யாப்பு

## 14. 1972ல் முதலாம் குடியரசு அரசியல் யாப்பு

i) சோல்பரி யாப்பின்படி "டொமியன் அந்தஸ்து" எனும் சுயாட்சி மட்டுமே இலங்கைக்கு கிடைத்தமையால் புதிய அரசியல் யாப்பொன்று தேவைப்பட்டது.

ii) 1970ல் தேர்தலில் புதிய அரசியல் யாப்பை முதன்மைப்படுத்தி வெற்றி பெற்ற சிறிமாவோ பண்டாரநாயக்க யாப்புத்திட்டசபையை நிறுவினர்.

ii) 1972ல் முன்வைக்கப்பட்ட முதலாம் குடியரசு யாப்பின் நோக்கங்கள்

- இலங்கையைத் தன்னாதிக்கமும் இறைமையும்கொண்ட குடியர சாக்குதல்.
- சோசலிச, ஜனநாயக சமூகமொன்றைக் கட்டியெழுப்புவதற்கு யாப்பு ரீதியான கட்டமைப்பு ஏற்படுத்தல்.
- நாட்டுமக்களின் சுதந்திரம் மற்றும் அடிப்படை உரிமைகளைப் பாதுகாப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளல்.

iv) இலங்கை "ஸ்ரீலங்கா" என அழைக்கப்பட்டதோடு அரசகரும மொழியாக சிங்களமொழி பிரகடனப்படுத்தப்பட்டது.

## 15. 1972ல் முதலாம் குடியரசு யாப்பின் முக்கிய அம்சங்கள்

i) **மக்கள் இறைமை :** ஆட்சி அதிகாரம் மக்களிடம் உள்ளது. சர்வஜன வாக்குரிமை, அடிப்படை மனித உரிமை என்பன யாப்பினால் பாதுகாப்பட்டதோடு மக்கள் இறைமை தேசிய அரச பேரவையிடம் ஒப்படைக்கப்பட்டது.

ii) **அடிப்படை உரிமைகளும், சுதந்திரங்களும் :** இலங்கை மக்களுக்குரிய அடிப்படை உரிமைகள் முதன்முதலில் இவ்யாப்பிலே கூறப்பட்டி ருந்தது.

iii) **குடியரசு ஜனாதிபதி:** அரசின் தலைவர் ஜனாதிபதி ஆவார். இவர் பிரதமரால் தெரிவு செய்யப்படுவார். பதவிக்காலம் 04 ஆண்டுகளாகும் இவர் தனது அனைத்துக் கருமங்களையும் பிரதமரின் ஆலோசனை யின் பெயரில் மேற்கொள்வார் ஆதலால் "பெயரளவிலான ஜனாதிபதி" யாகவே விளங்குவர்.

vi) **தேசிய அரசுப்பேரவை:** இரு சபைகளைக் கொண்ட பாராளுமன்றம் நீக்கப்பட்டு ஒற்றைச் சபையைக் கொண்ட தேசிய அரசுப்பேரவை நிறுவப்பட்டது.

v) **பிரதமரின் தலைமையிலான அமைச்சரவை:** பொதுத்தேர்தலின் பின்பு பெரும்பான்மையினரின் ஆதரவை பெற்றவர் ஜனாதிபதியினால் பிரதமராக நியமிக்கப்படுவார். அமைச்சரவை சார்ந்த எந்தவொரு முடிவும் பிரதமரே மேற்கொள்வார்.

vi) **நீதிச்சேவை:** சோல்பரி யாப்பில் இருந்த நீதித்துறை அதிகாரங்கள் பிரித்தானிய கவுன்சிலிடம் இருந்து "இலங்கையின் நீதித்துறை அமைப்புக்களிடம்" ஒப்படைக்கப்பட்டது.

## 16. தேசிய அரசுப் பேரவையின் கடமைகள்

i) மக்களின் சடட்மியற்றும் அதிகாரத்தை செயற்படுத்தல்

ii) பொது நிதியைப் பரிபாலனம் செய்தல்

iii) நாட்டின் பாதுகாப்பை உறுதிப்படுத்துவதுடன் மக்களின் குறைபாடுகளைத் தீர்த்தல்.

iv) அரசியல் யாப்புச் சீர்திருத்தம், யாப்பு மாற்றம் முதலியனவற்றை மேற்கொள்ளுதல்.

## 17. 1972 முதலாம் குடியரசு யாப்பில் காணப்பட்ட குறைபாடுகள்

i) சோல்பரி யாப்பிலிருந்து அரசியல் விடயங்களின் அடிப்படையில் 1972ன் யாப்பில் மாற்றப்படவில்லை.

**உதாரணம்**

| சோல்பரி | 1972ன் யாப்பு |
|---|---|
| 1) மந்திரி சபை அரசாங்கமுறை | மந்திரிசபை அரசாங்க முறை |
| 2) மகாதேசதிபதி பெயரளவு நிர்வாகி | ஜனாதிபதி பெயரளவு நிர்வாகி |
| 3) அமைச்சரவையின் தலைவர் பிரதமர் | அமைச்சரவையின் தலைவர் பிரதமர் |

ii) சிங்கள மொழி மட்டும் அரச மொழியாகவும் பௌத்தமதத்தை அரச மதமாகவும் கொண்டு வந்ததன் மூலம் இந்த நாடு சிங்கள பௌத்த நாடு என்ற கருத்து காணப்பட்டது.

iii) சிறுபான்மையினரின் நலன் புறக்கணிக்கப்பட்டது.

iv) அடிப்படை உரிமைகள் வரையறுக்கப்பட்டதாகவும், மீறப்படுமிடத்து பரிகாரமும் கூறப்படவில்லை.

v) தேர்தல் முறைகளில் குறைபாடு காணப்பட்டது.

## 18. 1978 இரண்டாம் குடியரசு யாப்பு: முக்கிய அம்சங்கள்

i) 1977 தேர்தலில் ஐ.தே. கட்சிக்கு கிடைத்த பெரு வெற்றி காரணமாக புதிய அரசியல் யாப்பு தோற்றம் பெற்றது.

ii) இரண்டாம் குடியரசு யாப்பின் நோக்கங்கள்

- ஜனநாயக சோஷலிசக் குடியரசின் நோக்கங்களை அடைதல்
- பிரதிநிதித்துவ ஜனநாயகத்தின் வெற்றிக்காக நிலையான குடியரசுக் கொள்கைகளை உறுதிப்படுத்தல்.
- தார்மீக சுதந்திர அரசொன்றை உருவாக்கல்
- சுதந்திரம், சமத்துவம், நீதி, அடிப்படை உரிமை, சுயாதீனமான நீதிமன்றம் என்பவற்றை உறுதிப்படுத்தல்.

iii) யாப்பின் பிரதான விடயங்கள்

- மக்கள் இறைமை
- அடிப்படை உரிமைகள்
- குடியரசின் ஜனாதிபதி
- பாராளுமன்றம்
- அமைச்சரவை

- மகாணசபை அரசாங்கமுறை
- விகிதாசார பிரநிதித்துவம்

**19. மக்கள் இறைமை**

i) 1972ம் ஆண்டு அரசியல் திட்டத்தை போலவே மக்கள் இறைமை 1978ம் ஆண்டு யாப்பாலும் சேர்க்கப்பட்டது.

ii) இதன்படி இலங்கை சுதந்திரமும் இறைமையும் கொண்ட ஒரு குடியரசு என்றும், குடியரசு ஒற்றை ஆட்சியாகவே இருக்கும் எனவும் கூறப்பட்டது.

iii) இவ் இறைமை ஆட்சித்தத்துவங்கள், அடிப்படை உரிமைகள், வாக்குரிமை என்பவற்றை உள்ளடக்கியது.

iv) மக்கள் இறைமை செயற்படும் விதம்
- வாக்குரிமையைச் செயற்படுத்தல்
- அடிப்படை மனித உரிமைகளை அனுபவித்தல்
- சட்டம், நிர்வாகம், நீதி எனும் மூன்று அதிகாரங்களையும் மக்கள் உரிமையாக்குதல்.

v) மக்கள் இறைமையை பிரயோகித்தல்
- மக்களின் சட்ட அதிகாரம்: மக்களால் தேர்தல் மூலம் தெரிவு செய்யப்படும் பாராளுமன்ற உறுப்பினர்கள் பாராளுமன்றத்தில் சட்டங்களை உருவாக்குவர்.
- மக்களின் நிர்வாக அதிகாரம்: மக்களால் நேரடியாக தேர்தல் மூலம் தெரிவு செய்யப்படும் அமைச்சரவையும் நிர்வாக நடவடிக்கை களை மேற்கொள்ளும்.
- மக்களின் நீதிமன்றம்: ஜனாதிபதியினால் நியமனம் செய்யப்படும் நீதிபதிகளால் நீதித்துறை செயற்படும்.

**20. அடிப்படை உரிமைகள்**

i) 1978ம் ஆண்டு யாப்பின் மூன்றாம் அத்தியாயத்தில் அடிப்படை மனித உரிமைகள் விரிவாக கூறப்பட்டுள்ளது.

ii) அவற்றுள் முக்கியமான அடிப்படை உரிமைகள் பற்றிய ஏற்பாடு
- சிந்தனைச் சுதந்திரம்
- பேச்சு சுதந்திரம்
- மனச்சாட்சியை பின்பற்றும் சுதந்திரம்
- சமயச் சுதந்திரம்
- அமைதியாக ஒன்று கூடும் சுதந்திரம்
- உடல்சார்ந்த இம்சைகளிலிருந்து தன்னைப் பாதுகாக்கும் சுதந்திரம்
- காரணமின்றி கைதுசெய்தல், தடுத்து வைத்தல், தண்டனைக் குள்ளாதல் போன்றவற்றை தவிர்க்கும் சுதந்திரம்.
- தாய்மொழியை பயன்படுத்தல், தமது கலாச்சாரத்தை பேணுதல் சார்ந்த சுதந்திரம்.
- சட்டத்தின் முன்னிலையில் நீதியைப் பெற்றுக்கொள்ளும் சுதந்திரம்.

- நாட்டை விட்டு வெளியேறல், மீண்டும் நாட்டுக்கு வருதல் சார்ந்த சுதந்திரம்.

**21. அடிப்படை உரிமைகளை பாதுகாப்பதற்கு அரசியல் யாப்பில் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள்.**

i) **உயர் நீதிமன்றில் முறையீடு செய்தல்:** பிரஜை ஒருவரின் அடிப்படை உரிமை மீறப்பட்டால் அதனை விசாரித்து நியாயம் வழங்கும் அதிகாரம் உயர்நீதி மன்றத்திடமே உள்ளது.

ii) **நிர்வாக விவகாரங்களுக்கான ஆணையாளர் (ஒம்புட்ஸ்மன் / குறைகேள் அதிகாரி) பதவி ஏற்படுத்தப்பட்டமை:** அரசாங்கத்தின் நிர்வாக கருமங்களை நடைமுறைப்படுத்தும் அரச ஊழியர்களின் அடிப்படை உரிமைகள் மீறப்படும்போது இவ்வதிகாரி மூலம் நியாயத்தை பெறமுடியும்.

**பாராளுமன்றத் தேர்தலில் செல்லுபடியாகும் மாதிரி வாக்குச் சீட்டு**

| | | |
|---|---|---|
| கட்சி | △ | X |
| கட்சி | ⬡ | |
| கட்சி | ◠ | |
| சுயேச்சை 1 | ○ | |
| சுயேச்சை 2 | □ | |

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ~~1~~ | ~~2~~ | ~~3~~ | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |

| | | |
|---|---|---|
| கட்சி | △ | X |
| கட்சி | ⬡ | |
| கட்சி | ◠ | |
| சுயேச்சை 1 | ○ | |
| சுயேச்சை 2 | □ | |

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |

**22. வாக்குரிமை**

i) 1978 அரசியல் யாப்பின்படி வாக்காளர் ஒருவருக்கு இருக்க வேண்டிய தகுதிகள்
- இலங்கைப் பிரஜையாக இருத்தல் வேண்டும்
- 18 வயதை பூர்த்தி செய்திருத்தல் வேண்டும்
- வாக்காளர் பதிவேட்டில் பெயர் பதிவு செய்யப்பட்டிருத்தல் வேண்டும்.

ii) பின்வரும் தேர்தல் முறைகளின்போது வாக்குரிமையை பயன்படுத்தல்
- ஜனாதிபதித் தேர்தல்
- விகிதாசார பிரதிநிதித்துவ தேர்தல்

1) பாராளுமன்ற தேர்தல்
2) மாகாணசபைத் தேர்தல்
3) உள்ளூராட்சி மன்றத் தேர்தல்
4) பொதுசன அபிப்பிராய வாக்கெடுப்பு (மக்கள் ஒப்பம் கோரல்)

iii) வாக்குரிமையை பயன்படுத்தும்போது கவனிக்கவேண்டிய விடயங்கள்.
- தேர்தல் விஞ்ஞாபனத்திற்கு ஏற்ப வாக்களித்தல்.
- தலைமைத்துவத்திற்கு பொருத்தமான பக்கச்சார்பில்லாதவர்களைத் தெரிவு செய்தல்.

- சரியான முறையில் வாக்குகளை பயன்படுத்துதல்.
- சுதந்திரமாக சிந்தித்து வாக்களித்தல்.
- சுயநலன் கருதாது பொதுநலன் கருதி வாக்களித்தல்.

**பாராளுமன்றத் தேர்தலில் செல்லுபடியாகாத மாதிரி வாக்குச் சீட்டு**

| | | |
|---|---|---|
| கட்சி | △ | X |
| கட்சி | ⬡ | X |
| கட்சி | ◠ | |
| சுயேச்சை 1 | ○ | |
| சுயேச்சை 2 | □ | |

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ~~1~~ | ~~2~~ | ~~3~~ | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |

| | | |
|---|---|---|
| கட்சி | △ | |
| கட்சி | ⬡ | |
| கட்சி | ◠ | |
| சுயேச்சை 1 | ○ | |
| சுயேச்சை 2 | □ | |

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ~~1~~ | ~~2~~ | ~~3~~ | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |

**23. வாக்குரிமையின் முக்கியத்துவங்கள்**

i) தம்மை நிர்வகிப்பதற்கு தகைமையுடையோரை தெரிவு செய்தல் அல்லது தகைமையுடைய அரசியல் கட்சியை தெரிவு செய்தல். அதே வேளை தாம்விரும்பாத ஆட்சியை நீக்குதல் என்பவற்றுக்காக மக்களுக்கு வழங்கப்பட்ட ஒரு வலுவான சக்தியே வாக்குரிமை யாகும்.

ii) தாம் தெரிவு செய்யப்பட்ட தொகுதிக்கு மட்டுமன்றி பொதுவாக நாட்டின் நலனுக்காகவும் விருத்திக்காகவும் பணியாற்றுவதற்கு மக்களின் பிரதிநிதிகளை தூண்டுவது வாக்குரிமையே ஆகும்.

iii) பொரும்பான்மையோர் விருப்பத்திற்கு அமைய ஆட்சியாளர்கள் நியமிக்கப்படுகின்றமை வாக்குரிமை மூலமேயாகும்.

**24. விகிதாசார பிரதிநிதித்துவ முறை:**

i) ஒரு தேர்தலில் அரசியல் கட்சிகளுக்கும் சுயேட்சைக் குழுக்களுக்கும் கிடைத்த மொத்த வாக்குகளிற்கு ஏற்ப விகிதாசார அடிப்படையில் ஆசனங்களை ஒதுக்கும் தேர்தல் முறையே விகிதாசார பிரதிநிதித்துவ முறையாகும்.

ii) இத்தேர்தல் முறை சுவிஸ், பிரான்ஸ், பெல்ஜியம், டென்மார்க், ஜேர்மனி போன்ற நாடுகளில் நடைமுறைகளில் உள்ளது.

iii) இலங்கையில் முன்னர் காணப்பட்ட தொகுதிவாரி தேர்தல் முறையில் காணப்பட்ட குறைபாடுகளே விகிதாசார தேர்தல் முறை அறிமுகமாக காரணமாகியது.

iv) விகிசார பிரதிநிதித்துவ முறையின் பண்புகள்

1) பாரிய தேர்தல் தொகுதிகள் காணப்படும்
உ-ம்: தேர்தல் மாவட்டங்கள் (22)

2) வேட்பாளர்கள் குழுவாக தேர்தலில் போட்டியிடுவதுடன் தமக்கென ஓர் இலக்கத்தைப் பெற்றிருப்பர்.

- வாக்குகளை அளிக்கும்போது தாம் விரும்பிய கட்சிக்கும் அதன் பட்டியலிலுள்ள மூவருக்கும் விருப்பு வாக்குகளை அளித்தல்.
- தேர்தல் தொகுதி ஒன்றுக்கு உறுப்பினர்கள் குழுவொன்று தெரிவு செய்யப்படும்.
- தேர்தலின்போது கட்சிகள் பெற்றுக்கொண்ட வாக்குகளின்படி விகிதாசார முறைப்படி உறுப்பினர் எண்ணிக்கை தீர்மானிக்கப்படுவதுடன் வேட்பாளர் பெற்றுக் கொண்ட விருப்பு வாக்குகளின் அடிப்படையிலும் தெரிவு இடம்பெறும்.
- அதிக வாக்குகளை பெற்ற கட்சிக்கு மேலதிக (Bonus) ஆசனமும் வழங்கப்படும்.

**விகிதாசார தேர்தல் மாதிரி**

தேர்தல் மாவட்டம் - யாழ்ப்பாண மாவட்டம்
தெரிவு செய்யப்பட வேண்டிய அங்கத்தவர் எண்ணிக்கை - 9
அளிக்கப்பட்ட செல்லுபடியான வாக்குகள்

| | |
|---|---|
| A கட்சி | - 60 000 |
| B கட்சி | - 40 000 |
| C கட்சி | - 17 000 |
| D கட்சி | - 5 000 |
| சுயேட்சை 2 | - 4 800 |
| சுயேட்சை 1 | - 3 200 |
| | 1 30 000 |

- 5% க்கு குறைவான வாக்குகளை D கட்சி, சுயேட்சை 2, 1 ஆகியன பெற்றதால் தேர்தல் கணிப்பிலிருந்து விலத்தப்பட்டுள்ளது. எனவே மொத்த வாக்குகள்
(1 30 000 - 13 000) 117 000 ஆகும்.
- அதிகூடிய வாக்கினை பெற்ற A கட்சிக்கு 1 போனஸ் ஆசனம் கிடைக்கும்.
- தகுதிகாண் எண்ணிக்கை 1 17 000 ÷ 8 = 14 500

| கட்சி | பெற்ற வாக்குகள் | போனஸ் ஆசனம் | முதல் ஒதுக்கீடு | மீதி வாக்குகள் | 2ம் ஒதுக்கீடு | மொத்த ஆசனம் |
|---|---|---|---|---|---|---|
| A | 60 000 | 01 | 04 | 2 000 | - | 05 |
| B | 40 000 | - | 02 | 11 000 | 01 | 03 |
| C | 17 000 | - | 01 | 2 500 | - | 01 |

**25. விகிதாசார பிரதிநிதித்துவ முறையின் அனுகூலங்கள்**

i) பெரும்பாண்மை வாக்காளர்கள் விரும்புகின்ற கட்சியை சேர்ந்தவரே உறுப்பினராக வரக்கூடிய நிலையும் கட்சிகள் பெற்றுக்கொண்ட வாக்குகளின் விகிதாசாரத்திற்கு ஏற்ப உறுப்பினர் தெரிவு செய்யக் கூடிய நிலையும் காணப்படுதல் ஜனநாயகத் தன்மையை வெளிப் படுத்துகிறது.

ii) இத்தேர்தல் முறைமூலம் கூட்டரசாங்கம் அமைக்க வேண்டிய நிலை உருவாகின்றது. இதனால் அரசாங்கம் சர்வதிகார தன்மையை நீக்கி

ஏனைய கட்சிகளின் கொள்கைகளுக்கும் அரசு மதிப்பளிக்கும் நிலை உருவாகின்றது.

iii) சிறிய கட்சிகளுக்கும் பாராளுமன்ற செயல்முறையில் பங்குகொள்ளக் கூடியதாக இருத்தல்.

iv) மக்கள் பிரதிநிதிகள் பரந்த பிரதேசம் ஒன்றுக்கு சேவை செய்யும் வாய்ப்பு கிடைத்தல்.

**26. விகிதாசார பிரதிநிதித்துவ முறையின் பிரதிகூலங்கள்**

i) வாக்காளர் இலகுவில் விளங்கிக்கொள்ளக்கூடிய தேர்தல் முறையாக காணப்படாததால் பெருமளவு வாக்குகள் நிராகரிக்கப்படுகிறது

ii) கட்சியினது அல்லது சுயேட்சைக் குழுவினது கொள்கைகளை ஏற்றுக்கொள்ளாத ஒருவர் தனித்து போட்டியிட்டு பாராளுமன்றம் செல்ல முடியாதுள்ளது.

iii) நிலையான அரசாங்கத்தை அமைக்க முடியாமை

iv) செலவு கூடிய தேர்தல் முறையாகும்.

v) ஒவ்வொரு தேர்தல் தொகுதிக்கும் அங்கத்தவர்கள் இல்லாமை

vi) ஒரு கட்சிக்குள்ளேயே போட்டி நிலவுதல்

**27. பொதுசன அபிப்பிராய வாக்கெடுப்பு**

i) மக்கள் யாப்பு நடவடிக்கைகளில் நேரடியாகப் பங்குபற்றுவதற்கான சந்தர்ப்பமாக உள்ளது.

ii) பொதுசன அபிப்பிராய வாக்கெடுப்பை நடத்துவதற்கான முடிவெடுக்கும் அதிகாரம் ஜனாதிபதியிடம் உள்ளது.

iii) பொதுசன அபிப்பிராய வாக்கெடுப்பினை நடத்துவதற்கான நடவடிக்கைகளைப் பாராளுமன்றம் மேற்கொள்ளும்.

iv) தேர்தல் ஆணையாளர் நாயகம் அதற்கேற்ப நடுநிலையான தேர்தல் ஒன்றை நாடு முழுவதும் ஒரு தொகுதியாக கருதி நடத்த வேண்டும்.

v) தேர்தலின் பொது வாக்காளர்கள் "ஆம்" அல்லது. "இல்லை" என்று வாக்களிக்க வேண்டும்.

vi) ஆம் அல்லது இல்லை எனும் கருத்தைத் தெளிவாகப் பிரித்தறியக் கூடிய இரண்டு சின்னங்களைத் தெரிவு செய்து தேர்தல் ஆணையாளர் நாயகம் பொதுமக்களுக்கு அறிவூட்ட வேண்டும்.

vii) தேர்தல் முடிவுகளை தேர்தல் ஆணையாளர் ஜனாதிபதிக்கு அறிவிக்க வேண்டும்.

viii) மொத்த வாக்குகளில் 2/3 பங்கு அல்லது அளிக்கப்பட்ட வாக்குகளில் பெரும்பாண்மையை பெற்ற கருத்து ஆலோசனையாகக் கருதப்பட்டு ஜனாதிபதியின் கையொப்பத்தால் ஆமோதிக்கப்பட்ட பின்னர் அது சட்டமாகக் கருதப்படும்.

**28. நிறைவேற்று அதிகாரமுடைய ஜனாதிபதி முறை.**

i) 1972ம் ஆண்டு யாப்பின்படி இருந்த பெயரளவிலான ஜனாதிபதி

முறைக்கு பதிலாக 1978ம் ஆண்டு இரண்டாம் குடியரசு யாப்பில் நிறைவேற்று அதிகாரம் கொண்ட ஜனாதிபதி முறை அறிமுகமானது.

ii) ஜனாதிபதியினை நாட்டு மக்கள் "ஜனாதிபதித் தேர்தல்" மூலம் தெரிவுசெய்வார். இவர் பிரதம நீதியரசர் முன்னிலையில் பதவி ஏற்பார்.

iii) ஜனாதிபதி அரசின் தலைவராகவும் நிர்வாகத்தின் தலைவராகவும் மற்றும் முப்படைகளின் தளபதியாகவும் விளங்குவர்.

**இலங்கையின் நிறைவேற்று ஜனாதிபதிகள்**



J.R. ஜெயவர்த்தனா
(1978 - 1989)



R. பிரேமதாசா
(1979 - 1993)



D.P. விஜயதுங்க
(1993 - 1994)



சந்திரிக்கா குமாரதுங்க
(1994 - 2005)



மகிந்த ராஜபக்ஷ
(2005 - இன்று வரை)

iv) ஜனாதிபதி பதவிக்கு போட்டியிடும் ஒருவர் கொண்டிருக்க வேண்டிய தகமைகள்
- இலங்கைப் பிரஜையாக இருத்தல்
- 30 வயது பூர்த்தியாயிருத்தல்
- தேர்தல் டாப்பில் ஒரு வாக்காளராக தனது பெயரை கொண்டிருத்தல்

- பாராளுமன்ற அங்கத்தவராக தெரவு செய்யப்படுவதற்கான தகமைகளை கொண்டவராக இருத்தல்.
- மக்களால் இரு தடவை ஜனாதிபதியாக தெரிவு செய்யப்படாத வராக இருத்தல்.
- ஜனாதிபதி பதவியிலிருந்து நீக்கப்படாதவராக இருத்தல்.

**29. ஜனாதிபதி தேர்தலில் தெரிவு செய்யப்படும் முறை**

i) நாடு முழுவதுமாக ஒரு தேர்தல் தொகுதியாக கருதி ஜனாதிபதித் தேர்தல் நடைபெறும்.

ii) தேர்தலில் மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட வேட்பாளர்கள் போட்டியிடும் பட்சத்தில் வாக்காளர் தாம் விரும்பியவர்களுக்கு வாக்களித்த பின்னர் விரும்பு வாக்கினையும் அளிக்கலாம். (மூன்று வேட்பாளராயின் ஒரு விருப்பு வாக்கும் அதற்கு மேலான வேட்பாள ராயின் இரண்டு விருப்பு வாக்கும் உண்டு)

iii) செல்லுபடியான வாக்குகளில் அரைவாசிக்கு மேற்பட்ட வாக்குகளைப் பெறும் வேட்பாளர் ஜனாதிபதியாகத் தெரிவு செய்யப்படுவார்.

iv) அரைவாசிக்கு மேல் எந்தவொரு வேட்பாளரும் வாக்குகளைப் பெறாதவிடத்து ஆகக்கூடுதலான வாக்குகளை பெற்ற இருவரைத் தவிர மற்ற வேட்பாளர்கள் கணிப்பீட்டிலிருந்து நீக்கப்படுவர்.

v) கணிப்பீட்டிலிருந்து நீக்கப்பட்டவர்களின் இரண்டாம், மூன்றாம் விருப்பு வாக்குகள் முதலிருவருடைய வாக்குகளுடன் சேர்த்துக் கணிப்பிட்டுக் கூடுதலான வாக்குகளைப் பெற்றவர் ஜனாதிபதியாகத் தெரிவு செய்யப்படுவார்.

vi) இரண்டாம் மூன்றாம் விருப்பு வாக்குகளைச் சேர்த்த பின்வரும் வாக்குகள் சமமாக இருந்தால் திருவுளச்சிட்டின் மூலம் ஜனாதிபதி தெரியப்படுவார்.

**30. ஜனாதிபதியின் நிறைவேற்று அதிகாரங்கள்**

i) அமைச்சரவையின் தலைவராக கடமையாற்றுதல்

ii) அமைச்சரவையின் சட்டங்களை வழிநடத்துதல்

iii) பிரதமர் உட்பட அமைச்சர்களை நியமித்தல்

iv) அமைச்சரவையை மாற்றி அமைத்தல்

v) யுத்தத்தையும் சமாதானத்தையும் பிரகடனப்படுத்தல்

vi) அமைச்சுக்கான பொறுப்புக்களையும், திணைக்களங்களையும் பகிர்ந் தளித்தல்.

vii) அமைச்சரவை கலைக்கப்படினும் தொடர்ச்சியாக ஜனாதிபதியாக கடமையாற்றும் அதிகாரம்.

**31. ஜனாதிபதியிடம் உள்ள நீதித்துறை சார்ந்த அதிகாரங்கள்**

i) பிரதம நீதியரசர் உட்பட நீதிபதிகளை நியமனம் செய்தல்

ii) மேன்முறையீட்டு நீதிமன்ற நீதிபதிகளை நியமனம் செய்தல்

iii) நீதிச்சேவை ஆணைக்குழுவை நியமித்தல்

iv) எந்தவொரு நீதிமன்றத்தாலும் வழங்கப்பட்ட தீர்ப்பை முற்றாக நீக்குவதற்கோ அல்லது பகுதியளவில் குறைப்பதற்கோ அல்லது தண்டனையை ஒத்திவைப்பதற்கோ அதிகாரம் உண்டு.

v) பறிமுதல் செய்யப்பட்ட சொத்தை பகுதியளவிலோ அல்லது முழுவதையுமோ திருப்பி வழங்குவதற்கான அதிகாரம் உண்டு.

**32. ஜனாதிபதியினால் வழங்கப்படும் நியமனங்கள்**

i) வெளிநாட்டு தூதுவர்கள், ஆணையாளர்கள் மற்றும் பிரதிநிதிகளை நியமனம் செய்தல்.

ii) பல்கலைக்கழக மானியங்கள் ஆணைக்குழுவிற்கான தலைவர், அங்கத்தவர்களையும் பல்கலைக்கழகங்களுக்கான வேந்தர்கள், துணைவேந்தர்களையும் நியமனம் செய்தல்.

iii) முப்படைத் தளபதியையும், பொலிஸ்மா அதிபரையும் நியமனம் செய்தல்.

iv) கணக்காளர் நாயகம், தேர்தல் ஆணையாளர், அமைச்சுக்களின் செயலாளர்களை நியமித்தல்.

v) மாகாண ஆளுநர்களை நியமித்தல்.

**33. ஜனாதிபதி பதவி வெற்றிடமாகும் சந்தர்ப்பங்கள்**

i) ஜனாதிபதி இறத்தல்

ii) ஜனாதிபதி இராஜினாமா செய்தல்

iii) ஜனாதிபதி ஏதாவது குற்றச்சாட்டின் பேரில் பதவி நீக்கப்படல்

iv) ஜனாதிபதியாகத் தெரிவு செய்யப்பட்டதிலிருந்து ஒருமாத காலத்திற்குள் பதவி ஏற்காதபோது

v) உயர் நீதிமன்றம் ஜனாதிபதி பதவிக்கு ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட்டது முறையானதல்ல என கருதும் போது

**34. பாராளுமன்றம்: முக்கிய விடயங்கள்**

i) பாராளுமன்றம் எமது நாட்டின் மீயுயர் நிறுவனமாக அதாவது ஒற்றை மன்றமாக உள்ளது.

ii) 1947 சோல்பரி யாப்புக்கு அமைய இலங்கையில் பாராளுமன்ற முறை அறிமுகமானது.

iii) 1972ம் ஆண்டு யாப்பில் காணப்பட்ட தேசிய அரசுப்பேரவை என்னும் பெயர் நீக்கப்பட்டு மீண்டும் இச்சபைக்கு 1978ம் ஆண்டு யாப்பில் பாராளுமன்றம் எனப் பெயரிடப்பட்டது.

iv) பாராளுமன்ற உறுப்பினர் எண்ணிக்கை 225ஆகும். இதில் 196 பேர் பொதுத்தேர்தல் மூலமும் 29பேர் தேசிய பட்டியல் மூலமும் தெரிவு செய்யப்படுவார்.

v) பாராளுமன்றத்தின் பதவிக்காலம் 6 வருடங்களாகும். இதற்குமேல் பதவி நீடிப்பதற்கு பாராளுமன்றத்தில் 2/3 பெரும்பாண்மையுடன் மக்கள் தீர்ப்பினையும் பெற்றுக் கொள்ள வேண்டும்.

vi) பாராளுமன்றத்தின் தலைவர் சபாநாயகர் ஆவார். இவரை பாராளு மன்ற உறுப்பினர்களிலிருந்து ஏனைய உறுப்பினர்கள் தெரிவு செய்வர்.

vii) பாராளுமன்றத்தின் மிக முக்கியமான ஊழியர் "செயலாளர் நாயகம்" ஆவார் இவரை ஜனாதிபதியே நியமிப்பர்.

viii) பாராளுமன்றத்தில் ஆளும்கட்சி, எதிர்க்கட்சி என்னும் இருபிரிவினர் காணப்படுவார்கள்.


பழைய பாராளுமன்றம்


உச்ச நீதிமன்றம்


புதிய பாராளுமன்றம்


ஜனாதிபதி மாளிகை

## 35. பாராளுமன்றத்தின் பணிகள்

i) நாட்டுக்கு தேவையான சட்டங்களை நிறைவேற்றுதல்

ii) வருடாந்த நடைமுறைச் சட்டங்களை அங்கீகரித்தல்

iii) நாட்டின் பொதுநிதியை கட்டுப்படுத்தல்

## 36. பாராளுமன்றம் கலைக்கப்படும் சந்தர்ப்பங்கள்

i) அமைச்சரவையில் சமர்ப்பிக்கப்பட்ட சட்டமூலமொன்று நிறை வேற்றப்படாத சந்தர்ப்பத்தில் அமைச்சரவை கலைக்கப்பட்டு பாராளு மன்றமும் கலைக்கப்படும்.

ii) நாட்டின் தேசிய நலனையும் முன்னேற்றத்தையும் கருத்திற்கொண்டு ஜனாதிபதி பாராளுமன்றத்தை கலைக்கலாம் ஆனால் பாராளுமன்றம் ஒருவருட காலத்தை பூர்த்தி செய்திருக்க வேண்டும்.

**37. ஜனாதிபதியின் பாராளுமன்றம் சார்ந்த அதிகாரங்கள்**

i) பாராளுமன்ற முதலாவது கூட்டத்திற்கு தலைமை தாங்குதல்

ii) பாராளுமன்ற செயலாளர் நாயகத்தை நியமித்தல்

iii) நாட்டின் நலன் கருதி பாராளுமன்றத்தை கலைத்தல்

iv) பாராளுமன்றத்தை ஒத்தி வைத்தல்

v) பாராளுமன்ற கூட்டத்தொடர் ஆரம்பமாகையில் அரசு விஞ்ஞாபனத்தை வெளியிடுதல்.

**38. அமைச்சரவை: முக்கிய விடயங்கள்**

i) ஜனாதிபதி, பிரதமர், ஏனைய அமைச்சர்கள் ஆகியோரை உள்ளடக்கியதே அமைச்சரவை ஆகும்.

ii) அமைச்சரவையின் பதவிக்காலம் 06 வருடங்கள் ஆகும்.

iii) ஜனாதிபதியே அமைச்சரவையின் தலைவராவார்.

iv) பாராளுமன்றத்தில் உச்சளவு நம்பிக்கையை பெற்றவர் என ஜனாதிபதியினால் கருதப்படுவர் பிரதமராக நியமிக்கப்படுவார்.

v) இலங்கையின் முதன்முதலாக பிரதமர் தலைமையிலான அமைச்சரவை முறை சோல்பரி யாப்பிலேயே அறிமுகப்படுத்தப்பட்டது.

vi) அமைச்சரவையின் செயற்பாடுகள்

- பாராளுமன்றம் இயற்றும் சட்டங்களை நடைமுறைப்படுத்துதல்
- அமைச்சரவைக்கான வரவு செலவு திட்டத்தை தயாரித்தல்
- இடைக்கால வரவு செலவுத்திட்டம் தயாரித்தல்
- பல்வேறு அமைச்சுக்களின் செயற்பாடுகளை இணைத்தல்.

**39. ஜனாதிபதியின் அமைச்சரவை சார்ந்த அதிகாரங்கள்**

i) அமைச்சரவைக்கு தலைமை வகித்தல்

ii) அமைச்சரவை உள்ளடக்கத்தை தீர்மானித்தல் அதாவது அமைச்சரவையில் உள்ளோரின் எண்ணிக்கை அவர்களின் பொறுப்புக்களையே அமைச்சரவை உள்ளடக்கம் என்பர்.

iii) அமைச்சரவையை மாற்றியமைக்கும் அதிகாரம்

iv) எந்வொரு அமைச்சையும் தனது கட்டுப்பாட்டின் கீழ் வைத்திருக்கும் அதிகாரம்

v) பிரதியமைச்சர்களை நியமனம் செய்தல்

vi) செயலாளர், அமைச்சுக்களுக்கான செயலாளர் என்போரை நியமனம் செய்தல்.

**40. இலங்கையின் நீதித்துறையின் ஒழுங்கமைப்பு**

i) உயர் நீதிமன்றம்

ii) மேன் முறையீட்டு நீதிமன்றம்

iii) அடிப்படை நீதிமன்றங்கள்
- மேல் நீதிமன்றம்
- மாவட்ட நீதிமன்றம்
- குடும்ப நீதிமன்றம்
- நீதவான் நீதிமன்றம்
- ஆரம்ப நீதிமன்றம்

iv) நீதிச்சேவை ஆணைக்குழு நீதிமன்றங்களின் சுயாதீனத் தன்மையை பாதுகாக்கின்றது. இதன் தலைவராக பிரதம நீதியரசர் விளங்குவர்.

**41. உயர் நீதிமன்றம் அதிகாரங்கள்**

i) அடிப்படை மனித உரிமைகளை பாதுகாத்தல்
ii) இறுதி மேன்முறையீட்டு நீதிமன்றமாக செயற்படுதல்
iii) தேர்தல் முறையீட்டு மனுக்களை விசாரணை செய்தல்
iv) பாராளுமன்ற சிறப்புரிமையை பாதுகாக்கும் அதிகாரம்
v) சட்ட மூலத்தின் இயைபாக்கம் தொடர்பான அதிகாரம்

**42. இணக்க சபை**

i) கிராம மட்டத்தில் இருபகுதியினருக்கிடையில் ஏற்படும் பிணக்குகளை அல்லது சிறு தகராறுகளை தீர்த்துக்கொள்ள அல்லது சமரசம் செய்துவைக்கும் நிறுவனமே இணக்கசபை ஆகும்.

ii) இணக்க சபை செயற்படுவதால் கிடைக்கும் நன்மைகள்
- நீதிமன்றங்களில் செலவிடப்படும் பணம், நேரம் தவிர்க்கப்படும்
- இரு சாராரையும் நேரடியாக கலந்துரையாட தூண்டுவதால் வைராக் கியம், கோபம் என்பன தொடராமல் இருக்க உதவுதல்
- நீதிமன்ற சுமைகளை குறைக்க முடிதல்
- கிராமத்தவரிடையே புரிந்துணர்வு, சமாதானம் போன்ற நல்லெண் ணங்களை வளர்க்க முடிதல்.

**43. மாகாணசபை அரசாங்க முறை**

i) 1978ம் ஆண்டு அரசியல் யாப்பில் 1987ல் மேற்கொள்ளப்பட்ட 13வது திருத்தத்தின்படி மாகாண சபை அரசாங்கமுறை உருவாக்கப்பட்டது.

ii) நிர்வாக அதிகாரத்தைப் பரவலாக்கல் செய்வதே மாகாணசபையின் அடிப்படை நோக்கமாகும்.

iii) ஒவ்வொரு மாகாணங்களுக்கும் ஒவ்வொரு சபை என்ற அடிப்படையில் ஒன்பது மாகாணசபைகள் தற்போது செயற்படுகின்றது.

iv) மாகாணசபைக்கான பதவிக்காலம் 05 வருடங்களாகும்.

v) மாகாண நிர்வாகத்துறைக்கு பொறுப்பாக ஆளுநரும் முதலமைச்சரை தலைவராக கொண்ட அமைச்சரவையும் காணப்படும்.

vi) மாகாணசபைத் தேர்தலில் பெரும்பான்மை வாக்குகளைப் பெற்ற கட்சியிலிருந்து முதலமைச்சர் தெரிவு செய்யப்படுவர்.

vii) மகாணசபை முறையின் அனுகூலங்கள்

- பிரதேச அபிவிருத்தி தொடர்பாக அதிக அக்கறை காட்டல்.
- பிரதேசத்திலுள்ள மனித பௌதீக வளங்களை அதிகளவில் பயன்படுத்தல்.
- சுதேச மொழியை பயன்படுத்த முடிகின்றமை.

viii) மாகாணசபை முறையின் பிரதிகூலங்கள்
- இலங்கை போன்ற சிறிய நாட்டின் நிர்வாக நடவடிக்கைகளுக்கு அதிக செலவு ஏற்படுதல்.
- முந்திய அரசிற்கும் மாகாணசபைக்குமிடையே செயற்பாடுகளில் பிரச்சினைகள் ஏற்படுதல்.
- பொறுப்புக்களை நிராகரிப்பதற்கு வாய்ப்புக்கள் ஏற்படுதல்.

## 44. உள்ளூராட்சி மன்றங்கள்

i) மாநகரசபை (18), நகரசபை (42), பிரதேசசபை (270) போன்றவற்றை உள்ளடக்கியதே உள்ளூராட்சி மன்றங்கள் ஆகும்.

ii) மாநகரசபை, நகரசபையின் பணிகள் வருமாறு
வீதிகளை அமைத்தல், நீர் விநியோகம் செய்தல், கழிவகற்றல், நூல் நிலையங்களை அமைத்தல், சுகாதார சேவை வழங்குதல்.

iii) பிரதேச சபையின் பணிகள் வருமாறு
- சமய அடிப்படையிலான வைபவங்களை ஒழுங்கு செய்தல்.
- இலக்கிய கலாச்சாரம் தொடர்பான வைபவங்களை ஒழுங்கு செய்தல்.
- சுகாதார சுகநலன் சார்ந்த வசதிகளை வழங்குதல்.
- பிரதேச விளையாட்டு துறையை மேம்படுத்தல்.

உள்ளூராட்சி மன்றங்களின் அதிகாரப் பரவலாக்கல்




**சுதந்திரத்தின் பின்னர் அபிவிருத்திக்காக மேற்கொள்ளப்பட்ட செயற்பாடுகள்.**

## 45. கல்வி அபிவிருத்திக்காக மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள்

i) சுதந்திரத்திற்கு முன்னர் கட்டணம் அறவிடும் ஆங்கிலக்கல்வி பாடசாலைகள், கட்டணம் அறவிடாத சிங்கள, மற்றும் தமிழ் பாடசாலைகள் என்ற இரட்டைமுறைக் கல்வி காணப்பட்டது.

ii) 1945ல் C.W.W. கன்னங்கராவின் அறிக்கையின்படி ஆரம்பக்கல்வி முதல் பல்கலைக்கழகம் வரை இலவசக்கல்வி வசதிகள் ஏற்படுத்தப் பட்டன.

iii) 1950ல் பாடசாலை மாணவர்களுக்கான இலவசமாக மதிய உணவு வழங்கும் நடைமுறை அறிமுகப்படுத்தப்பட்டது.

iv) 1951ல் 6 - 14 வயது தொகுதியிலுள்ள சிறார்களுக்கு பாடசாலை வரவு கட்டாயமாக்கப்பட்டது.

v) 1955ல் S.W.R.D பண்டாரநாயக்காவின் அரசாங்கம் கல்விவளர்ச்சியில் விசேட கவனம் செலுத்தியது.
- சொந்த மொழியில் கல்வியைப் பெற்றுக்கொள்ளல்
- வறுமையான மாணவர்களுக்கு புலமைப்பரிசில் வழங்கல்

vi) 1962ல் அரச உதவி பெறும் பாடசாலைகள் அரச உடமையாக்கப் பட்டன.

vii) 1960 - 1970 தசாப்தத்தில் கல்வித்துறையில் ஏற்பட்ட புதிய மாற்றங்கள்
- கனிஷ்ட பல்கலைக்கழகங்கள் ஆரம்பம்
- பௌத்த பிக்குகளுக்கான தனியான பல்கலைக்கழகமாக "புத்த சிராவகதர்ம பீடம்" ஆரம்பிக்கப்பட்டது.

viii) 1980ல் இலவச பாடநூல் வழங்கும் திட்டமும் 1993ல் இலவச சீருடை வழங்கும் திட்டமும் ஆரம்பிக்கப்பட்டது.

## 46. உயர் கல்வி அபிவிருத்தி

i) 1921ல் கொழும்பு பல்கலைக்கழக கல்லூரி ஆரம்பிக்கப்பட்டது.
ii) 1942ல் இலங்கைப் பல்கலைக்கழகம் ஆரம்பிக்கப்பட்டது.
iii) 1957ல் காலி தொழிநுட்பக் கல்லூரி ஆரம்பிக்கப்பட்டது.
iv) 1967ல் இலங்கைப் பல்கலைக்கழகம் சுதந்திரமான பல்கலைக் கழகமாக மாற்றப்பட்டது.
v) 1972ல் கட்டுப்பெத்தை பல்கலைக்கழகம் ஆரம்பிக்கப்பட்டது.
vi) 1974ல் யாழ்ப்பாண பல்கலைக்கழகம் ஆரம்பிக்கப்பட்டது.
vii) 1980ல் திறந்த பல்கலைக்கழகம் ஆரம்பிக்கப்பட்டது.
viii) 1984ல் மாத்தறையில் ருகுண பல்கலைக்கழகம் ஆரம்பிக்கப்பட்டது.

## 47. நெற் பயிர்ச்செய்கையின் விருத்திக்காக மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள்

- இலங்கை சுதந்திரமடையும்போது உணவுப் பொருட்களை இறக்குமதி செய்யும் நிலையிலும், மூலப்பொருட்களை ஏற்றுமதி செய்யும் நிலை யிலும் காணப்பட்டது.

i) நெல்லுக்கான உத்தரவாத விலைமுறை அறிமுகப்படுத்தப்பட்டது.
**உ+ம்:** ஒரு புசல் நெல்லின் உத்தரவாத விலை 1948ல் ரூபா 8 ஆகவும், 1952ல் 12 ஆகவும் 1977ல் ரூபா 40 ஆகவும் இருந்தது.

ii) 1952ல் பதலகொடவில் லபுதூவ, மஹஇலுப்பள்ளம, போம்புவல, ஹிங்குராங்கொட முதலிய இடங்களிலும் ஆராய்ச்சி நிலையங்கள் நிறுவப்பட்டன.

iii) புதிய நெல்லினங்கள் அறிமுகப்படுத்தப்பட்டமை
**உ+ம்:** பிலிப்பைன்ஸ் சர்வதேச நெல் ஆராய்ச்சி நிலையம் அறிமுகம் செய்த IR எனப்பட்ட நெல்லினம் இலங்கையிலும் அறிமுகப் படுத்தப்பட்டது.

iv) விவசாயக் கடனுதவிகள் வழங்கப்பட்டன. கமநல சேவைகள் திணைக்களம், வங்கிகள் மூலம் வறிய விவசாயிகளுக்கு கடனுதவிகள் வழங்கப்பட்டன.

v) புதிய விவசாயக் காணிகள் வழங்கும் திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது.
உ+ம்:
1) 1931ல் விவசாய அமைச்சராக இருந்த S.D. சேனநாயக்கா விவசாய குடியேற்றத்திட்டங்களை அறிமுகப்படுத்தி காணிகளை விவசாயிகளுக்கு பகிர்ந்தளித்தமை.
2) காணி அபிவிருத்திச் சட்டத்தினை அறிமுகப்படுத்தி காணியற்ற விவசாயிகளுக்கு நிலம் வழங்கியமை.

vi) புதிய நீர்ப்பாசனத்திட்டங்கள், நீர் முகாமைத்துவம் அறிமுகமானது.
உ-ம்: 1) 1949ல் கல்லோயா அபிவிருத்தித்திட்டம்.
2) 1956ல் உடவளவை அபிவிருத்தித்திட்டம்.

## 48. மகாவலி அபிவிருத்தித்திட்டம்

i) 1961ல் சிறிமாவின் ஆட்சிக்காலத்தில் மகாவலி அபிவிருத்திட்டம் முன்வைக்கப்பட்டது.

ii) 1970ல் மகாவலித் திட்டத்தின் முதற்கட்டமாக பொல்கொல்லையில் நதி திசை திருப்பப்பட்டது.

iii) ஆரம்பத்தில் 30 வருடங்களில் முடிப்பதற்குத் திட்டமிடப்பட்டிருந்த போதிலும் J.R. ஜெயவர்த்தன அரசுகாலத்தில் அமைச்சர் காமினி திசாநாயக்காவினால் இத்திட்டம் 6 ஆண்டுகளாக குறைக்கப்பட்டு துரித மகாவலி அபிவிருத்தித் திட்டம் எனும் பெயரில் முன்னெடுக்கப் பட்டது.

iv) துரித மகாவலி அபிவிருத்தித்திட்டத்தினால் கிடைத்த நன்மைகள்
- விவசாய விளைநிலங்கள் அதிகரித்தது.
- விவசாயக் குடும்பங்கள் குடியமர்த்தப்பட்டமை.
- புதிய நகர்கள் நிர்மாணிக்கப்பட்டமை.

## 49. சிறு ஏற்றுமதி பயிர்ச்செய்கை அபிவிருத்தி

i) பாரம்பரிய ஏற்றுமதிப் பயிர்ச்செய்கை மூலம் கிடைத்த வருமானம் போதுமானதாக இல்லாததால் பாரம்பரியமற்ற சிறு ஏற்றுமதிப் பயிர்ச்செய்கைமீது கவனம் செலுத்தப்பட்டது.

ii) சிறு ஏற்றுமதிப் பயிர்களாக கோப்பி, கொக்கோ, ஏலம், சாதிக்காய், கராம்பு, மிளகு, சிங்கோனா, கறுவா முதலியன அபிவிருத்தி செய்யப்பட்டன.

iii) சிறு ஏற்றுமதிப் பயிர்களை மேம்படுத்தும் நோக்கில் "சிறு ஏற்றுமதிப் பயிர்த் திணைக்களம்" உருவாக்கப்பட்டது.

iv) 1972ல் மாத்தளையில் சிறு ஏற்றுமதிப் பயிர் ஆராய்ச்சி நிலையம் நிறுவப்பட்டது. பின்னர் குண்டகசாலை, தெல்பிட்டிய, நில்லம்ப, மாபலான, நாரம்மல ஆகிய இடங்களிலும் ஆராய்ச்சி நிலையங்கள் நிறுவப்பட்டன.

v) 1972 - 1976 ஐந்தாண்டுத் திட்டம் மூலம் மரமுந்திரிகை, சோளம், சூரியகாந்தி முதலியனவும் உற்பத்தி செய்யப்பட்டன.

## 50. மீனவக் கைத்தொழிலின் அபிவிருத்திக்கு மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள்

i) 1964ல் மீன்பிடிக் கூட்டுத்தாபனம் ஆரம்பிக்கப்பட்டது. இதன்மூலம் பின்வரும் நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன.

- மீன்களைக் கொள்வனவு செய்தல், களஞ்சியப்படுத்தல், விநியோகித்தல்.
- மீன்பிடி உபகரணங்களைக் கொள்வனவு செய்வதற்குக் கடன்வசதி செய்து கொடுத்தல்.
- மீனவர் அபிவிருத்தி உத்தியோகஸ்தர்களை சேவையில் அமர்த்துதல்.
- இறால், சிங்கஇறால், கடலட்டை என்பவற்றின் மூலம் ஏற்றுமதி வருவாயை பெருக்குவதில் கவனம் செலுத்தப்பட்டது.
- கணணாடி இழைப்படகுகள் (பைபர் கிளாஸ்) அறிமுகம் செய்யப் பட்டன. அத்துடன் தோணிகள், வள்ளங்கள், படகுகளுக்கான நிதியுதவி அதிகரிக்கப்பட்டது.

ii) 1972ல் இலங்கை மீன்பிடித்துறைமுகக் கூட்டுத்தாபனம் நிறுவப்பட்டது. இதன் மூலம் மீன்பிடித்துறைமுகம் நிர்மானித்தல், முகாமைத்துவ அடிப்படை வசதிகள் ஏற்படுத்தப்பட்டன.

iii) 1952ல் மீன்பிடி திணைக்களம் நன்னீர் மீன்பிடி வளர்ச்சி நிலையங் களை உள்நாட்டில் நிறுவியமையால் நன்னீர் மீன்பிடியும் வளர்ச்சி பெற்றது.

## 51. விலங்கு வேளாண்மை அபிவிருத்தி

i) 1948 - 1955 ஐந்தாண்டு திட்டத்திற்கு ஏற்ப பால் உற்பத்தியை அதிகரிப்பதாலும் இறக்குமதியை கட்டுப்படுத்துவதிலும் கவனம் செலுத்தப்பட்டது.

ii) 1967ல் தேசிய பால் சபை உருவாக்கப்பட்டது.

iii) அம்பேவல் பால் உற்பத்தி நிலையம், பொலநறுவை கட்டிப்பால் உற்பத்தி ஆலை என்பன நிறுவப்பட்டு பால் உற்பத்தி அதிகரிப்பதற் கான நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது.

iv) 1973ல் கால்நடை வளங்கள் சபை நிறுவப்பட்டதுடன் அது விவசாயத் திணைக்களத்துடன் இணைந்து செயற்பட்டது.

## 52. சுதந்திரத்தின் பின்னர் பெருந்தோட்டத்துறை

i) இலங்கை சுதந்திரமடைந்த நேரத்தில் பெருந்தோட்டத்துறை பொரு ளாதாரத்தில் முக்கியமான பங்கினை வகித்தது.

ii) பெருந்தோட்டங்கள் அதிகளவில் வெளிநாட்டுக் கம்பனிகளுக்கு உரித்துடையனவாக இருந்தது. இதனால் அக்கம்பனிகளுக்கே இலாபமும் சென்றடைந்தது.

iii) 1972ல் இலங்கை அரசு பிறப்பித்த காணி உச்சவரம்புச் சட்டத்தால் ஒருவர் வைத்திருக்கக் கூடிய வயல்நிலம் 25 ஏக்கர் (10 ஹெக்டேயர்)

எனவும், மேட்டு நிலம் 50 ஏக்கர் (20 ஹெக்டேயர்) எனவும் வரையறுக்கப்பட்டதுடன் அதற்கு மேற்பட்ட காணிகள் அரசாங் கத்தினால் சுவீகரிக்கப்பட்டன.

iv) 1972 மற்றும் 1975 நிலச் சீர்திருத்தங்களின் கீழ் 419.101 ஹெக்டேயர் நிலம் தேசிய மயமாக்கப்பட்டது. 1976 அளவில் பெறுபேறுகள் பின்வருமாறு இருந்தன.

1) பொதுக்கம்பனிகளுக்கு சொந்தமான பெருந்தோட்டங்களில் 62% அரச துறைக்குச் சொந்தமானது.

2) 28% அரச உதவி வழங்கும் கூட்டுறவுப் பண்ணைகள் அமைத்து குத்தகைக்கு விடப்பட்டது.

3) 10% நிலம் மட்டுமே விவசாயிகளிடையே சிறியளவில் பிரித்துக் கொடுப்பதற்காக ஒதுக்கப்பட்டது.

4) அரச உடமையாக்கப்பட்ட பெருந்தோட்டங்களின் முகாமைத்துவ நிர்வாகங்கள் பின்வருவனவற்றிடம் ஒப்படைக்கப்பட்டன.

- 1958ல் நிறுவப்பட்ட இலங்கை அரச பெருந்தோட்டக் கூட்டுத்தாபனம்
- 1976ல் நிறுவப்பட்ட மலைநாட்டு பெருந்தோட்ட அபிவிருத்திச்சபை (உசவசம)
- 1976ல் நிறுவப்பட்ட மக்கள் தோட்ட அபிவிருத்திச் சபை (ஜனவசம)

v) 1977ல் மலைநாட்டு பெருந்தோட்ட அபிவிருத்திச்சபையின் வினைத் திறனின்மை காரணமாக ஏனைய இரண்டிற்குமிடையில் நிர்வாகங்கள் மீளப்பங்கிடப்பட்டன.

vi) உலக சந்தையில் மொத்தத் தேயிலை ஏற்றுமதியில் 1950ல் 34% மும் 1960ல் 40% மும் இலங்கையின் பங்களிப்பாகக் காணப்பட்டது.

vii) 1958ல் அரச தேயிலை மீள்நடுகை உதவுதொகைத் திட்டமொன்றினை அறிமுகப்படுத்தியது.

## 53. 1940 களிலிருந்து இறப்பர் துறையில் இடம்பெற்ற முக்கிய நிகழ்வுகள்

i) இரண்டாம் உலகப் போர் காலத்தில் ஒரு மூலப்பொருள் என்ற வகையில் இறப்பரின் உபாய முக்கியத்துவம் ஏற்றுக் கொள்ளப்பட்டதால் கைத்தொழில் நாடுகள் செயற்கை இறப்பரினை உற்பத்தி செய்ததால் இயற்கை இறப்பரின் மதிப்பு குறைவடைந்தது.

ii) 1952ல் சீனாவுடன் செய்து கொண்ட அரிசி இறப்பர் இருபக்க வர்த்தக உடன்படிக்கை மூலம் இலங்கையின் இறப்பருக்கான நிலையான சந்தை வாய்ப்பை பெற்றுக்கொள்ள முடிந்தது.

iii) 1977ல் சர்வதேச இயற்கை இறப்பர் உடன்படிக்கையில் கைச்சாத்திட்டதன் மூலம் இலங்கை நன்மையடைந்தது.

iv) மீள் பயிரிடல் மற்றும் புதிய பயிரிடுதல்களை மேம்படுத்துவதற்காக உள்நாட்டு, வெளிநாட்டு நிதிகள் இரண்டினையும் பயன்படுத்தி பல உதவிக் கொடுப்பனவுகள் நடைமுறைப்படுத்தப்பட்டன.

## 54. அரசவுடமைக் கொள்கை : முக்கிய அம்சங்கள்

i) பொதுமக்களுக்கு அதிக நலன்களைப் பெற்றுக் கொள்ளவும்,

ஊழியர்களுக்கு அதிக நலன்களை வழங்குவதற்கும் தனியார்துறை அரச மயமாக்கப்பட்டது.

ii) 1956ல் S.W.R.D. பண்டாரநாயக்கா ஆட்சியில் இலங்கைத் துறைமுகமும் தனியார் போக்குவரத்துத்துறையும் அரச மயமாக்கப்பட்டன.

iii) ஸ்ரீமா பண்டாரநாயக்க காலத்தில் அரசவுடைமைக் கொள்கை சிறப்பாக கடைப்பிடிக்கப்பட்டது.

1) 1960ல் மக்கள் வங்கி ஆரம்பிக்கப்பட்டமை.
2) இலங்கை வங்கி அரச உடமையாக்கப்பட்டது.
3) காப்புறுதித் துறையும் அரசமயமாக்கப்பட்டு காப்புறுதிக் கூட்டுத் தாபனம் உருவாக்கப்பட்டது.
4) மேற்கு நாட்டுக் கம்பனிகளின் ஆதிக்கத்திலிருந்த பெற்றோலிய விநியோகம் இலங்கைப் பெற்றோலியக் கூட்டுத்தாபனத்தின் உரிமையாக்கப்பட்டது.
5) வெளிநாட்டு கம்பனிகளின் உரிமையாகக் காணப்பட்ட பெருந் தோட்டங்கள் அரச உடமையாக்கப்பட்டது.

**55. கைத்தொழில் துறை அபிவிருத்தி**

i) 1952ல் உலக வங்கி, அரச கைத்தொழில்துறை ஆணைக்குழு என்பவற்றின் அறிக்கை மூலம் அரச கைத்தொழில் கொள்கை உருவாக்கப்பட்டது.

1) உலகவங்கியின் அறிக்கையில் "சிறிய, நடுத்தர கைத்தொழில் களை" மேம்படுத்துமாறு சுட்டிக் காட்டப்பட்டது.
2) அரச கைத்தொழில்துறை ஆணைக்குழுவின் அறிக்கையில் அரச திணைக்களங்களை கூட்டுத்தாபனங்களாக மாற்றும்படி விதந்து ரைத்தது.

ii) 1955ல் அரச அனுசரணையளிக்கும் கூட்டுத்தாபனங்கள் சட்டத்தினை அரசு இயற்றியது.

iii) 1957ல் எந்தவொரு கைத்தொழிலையும் ஏற்படுத்தவும், கொண்டு நடத்தவும் அரசுக்கு அதிகாரமளிக்கும் அரச கைத்தொழில் கூட்டுத்தாபனச் சட்டம் இயற்றப்பட்டது.

iv) 1959ல் முதலாவது கைத்தொழிற்பேட்டை எக்கலவில் நிறுவப்பட்டது.

v) 1959 - 1968 பத்தாண்டுத் திட்டம் மூலம் பாரிய கைத்தொழில்களும், சிறுகைத்தொழில்களும் வளர்ச்சி பெற்றது.

vi) நாட்டின் பல பாகங்களிலும் கூட்டுத்தாபனங்களால் பல கைத்தொழிற் சாலைகள் நிறுவப்பட்டது.

**உ+ம் :** பீங்கான், ரயர், கடதாசி, சீமெந்து, இரும்பு, உருக்கு, ஒட்டுப்பலகை, இரசாயனப் பொருட்கள், புடவை, தோல் பொருட்கள் முதலிய தொழிற்சாலைகள்.

vii) 1970 - 1977 காலப் பகுதியில் கைத்தொழில்களில் அரசாங்கமே பெருமளவில் ஈடுபட்டது. ஆயினும் 1977ன் பின்னர் தனியார் துறைக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது.

viii) 1978ல் கொழும்பு பெரும்பாக பொருளாதார ஆணைக்குழு நிறுவப் பட்டது. இதன்கீழ் முதலாவது சுதந்திர வர்த்தக வலயமாக

கட்டுநாயக்காவும் இரண்டாவதாக பியகமவும் மூன்றாவதாக கொக்கலவும் நிறுவப்பட்டது.

**56. சுகாதார சேவையில் ஏற்பட்ட முன்னேற்றம்**

i) சுதந்திரத்திற்குப் பின்னர் நகர்ப் புறங்களைப் போலவே கிராமப் புறங்களிலும் சுகாதார சேவை விரிவுபடுத்தப்பட்டது.

ii) நோய்த்தடை நலன் கவனிப்பின் முக்கிய நிகழ்வுகள்
   1) 1947ல் யானைக்கால் நோய் ஒழிப்புத்திட்டம்
   2) 1949ல் காசநோய் தடுப்பு மருந்தான பி.சி.ஜி. அறிமுகம்.
   3) 1961ல் தொண்டைக்கரப்பான், குக்கல், சின்னமுத்து என்பவற்றிற் கான தடுப்பு மருந்து அறிமுகம்
   4) 1962ல் போலியோ சொட்டுமருந்து அறிமுகம்
   5) 1965ல் பெரியம்மை நோய் ஒழிப்பு
   6) 1966ல் முதல் முறையாக டெங்குக் காய்ச்சல் ஏற்பட்டமை. அந்நோய் ஒழிப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டது.
   7) 1969ல் கர்ப்பிணித் தாய்மாருக்கான ஏற்புவலி தடைமருந்து அறிமுகம்
   8) 1972ல் குடும்ப சுகாதாரப் பிரிவு ஆரம்பிக்கப்பட்டு அதன் மூலம் தாய் சேய் நலன், குடும்பத்திட்டம், சுகாதாரக் கல்வி போன்றனவும் வளர்ச்சி கண்டது.

iii) இதனால் கூடிய ஆயுள் எதிர்பார்ப்பும், குறைந்த சிசுமரண வீதமும் இலங்கையில் ஏற்பட காரணமாகிவிட்டது.

**57. போக்குவரத்துத் துறையில் ஏற்பட்ட முன்னேற்றம்**

i) பிரித்தானியர் காலத்திலேயே பெருந்தெருக்கள், புகையிரத வீதிகள், துறைமுகங்கள் என்பன வளர்ச்சியடைந்து காணப்பட்டபோதிலும் சுதந்திரத்தின் பின்னர் போக்குவரத்துச் சேவைக்கான தேவை அதிகரித்துக் காணப்பட்டமையால் போக்குவரத்துத் துறையானது மேலும் வளர்ச்சி கண்டது.

ii) கிராமங்களையும் நகரங்களையும் பெருந்தெருக்கள் தொடர்புபடுத்தின. 1978ல் அறிமுகப்படுத்தப்பட்ட திறந்த பொருளாதாரக் கொள்கையின் கீழ் இலங்கை போக்குவரத்துச் சபையுடன் தனியார் பஸ்வண்டிகளும் சேவையில் ஈடுபடுத்தப்பட்டன.

iii) நவீன வசதி வாய்ப்புகளுடன் கூடிய புகையிரத வண்டிகள் இறக்குமதி செய்யப்பட்டதுடன் சொகுசு ஆசன வசதி, பார்வையிடும் வசதி போன்றவற்றுடன் நகரங்களுக்கிடையிலான துரித புகையிரத சேவை ஆரம்பிக்கப்பட்டுள்ளது.

iv) 1970ல் துறைமுக அதிகார சபை உருவாக்கப்பட்டதைத் தொடர்ந்து துறைமுக அபிவிருத்தி ஏற்பட்டது. கப்பல் நங்கூரத் தளங்கள் 16, மற்றும் எலிசபெத் இறங்குதுறை, பண்டாரநாயக்க இறங்குதுறை போன்றன அபிவிருத்தி செய்யப்பட்டது.

**58. செய்தித் தொடர்பாடலில் ஏற்பட்ட முன்னேற்றம்**

i) இலங்கையின் தொடர்பாடல் சேவைகளாக தபால், தந்தி, தொலைபேசி, வானொலி, தொலைக்காட்சி போன்றன அடங்குகின்றன.

ii) தபாற்சேவை, தந்திச் சேவைகள் சுதந்திரத்தின் பின்னரே வளர்ச்சியடைந்தது. 1977ன் பின்னர் முகவர் அஞ்சல் நிலையங்கள் அறிமுகப்படுத்தப்பட்டது.

iii) தொலைபேசி சேவைகள் விரிவுபடுத்தப்பட்டன. 1963ல் ரெலக்ஸ் சேவையும் 1966ல் நேரடித் தொலைபேசி வசதியும் ஏற்படுத்தப்பட்டது.

iv) வானொலி சேவை வளர்ச்சியுற்றன. 1949ல் வானொலித் திணைக்களம் உருவாக்கப்பட்டது. 1967ல் இலங்கை ஒலிபரப்புக் கூட்டுத்தாபனம் ஆரம்பிக்கப்பட்டது. 1980களின் பின்னர் F.M. அலைவரிசை சேவையும் அறிமுகமானது.

**இலங்கையை ஆட்சி செய்த பிரித்தானிய ஆளுநர்கள்**

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பிரட்றிக் நோத் | – | 1798 | – 1805 |
| 2. | சேர் தோமஸ் மெயிற்லன் | – | 1805 | – 1811 |
| 3. | சேர் றோபேட் பிரவுண்றிக் | – | 1812 | – 1820 |
| 4. | சேர் எட்வேட் பாண்ஸ் | – | 1820 | – 1822 |
| 5. | சேர் எட்வேட் பஜற் | – | 1822 | – 1822 |
| 6. | சேர் எட்வெட் பாண்ஸ் | – | 1822 | – 1831 |
| 7. | சேர் சு. வில்மட் ஹோட்டன் | – | 1831 | – 1837 |
| 8. | து.யு. ஸ்ரிவாட் மெக்கன்சி | – | 1837 | – 1841 |
| 9. | சேர் கொலன் கம்பல் | – | 1841 | – 1847 |
| 10. | ரொறிங்ரன் பிரபு | – | 1847 | – 1850 |
| 11. | சேர் ஜோச் அன்டர்சன் | – | 1850 | – 1855 |
| 12. | சேர் ஹென்றிவாட் | – | 1855 | – 1860 |
| 13. | சேர் சான்ஸ்மெக்காதி | – | 1860 | – 1863 |
| 14. | சேர் ஹேர்குலிஸ் றொபின்சன் | – | 1865 | – 1872 |
| 15. | சேர் விலியம் கிரகொரி | – | 1872 | – 1877 |
| 16. | சேர் ஜேம்ஸ் லொங்டன் | – | 1877 | – 1883 |
| 17. | சேர் ஆதர் ஹமில்டன் கோடன் | – | 1877 | – 1883 |
| 18. | சேர் ஆதர் ஹவ்லொக் | – | 1890 | – 1895 |
| 19. | சேர் யோசப் வெஸ்ற் றிச்வே | – | 1895 | – 1903 |
| 20. | சேர் ஹென்றி பிளாக் | – | 1903 | – 1907 |
| 21. | சேர் ஹென்றி மக்கலம் | – | 1907 | – 1913 |
| 22. | சேர் றொபேட் சாமேர்ஸ் | – | 1907 | – 1913 |
| 23. | சேர் யோண் அன்டசன் | – | 1916 | – 1918 |
| 24. | சேர் விலியம் மனிங் | – | 1918 | – 1925 |
| 25. | சேர் கூகிளிபேட் | – | 1925 | – 1927 |
| 26. | சேர் ஹென்றி ஸ்ரான்லி | – | 1927 | – 1931 |
| 27. | சேர் கிறேம் தொம்சன் | – | 1931 | – 1933 |
| 28. | சேர் றெஜினோல்ட் ஸ்ரப்ஸ் | – | 1933 | – 1937 |
| 29. | சேர் அன்றூ கல்டிகொட் | – | 1937 | – 1944 |
| 30. | சேர் ஹென்றி மொங்மேசன்மூர் | – | 1944 | – 1948 |

## உசாத்துணை நூல்கள்...


1. ஆலாலசுந்தரம் (2002), ஜப்பான் வரலாறு
   (2002), சீன வரலாறு
2. இளையதம்பி மு, (1958), உலக சரித்திரம் (1500 - 1948).
3. கலாநிதி நாதன், எஸ். கே. எஸ், (2006), சர்வதேச அரசியல்.
4. கிறான்ற், ஏ. சே, (1966), ஐரோப்பிய வரலாற்றுச் சுருக்கம்.
5. குலரத்தினம், க. சி, (1966), நோத் முதல் கோபல்லவா வரை.
6. சண்முகநாதன், ஐ, (2006), உலக வரலாறு (கற்காலம் முதல் கம்ப்யூட்டர் காலம் வரை).
7. டாக்டர் சுவாமிநாதன், ஏ, (1999), இந்திய வரலாறு (1707-1999.
8. பணிக்கர், கே. எம், (1969), ஆசியாவும் மேநாட்டு ஆதிக்கமும்.
9. மஞ்சுலேன்கோ, வி. அ, (1986), இரண்டாவது உலக யுத்தம்.
10. யோதிலிங்கம், சி. அ, (2004), இலங்கையின் அரசியல் யாப்புக்கள்.
11. ஜவஹர்லால் நேரு (2006), உலக சரித்திரம் (பாகம் - 01, 02).
12. காலசுரபி (1998, 1999, 2001), வரலாற்றுக் கழகம்
    யாழ்ப்பாணப் பல்கலைக் கழகம்.
13. சுதந்திர இலங்கையின் பொருளாதார முன்னேற்றம் (1998),
    இலங்கை மத்திய வங்கி
14. வரலாறு தரம் 11 (2007), கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.
15. Arunvhatta Chadarjee, History of Modern India (1707 - 1947)
16. Grane Brinton, John, (1967), A History of Civilization Vol II, U.S.A.
17. Grant, A.J, (1962), Europe in the 19th & 20th Centures, London.
18. Libson, E, (1957), Europe in the 19th & 20th Centuries, London.
19. Roy Chaudhry, P.C. Gandhi and Contemporaries.
20. Silva, K.M.De, (1981), History of Sri Lanka, United Kingdom.